உ

சிவமயம்

அரி ஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

# அகத்தியம்

(மூலமும் - உரையும்)



"தமிழ் வேதநாவலர்"

"வைத்தியமணி"

**சற்குரு. சித.வே. சண்முகநாத பிள்ளை**

முத்தமிழ் வேதத் திருச்சபை

தேவகோட்டை

உ

சிவமயம்

அரி ஓம் நன்ருக குரு வாழ்க குருவே துணை

# அகத்தியம்

(மூலமும் - உரையும்)

இந்நூல் ஆசிரியர்

**"தமிழ் வேதநாவலர்" சற்குரு. சித.வே. சண்முகநாத பிள்ளை**

தேவகோட்டை

இந்நூல் உரை ஆசிரியர்

திருமுறைச்செல்வர் நல்லாசிரியர்

**புலவர் கு. அப்பாராசன்**

அப்பர் அவைப்புலவர், களிமேடு, தஞ்சாவூர்

இஃது **கனடா டாக்டர் சித. ஏகப்பன் செட்டியார்** அவர்கள்

ஆர்வத்தினலும் பேரன்பினலும்

தேவகோட்டை

ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸில் பதிப்பிக்கப் பெற்றது

வெளியீடு

முத்தமிழ் வேதத் திருச்சபை

முத்தாத்தாள் நடுநிலைப் பள்ளி, வ.பெரி.மு. தெரு.

தேவகோட்டை - 630 302.

உ
சிவமயம்
அரி ஓம் நன்றுக குரு வாழ்க குருவே துணை


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அகத்தியம் |
| முதற்பதிப்பு | : | பார்த்திப ஆண்டு (2005) ஆவணி மாதம் |
| நூலாசிரியர் | : | சற்குரு. சித.வே. சண்முகநாத பிள்ளை |
| உரிமை | : | முத்தமிழ் வேதத் திருச்சபையோர், தேவகோட்டை. |
| பக்கங்கள் | : | 176 |
| வெளியீடு | : | முத்தமிழ் வேதத் திருச்சபையோர், தேவகோட்டை. |
| தாள் | : | 16 கிலோ மாப்லித்தோ |
| நூலின் அளவு | : | டெமி 1/8 |
| விலை | : | ரூ. 108 (ரூ. ЛТஅ) |
| எழுத்து | : | 12 புள்ளி |
| பைண்டிங் | : | வெல் பவுண்டு பைண்டிங் |
| கிடைக்குமிடம் | : | **Dr. SV. முருகேஷ்** R.I.M.P.A.M.I.H.<br>முத்தமிழ் வேதத் திருச்சபைத் தலைவர்<br>சித்த மருத்துவம்<br>கிணற்றுநீர் நிபுணர், புதுக்கோட்டை.<br><br>**இராம. ஆதிரெத்தினம்**<br>இணைச் செயலாளர், முத்தமிழ் வேதத் திருச்சபை<br>19, ரெகுநாதபுரம் மேற்கு, தேவகோட்டை.<br>போன் : 95+4561+270113<br><br>**உபமன்னியன் நூலகம்**<br>105/A1, கண்டதேவி ரோடு<br>தேவகோட்டை - 630 302.<br>போன் : 95+4561+309924 |
| கணினி &<br>அச்சு அமைப்பு | : | **ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸ்**<br>தேவகோட்டை - 630 302<br>போன் : 95+4561+273347<br>email : swamirajbal@hotmail.com |




உ
சிவமயம்



இந்நூல் ஆசிரியர் :

"தமிழ் வேதநாவலர்" "வைத்தியமணி"

**சற்குரு. சித.வே. சண்முகநாத பிள்ளை**

தேவகோட்டை

அரி ஓம் நன்ருக குரு வாழ்க குருவே துணை

# முன்னுரை

## அகத்தியம் (மூலமும் - உரையும்)

எம் ஞானத் தெளிவு குருவின் திருவடி என் உச்சிமேற் கொண்டு அகத்தியம் நூலிற்கு முன்னுரை எழுதுவோமாக.

அகத்தியம் என்னும் இந்நூல் ஆறு அந்தங்களில் ஒன்ருகிய கலாந்தம் என்பதாகும். யோக ஞான சாதனம் பயின்ற பெரியோர்கள் ஞான சாதனத்தால் அமைவுரும் கலையாம் வாசியின் உருவைக் கொண்டு அதன் உருவையும் ஒலியையும் முறைப்படுத்தி அது என்றென்றும் மாறுபாடற்ற நிலையில் நின்று மக்களுக்குப் பயன் அளிக்க வேண்டும் என்று கருதி உடம்பும் உயிர் வளியாம் வாசியும் உயிரும் ஆகிய மூன்ருய் நம் அகம் அமைவுற்றவாருக, எழுத்தொலிப் பொருளையும் எழுத்தொலியுருவையும் எழுத்துருவத் தன்மையையும் அமைத்துள்ளார்கள்.

நடுவுநில் லாதிவ் வுலகஞ் சரிந்து
கெடுகின்ற தெம்பெரு மானென்ன வீச
னடுவுள வங்கி யகத்திய நீ போய்
முடுகிய வைய்த்து முன்னீரென் ருனே. (கு)

அங்கி யுதயம் வளர்க்கு மகத்திய
னங்கி யுதயஞ்செய் மேல்பா லவனெடு
மங்கி யுதயஞ்செய் வடபாற் றவமுனி
யெங்கும் வளங்கொள் ளிலங்கொளி தானே. (உ)

நம் மூல முதல் குரு திருமூலர் இரண்டாம் தந்திரத்தில் மேற்கண்டவாறு இயம்புகிருர். யோக ஞானம் செய்ய முற்படுபவர்கள் இறைவனிடம் வேண்ட நடுவான அங்கி உதயத்தை அருளி நடுநிலைத் தானத்தை அருளுகிருர். குறிப்பில் குறிப்புணர வைக்கும் குறியறி சித்தர் திருமூலர் வழிவந்த எம் ஞானத் தெளிவு குரு அகத்தின் ஒலியை ஒருமுறைப்படுத்தி அங்கி உதயம் செய்து முதற்பொருளோடு ஒன்றி அகத்தின் ஒலியை ஓர்ந்து தெளிந்து அகத்திய நூல் அருளிச் செய்திருக்கிருர்கள்.

ஒலி என்பது எவ்வாறு தோன்றுகிறது என்று வெளிவளி உலவை ஒலி என்ருகும் என வெளி ஒலி இயலை இயம்புகிருர். அந்த வெளி ஒலி நம் அகத்தில் மூலாதாரம்





முதல் நாதாந்தம் ஈருக அமைந்த ஏழ் நிலையங்களில் சார்ந்து ஆறு ஆதாரங்களில் நடனம் புரிந்து ஏழாவதாகிய நாதாந்தத்தில் ஒடுங்குவதால் ஒலி ஏழு இடங்களை எல்லையாகக் கொண்டு ஒலி உருவம் எழுத்தாக வழங்குகிறது. புறத்தில் ஞாயிறு முதல் சனி வரை உள்ள ஏழின் உறழ்ச்சி கூட்டமே ஆகும். இந்த ஏழில் நம் அகத்தில் மூலாதாரம் 4 (ச) சுகவதிட்டானம் 6 (சா) மணிபூரகம் 10 (ம) அனறகதம் 12 (மஉ) விசுத்தி 16 (மசா) ஆக்ஞை 2 (உ) நாதாந்தம் 1 (க) ஆக 51 (ருமக). புறத்தில் வெளிவளியங்கியில் யவசி எழுத்தின் உறழ்ச்சியில் நாற்பத்தொன்பதாகி ஆதி அந்தமாம் நாதவிந்து கூட 51 (ருமஉ) ஆகி ஆதாரத்தமைந்திருக்கிறது என்கிருர்கள்.

அகத்திய ஒலி ஐம்பத்தொன்றும் உயிர்வளி மனோநிலை ஒன்று கூடி அகமாய் நின்றது அகப்புறமாகி மனோநிலை வளியுற வாக்கு தோன்றுகிறது. வாக்கு ஈரிரு வகையாய் ஐம்பத்தொன்ருய் அகத்தில் ஒலிப்பது அகத்தியம். வாக்கு நூலில் முதல் மொழி எழுத்தின் கருவாய் நிற்பது சொற்கொள்மெய் (சூக்குமை) செவி சார்ந்து பேச இயைந்த வாய் (பைசந்தி) ஆகும். ஒலியின் உருப்பொருள் இவ்வுருவாய் வைகுங் காண் என (வைகுகரியாய்) கண் (வைகரி) மற்றுண் மெய்யாய் வயங்கி நிற்பதும் (மத்திமை) (மூக்கு) இந்த இரண்டும் வடிவும், தன்மையும் ஆம் எழுத்திரண்டின் கருவாய் நிற்கும் இவையே இரேகை இலேகை இரண்டில் உருவும் தன்மையுமாக சமைந்துள்ளது.

இவ்வாறு ஒலியெழுத்து அக்கர உருவாய் அகமும் அகப்புறமும் கடந்து கூற வாக்காய் குறிகொள நின்றதை இயம் எனும் ஒலியால் இயம்பல் வாக்கியம். வாக்கியம் தற்பவம், தற்சமம் என்னும் மற்ருெரு வகையால் வழங்கப் பெறும். அகத்தியத்தில் இருந்து பாலினீண் இயம் தோன்றியது. பகாஉ விதமாம் பிராகிருதம் என்பது மொழி வகைகள் அனைத்திற்கும் ஆதி ஒன்ருய் வேறுபாடின்றி நின்றது. அப்படியிருந்த பகாஉ விதமாம் பிராகிருதம் மொழியை செந்நெறியினதாய் உளக்குறிப்பதனை வெளியிட அது ஆண் பெண் மொழியாகி விந்து நாதம் தலைப்பட்டு பன்னிரு, பதினறு கலையாய் தென்வட மொழியென தென்வட திசையகத்தெய்தும் திசையே என உணர்ந்து ஒன்றே இரண்டானது. இரண்டு ஒன்ருவது இழுக்கல்ல, எனினும் ஆண்மையான தென்மொழித் திரமும் சிறப்பும் இயம்புகிருர்கள். வழுவுறு நிலைமையும் மாறுதலில்லாத் தெளிவும் ஆண்மைச் சிறப்பும் கொண்டது இரவியாம் தென்மொழி இயற்கை. வழுவுறு நிலையும் மாறுதலுடன் உட்களங்கமும் அடங்கக் கனிவு காட்டி விழைபொறிப் பெண்மை மேவக் கொண்டது மதியென நின்ற வடமொழி இயற்கை.

தென்மொழி ஆதார சூக்குமாக இயற்கையில் தற்சமம் எய்தி ஆறு ஆதார அடுக்கில் நடக்கும் கலை மூன்றான நிலையை மேற்கொண்டு பதினெட்டாகி மெய்யெழுத்தாக விளங்குகிறது.

வடமொழி தூலமாக (௩௰௨) முப்பத்திரண்டு உறுப்புகளைக் கொண்டு வெளிமண்டலத்தில் நட்சத்திரம் இருபத்தேழ் கோள் ஐந்து ஆகி வெள்ளிடையாகத் தோன்றும். வடமொழி யமைபு மரபியல் விளக்கம் தந்து நடனத்தொலித்த டமருக ஒலியாம் மயேச்சுர சூத்திரம் இயம்பி தேவ மொழியின் சிறப்பையும் இயம்புகிறார்கள். இங்கு புறத்திணை, அகத்திணை, பெருந்திணை விளக்கம் அற்புதமாக காட்டுகிறார்கள். தமிழ் எழுத்துக்கள் 30 வடமொழி எழுத்துக்கள் 49.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

என்பது திருவள்ளுவர் வாக்கு. இங்கு எப்படி அகரம் முதலாக வருகிறது என்பதை எம் ஞானத் தெளிவு குரு சித.வே. ஷண்முகநாத பிள்ளை அவர்கள் சாரியை விளக்கத்தில் அகரம் கரமாய் அமைந்து முதல எழுத்தெல்லாம் ஆக இயைந்து காண்கிறது. அதாவது க் அ உயிர்மெய் இணைவளி ரகரம் இவையமை மூலம் 'ம்' இவை கூடக் கரம் என்றாகும். கரம் சாரியையால் மெய்யுயிர் இயக்கம் எல்லாம் தோன்றும். தமிழின் உருவகத் தன்மை விளக்கத்தில் திருவைந்தெழுத்தின் சிறப்பையும் உயிர்எழுத்துக்கள் பனிரெண்டின் சிறப்பையும் உணர வைக்கிறார்கள். மேலும் முற்றியல் இகரம், குற்றியல் இகரம், முற்றியல் உகரம், குற்றியல் உகரம், மாத்திரை அளவைகள், ஒவ்வொரு எழுத்தும் உருவாகிய தன்மையை விளக்குவது அற்புதத்திலும் அற்புதம்.

தமிழின் உருவகத் தன்மை விளக்கத்தில் எல்லாம் தோன்ற இயக்கும் மூலத்து எழுத்து 'க' கரம் அதனிடத்து அகரம் தோன்றி நிற்கும் துலக்கம் காட்டவே 'க' கர எழுத்தில் கதிர்கொள நீட்டி 'அ' கரம் என்றுரு அமைக்கப் பெற்றது என்கிறார்கள். 'அ' உயிர், இந்த உயிர் உடம்பெடுத்தற்கு நாதம், விந்து, நாதவிந்தால் ஆம் பூதம் அஃதமை பூதியம் ஆகவும் கலையும் அஃதமை கலாதியாகவும் சமைந்து காணும் தமிழ் இயல் காட்டுகின்றார்கள்.

அ - உயிர்; இ - நாதம்; உ - விந்து; அஇஉ முதல் எழுத்தாகிய மூன்று ஒரு தொடர்சுட்டு. எ, ஒ கலை எழுத்து. ஐ, ஔ சார்பெழுத்து. ஆ, ஈ, ஊ, ஏ, ஓ எனும் ஐந்து பூத எழுத்து ஃ பூதிய எழுத்து. உயிர்க்கலை எல்லாம் ஆக்கம் சேர் நிறைவாகும் சிவயநமஃக.





எம் ஞானத் தெளிவு குரு பூர்வ காண்டத்தில் வடிவ எழுத்து இயல் இயம்புகிறார்கள்.

எல்லாக் கலையு மிடைபிங் கலைநடுச்
சொல்லா நடுநாடி யூடே தொடர்மூலஞ்
செல்லா வெழுப்பிச் சிரத்துடன் சேர்தலா
னல்லோர் திருவடி நண்ணி நிற்போரே.

என்பது ஆகமச் செம்மல் அருள்வாக்கு. அதற்கிணங்க எம் ஞானத் தெளிவு குரு இறைவன் திருவடி நண்ணி நின்று, கலையினிடத்து நிலைபெறக் காணும் வாயு, மனம், உயிர் ஆகிய மூன்றான அகத்திய எழுத்தும், அதன் உருப் பிராணியும், அதன் ஒலிப் பிராணியும் இயம்புகிறார்கள்.

| உயிர் எழுத்துக்கள் | உருப்பிராணி | ஒலிப்பிராணி |
|---|---|---|
| அ | ஆந்தை | ஆவாம் |
| இ | ஈ | ஈ |
| உ | நிலவட்டை | உளன் |
| எ | எகையினம் | தேறு |
| ஐ | யஞ்சம் | சில்வண்டு |
| ஒ | மயில் | தோநாய் |
| ஔ | அஞ்சலிகை (அத்திக்கனி) | ஔவா |
| ஃ | உருத்திராக்கம் | அரவாம் |

அகத்தில் ஒலிக்கும் எழுத்தும் அந்த எழுத்து உரு பிராணியும், அந்த எழுத்து ஒலிப்பிராணியும் தன் அகத்தே கண்ட போன்று புறத்தேயும் காட்டுகிறார்கள். இதிலிருந்து நாம் அறிந்து கொள்ள வேண்டியது தமிழ்மொழி உயிருக்கு நேராகவும் நிரையாகவும் இருந்து ஆக்கம் தருவதைக் கண்கூடாக காட்டுகிறார்கள்.

| அகத்திய உயிர்மெய் உருவ இயற்கை | எழுத்தின் உருவ இயல்புறத்தில் | ஒலிமெய்ப் பொருள் பெயரெழுத்தியல் |
|---|---|---|
| க - மூலம் + சுவாதிட்டானம் | 'க'லயம் | காகம் |
| ங - சுவாதிட்டானத்தகம் | கெண்டி | ஞிமிறு (வண்டு) |
| ச - சுவாதிட்டானம் + மூலம் | சகடு | சருப்பம் |
| ஞ - இருபுறந்துவளுரு சதுரம் | ஞண்டு | ஞாளி |
| ட - மணிபூரகம் | இடங்கர் | இடபம் |
| ண - பிறைமுச்சுடர் சுழி | நுணலை | நுணலை |
| த - மூலம் + சுவாதிட்டனாம் + மணிபூரகம் | தாவரம் | தித்திரி |
| ந - மணிபூரகம் + சுவாதிட்டானம் | நந்து | நரர் |
| ப - அநாகதம் | பா | பல்லம் |
| ம - முற்றெழுத்து (பேசா எழுத்து) | மா (வண்டினம்) | பெற்றம் |
| ய - சுழிமுனை வடிவச் சூலம் | யந்திரம் | ஈ |
| ர - இடகலை பின்கலை இருகால் அமைவு வடிவம் | இராற்பொடி | கோடரம் |
| ல - பூரகம் | திமிங்கிலம் | அணில் |
| வ - ரேசகம் | வாத்து | வௌவால் |
| ழ - கும்பகம் | வாயு கும்பிக்கும் வடிவம் | குயில் |
| ள- தம்பனம் | வியாளம் | உள்ளல் |
| ற - இரண்டு ரகரம் இணைந்த உருவம் | ஊரல் | வல்லியம் |
| ன - அருவம் உருவம் அணுத்திரள் அசனி | எழிலி - (கனம்) | கின்னரம் |
| இக், இச் | | பல்லி |





ஆக உயிர் எழுத்து மெய்யெழுத்துக்கள் அனைத்திற்கும் யோக ஞான சாதனம் கைவரப் பெற்ற எம் ஞானத் தெளிவு குரு கலாந்த விளக்கம் இயம்புகிறார்கள்.

அடுத்தது உத்தர காண்டத்தில் தமிழ் நெடுங்கணக்கு என்னும் சித்தாந்தத்தை தெளிவாக்குகிறார்கள்.

பகுத்து சுட்டும் எழுத்து - (கலை இடம் வலம்) - 'த'

அமித தாரணை மிக்குரும் குறிப்பால் - மி

அமிழ்த்தை அடக்கிய குறிப்பு - ழ் ஆய்

தமிழ் அமையும். முருகப் பெருமான் திருவருட் பேற்றுற் கிடைத்த அகத்திய மொழி அகம் என்றும் அந்த அகத்திய மொழியை அகமாக வைத்து அதன் அகப்புறம், புறம், புறப்புறம் கூறுவது பெரியோர்கள் வழக்கம். இந்த அடிப்படையில் எம் ஞானத் தெளிவு குரு இதுவரை அகத்திய மொழியை அகமாகவும் அகப்புறமாகவும், புறமாகவும் புறப்புறமாகவும் தெளிவுபடுத்தியிருக்கிறார்கள். அதன் அடிப்படையில் உயிர் நாதத்தை அணுகி விந்தில் உறையும் அதுதான் அரிவரி. இந்த அரிவரி நெடுங்கணக்காக மாறுவதற்கு இலக்கண வரம்பு இயம்புகிறார்கள். பூர்வ காண்டத்தில் மூலாதாரம் முதல் அனற்கதம் வரை அமைந்த நாலு ஆதாரங்களையும் தாண்டி மேலும் இரண்டு ஆதாரங்களுக்கு நீண்டு நெடுங்கணக்காகிறது.

அரிவரி ஆறு ஆதாரங்களையும் தாண்டி நீளாமல் 'ன' காரம் ஒடுக்கம் நாதாந்தத்தில் சித்தாந்தமாகக் காட்டி திருந்திய முதல் ஐந்தெழுத்தாகிய சிவயநமவில் 'சி'காரம் அந்தமாகக் கொண்டு அமைகிறது. அதாவது உயிர் நாதத்தில் ஒன்றி விந்தில் அமைந்து அதன் எல்லை 'ஓ' ங்காரத்துக்குள் அடக்கம் என்பதான குறிப்பில் "அரி சித்தரி நமோத்து சிந்தம்" என்று அரிவரி என்னும் நெடுங்கணக்கிற்கு இலக்கண வரம்பு இயம்புகிறார்கள். அனற்கதத்தில் இருந்து விசுத்தியில் அமையும் பதினைரயும் ஆக்கை என்னும் ஆருவது ஆதாரம் எ, ஒ இரண்டும் அடக்க அந்நிலையில் ஆன்மா தத்துவம் பெற்று நாதாந்தமாகிய 'ன' காரத்தை நெருங்கி அதனல் 'ழ ற ஃ ண எ ஒ' என்ற ஆறும் திருவைந்தெழுத்தில் அடங்கும். இந்த ஆறு எழுத்துத் தான் சற்குருவாகிய முருகப் பெருமானின் ஆறு எழுத்து மந்திரம் இதுவே அருந்தமிழாக அகத்தியம் தோன்றும். அப்பர் சுவாமிகள் 'சொற்றுணை வேதியன்' என்பார். இங்கு 'அ'னு 'ஆ'வன்னு......... என்று இயம்புவதில் அப்பர் சுவாமிகள் கூற்று விளங்கும். ஓம் அகமாகிய இ, அ, உ மூன்று எழுத்தும் முரித்தெடுத்த எழுத்து அசபையுள் எய்த நிற்கும். இரு நூற்றி பதினறு எழுத்திற்கும் விரிவாக்கம் தர செவ்வையதாய் இதைச் செப்பும் திருவைந்தெழுத்தும், கூட இருநூற்றி இருபத்தி நான்கு ஆகும்.

இறைவனுடன் அண்டிய மூலம் தன்னகத்தே கோ, ஆ, பசுவு, குடம், காலேயம், காலி, நிரை, இலிபி, இலேகை, இரேகை, எழுத்து, கலை, வரியாம் பொறி, கணக்கு ஆய வடிவ இயற்கை நெடிதே அமையக் கொண்டது. இந்த மூலத்திற்கு அயல் அவ் அயலுக்கு அயல் சித்திரம் கூர்த்த கணக்காம் இது என்க. மேற்காட்டிய ஏழின் இயைபு கொண்ட ஆன்மா பாசத்தில் இருந்து நீங்கி உபதசம் ஏற்று உபயத்துயிர் தத்துவம் பெற்று ஓங்கும். சித்தாந்த உருவாம் சிவலிங்கத்தில் முதலில் ஆன்மதத்துவமும் (24) நடுவில் வித்தியா தத்துவமும் (7) ஈறில் சிவதத்துவம் (5) ஆக முப்பத்தாறு தத்துவங்களும் எழுதாக்கிளவியாகத் தோன்றுகிறது. தமிழ்மொழியில் ர ல ழ ள நான்கும் அமிதமாக அமைந்து நிற்கும் என்கிறார்கள்.

எழுத்துக்களின் புணர்ச்சியினுல் ஏற்படும் விளைவுகளையும் அதன் தன்மைகளையும் அற்புதமாக எடுத்துக் காட்டி இராசி, கரணம், லக்கினம், முகூர்த்தம், வருடம், சமையுடன் வற்சரம் ஆண்டு என கால தத்துவத்தை ஒப்பிடுகிறார்கள். சத்தி எழுத்து 'ச' கரம் நெறியில் நியதி தத்துவம் ஆகும். வடகலையை தென்கலையடக்கி அதனல் கதிர் தரத் தோன்றுவது கலையின் தத்துவம். அக்கலையால் வாசி மேன்முகமாக ஏறி மோனத்திற்கு வித்தாகிய ஆக்ஞையில் அது சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி, துரியம் முறையே வித்தை, இராக தத்துவம், புருட தத்துவம், வித்தியா தத்துவம், என விளைவுற நிற்கும். துரியாதீதத்தில் சித்துரு ஐந்து முத்திரையாகி காண்பதில் ஒன்று நெருப்பாறு, இரண்டு மயிர்ப்பாலம், மூன்று வேகாத்தலை, நான்கு சாகாக் கால், ஐந்துபுகாபுனற் ஆகிய ஸ்தானங்களுக்கு உள்ள எழுத்துக்கள் முறையே ஹ, ம, ர, ஈ, அ. 'எண்ணும் எழுத்தும் கண்ணெத் தகும்' என்னும் முதுமொழியாகிய பழுத்த பழமொழியை நோக்குக. இவ்வாறு ஒலி ஏழு அத்தாக அகத்திலும் அகப்புறத்திலும் புறத்திலும் புறப்புறத்திலும் புணர்ப்புற நின்று பொருந்து நிலையில் ஏழ் அமைவாய எழுத்தாய்ச் சமைந்து பூத்த சமயப் போக்கை திருவைந்தெழுத்துச் சார்வால் தீர்க்கும் சமயதீர்க்கையில் வேத வேதாந்தம் விளங்கி காணும் என்கிறார்கள். திருந்திய முதல் ஐந்தெழுத்தின் சார்வால் விசேட தீர்க்கையில் வேத அங்கம் ஆறு அமைவு தோன்றும் என்கிறார்கள். விசேடம் தீர்க்கை பெற்று நிர்வாண நிலையில் அணிவிப்பது நிர்வாண தீர்க்கையாகும். இந்நிலையில் சித்தாந்தத்தின் தெளிவு தோன்றும் என்கிறார்கள். கலை பயிலும் நிலையில் அனைத்திற்கும் ஆதார மேருவான நாற்பத்து மூன்று கோணம் அடங்கல் அடக்கித் தன்னுள் 'எ ழி ழ' ஏக உருவாய் அமிழ்ந்தஃதேகம் ஆய (அமிழ்த ஏகம்) தீர்க்கையில் உபநிழலறங்கள் ஒளிபெறத் தோன்றும் என்கிறார்கள்.

தமிழ்நெடுங்கணக்கில் சமயம் ஐந்தங்கமாகவும் விசேடம் மும்மீன், திசாபுத்தி, சித்திரமாகவும் நிர்வாணம் கலை சரம் அபிசேடம் நிமித்தமாகவும் உள்ளது. ஒளிபெறத்





தோன்றக் கூடிய தெளிவு கொண்ட தெய்வத் தமிழ்மாதா மகிழ வரு சற்புத்திமார்க்கமாய்ச் சித்தர் வழங்கு மொழியினும், முதிர்விற் பழுத்த முதுபழ மொழியாய் பிதா அருள் கட்டளைப் பேறுடைத்தகைமை பெறு தாச மார்க்கப் பெரியோர் மொழியினும் உள்ளம் உடையான் உணர்த்தும் மொழியை வாழ் சகமொழியாய் வழங்க வழங்கும் குருவருள் பெற்றுக் குவலயத்தோர் எனச் சகமார்க்கத்துறு தவசி மொழியினும் அண்டம் அதனில்னின்ற அசரீரியாய்த் தெய்வந் திருஅருள் செய்யும் நல்லருள் மொழிப் பேறு கொள்ளும் பெருந்தகையாளராய்ச் சன்மார்க்கம் பெறு சாது மொழியினும் சரியை, கிரியை, யோகியர் ஞானியர்க்கு உண்மை உணர்த்தும் என்கிறார்கள். அப்படி நமக்கு உணர்த்தியருளியவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஆவார்கள். நமக்கருளிய தேவார திருவாசகம் நம்மை பழைய நிலைக்கு (அதாவது இறைவனேடு ஒன்றியிருந்த நிலைக்கு) கொண்டு செல்வது தெளிவாகக் கூறின் பிறவியை வேரறுத்துவிடும். உண்மையை உணர்த்தி நல்வழி நாடச் செய்யும் நற்றமிழ் சென்றதும், நின்றதும், போவதும், புகுவதும் ஆய புராண ஆகம நூல்களில் பூர்வ உத்தரம் அமைய அமைத்திருக்கிறது என்கிறார்கள்.

ஆன்மதத்துவமாகிய இருபத்தி நான்கு பூதம் 5 (ரு) புலன் 5 (ரு) ஞானேந்திரியம் 5 (ரு) கன்மேந்திரியம் 5 (ரு) கரணம் 4 (ச) தீர்க்கை பெற்று மார்க்கம் என்னும் வழிபாடெய்தி யழிவில் வித்தியா தத்துவ உண்மை தன்பால் உணர்ந்து (அதாவது உயிரின் மலர்ச்சியாம் உயிர்ப்பு மூலம் தொடங்கி ஆறு ஆதாரச் சார்பு வரை கூடிய ஏழின் அத்தைக் கொண்டு எழுத்தாகக் காணும். ஏழு பகுப்பாக இருக்கின்ற படியால் வித்தியா தத்துவம் ஏழாகும்.) வாசிக்கலையால் சிவ தத்துவமாஞ் செம்மை பெற்றுத் தமிழே சிவமாய்த் தழைவுற்று ஓங்கும். சிவதத்துவம் 5 (ரு) சத்தஇயைபு உச்சித்தை தரும் சத்தியோசாதமும், அகஉரம் என்னும் மார்பகமாம் அகோரமும், வாமம் அது இயையும் வாமதேவமாம் கண்ணும் (வாமம் என்பது குறுகலையும், குளியையும் குறிக்கும்) ஈசன் நேயம் என்னும் ஈசானமும் (மூக்கு). தான் எனப் புரிந்து கொள்ளலாகிய வெற்றிடமாகிய மேலாம் உடம்பை தற்புரி இடம் (தற்புருஷம்) என்றும் ஆகிய ஐந்து. ஆக ஆன்மதத்துவம் வித்தியாதத்துவம் சிவதத்துவம் ஆகிய முப்பத்தாறு தத்துவங்களும் சித்தாந்தம் ஆகும்.

தமிழே சிவமாய்த் தழைவுற்று ஓங்கும் என்று ஞானத் தெளிவு குரு ஞானசாதனத்தால் தன்னிடம் உறும்மெய்கலையால் அகத்தில் ஒலியை எழுப்பி அகத்தீயை மூட்டி அத்தீயில் தெளிந்து பின் அண்டத்திலிருந்து அமிர்த கலையைப் பாய்ச்சி அதனல் ஆம் அரிசித்தரியாய் சமைந்து இறைவனேடு ஒன்றி இந்நால் புகன்றுள்ளார்கள்.

இந்நூல் தேவார ஓதுவார் ஆறுமுகம் அவர்களுக்கும், புலவர் நல்லாசிரியர் தே பிரித்தோ தமிழாசிரியர் அப்பாராசன் அவர்களுக்கும் எம் ஞானத்தெளிவு குரு உரை இயம்பி உள்ளார்கள். அவர்களில் தலைமாணுக்கராகிய அப்பாராசன் அவர்கள் இந்நூலிற்கு உரை எழுதியிருக்கிறார்கள் என்றால் இதுதான் முற்றிலும் பொருத்தம் என்பது. உரையை அவர் எழுதியிருக்கும் பாங்கு மிகவும் அற்புதமாக உள்ளது. தொல்காப்பியம், நன்னூல், தண்டியலங்காரம் போன்ற இலக்கண நூல்களை ஒப்பிட்டு அதிலும் மிகச் சிறந்த சூத்திரம் எம் ஞானத் தெளிவு குரு எழுதியது என்பதை விளக்கிக் காட்டும் பொழுது ஆதி இலக்கண நூல் அகத்தியம் தான் என்பதை தெள்ளத் தெளிவாக்கிக் காட்டியிருக்கிறார்கள். அவர்கள் அவர்தம் ஞானகுருவிற்கு செய்த காணிக்கை இந்நூல் உரை என்றால் அதுதான் முற்றிலும் உண்மை அவரும் அவர்தம் குடும்பமும் பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு காலம் சீரும் சிறப்புமாக வாழ்வார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இந்நூலை அச்சிட உதவிய அருள் உள்ளம் படைத்த சிதம்பரம் செட்டியார் அவர்கள் மகன் சிவநேசச் செல்வர் சித. ஏகப்பன் செட்டியார் அவர்கள் எம் ஞானத் தெளிவு குருவின் நல் ஆசி பெற்றவர். கனடாவில் டாக்டராக இருக்கும் இவர் ஆன்மீகத்தை அங்கு பரப்பி வருகிறார். ஆன்மீகம் என்பது அவர்தம் வாழ்வில் இரு கண்களாகவே காணுகிறார் என்பது திண்ணம். ஏனெனில் கேட்பதற்கு முன்னரே பொருளை அனுப்பி விடுகிறார். அவர் தம் பொருளுதவியால் அகத்தியம் மூலமும் உரையும் மக்களுக்கு கிடைத்திருக்கிறது என்றால் அது காலத்தினால் செய்த உதவியாகும். அவர் தினம் நனிபள்ளி பதிகம் பண் பாடும் பண்பாளர். அவர்தம் பரம்பரையே பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு நீடூழி சீரும் சிறப்புமாக வாழ வாழ்த்தும் முத்தமிழ் வேதத் திருச்சபையார்.

இக்கலியுகத்தில் தமிழறிஞர்கள் என்று சொல்லக் கூடியவர்கள் தமிழ் மொழியின் சிறப்பை அறியாமல் எழுத்தை மாற்றுவது என்பது சிறுபிள்ளைத் தனமாக விளையாட்டு. இந்நூலை வாசித்த பிறகாவது என்றும் நிலைத்து உயிருக்கு ஆக்கத்தைத் தரக்கூடிய தமிழ் எழுத்துக்களை அச்சு இயந்திரத்தில் மாற்றுவார்கள் என நம்புகிறோம்.

என்றும் நிலைத்திருக்கின்ற தமிழ் மொழியின் சிறப்பை எம்மால் எழுத முடியுமோ? தமிழே சிவம் என்பதைத் தவிர வேறு ஒன்றும் எம்மால் எழுத முடியாது. இந்நூலை வாசிக்கக் கூடிய சிவநேச மெய்யன்பர்கள் மிகவும் புண்ணியவான்கள். அவர்தம் வாழ்வில் பகையை வென்று குறிக்கோளுடன் வாழ்வார்கள் என்பது திண்ணம். சரியை, கிரியை, யோக ஞான மார்க்கம் பின்பற்ற முயல்வார்கள் என்பதும் திண்ணம்.





இந்நூலை என்றும் நிலைத்திருக்கின்ற தமிழ் எழுத்துக்களால் கணினி மூலம் அச்சிட்டுத் தரும் ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸ் குடும்பத்தாருக்கு முத்தமிழ் வேதத்திருச்சபையோர் மனம் கனிந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். எப்பொழுது போனாலும் இன்முகத்துடன் வரவேற்கும் அவர் குடும்பத்தார்களும் வரும் பரம்பரையும் நீடூழி காலம் சீரும் சிறப்புமாக வாழ முத்தமிழ் வேதத் திருச்சபையோர் இறைவனை வேண்டுகிறோம்.

இந்நூலின் நிறைவில் திருஞான சம்பந்தர் திரு அவதாரச் சிறப்பும், இரண்டாம் திருமுறை, மூன்றும் திருமுறை பொருள் விளக்கமும் இணைத்துள்ளோம் என்பதை அன்புடன் தெரிவித்துக்கொள்கிறோம். முதல் திருமுறையின் பொருளாகிய "**திருமுறை பெருநூல் விளக்கம்**" விரைவில் வெளிவரும் என்பதையும் மிக மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்கிறோம்.

இந்நூல் முன்னுரை எழுத பதினொரு மாதம் காத்திருந்து பதினொரு நாள் விரதம் இருந்து ஆனி மகத்தில் எம் ஞானத் தெளிவு குருவின் சமாதியில் ஆரம்பித்து ஆனி உத்திரத்தன்று செல்லப்பச் செட்டியார் கோயில் நடராஜப் பெருமான் ஆனி தரிசனம் கண்டு அன்றைய தினம் எம் ஞானத் தெளிவு குருவின் சமாதியில் வரும் பிறவிதோறும் முத்திமிழ் வேதத் திருச்சபையின் அடிமையாக வாழ வேண்டிக் கொண்டு முன்னுரையை நிறைவு செய்கின்றோம்.

இங்ஙனம்

**இராம. ஆதிரெத்தினம்**

இணைச்செயலாளர்



சிவநேசச் செல்வர், சிரஞ்சீவி
கனடா, டாக்டர் "சித. ஏகப்பன் செட்டியார்" அவர்கள்







இந்நூல் உரை ஆசிரியர்
திருமுறைச்செல்வர் நல்லாசிரியர்
புலவர் க. அப்பாராசன் அவர்கள்
அப்பர் அவைப்புலவர், களிமேடு, தஞ்சாவூர்

உ
சிவமயம்

# மகத்துவம் பொருந்திய அகத்திய முனிவர்





உ
சிவமயம்

# திருமூலர்



ஓவியம் "வைத்தியமணி", 1931

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

எம் ஞானத்தெளிவு குரு சிறுவயது முதல் இயம நியம நெறியில் நின்றதனல் திருவருள் கூட்டுவிக்க வாசிக்கலே பயின்று அக்கலேயின் விளைவால் தன்னகத்தே தோன்றும் அகத்தீயை அமிர்த்தம் அருந்தி அதன் விளைவால் தன்னகத்தே தோன்றும் அகத்தீயை ஆராய்ந்து தெளிந்து அதன் மூலம் நூல்களை செய்துள்ளார்கள். அவர்கள் ஆக்கிய நூல்கள்

| | |
|---|---|
| 1. அகத்தியம் | 2. உயிர்நிலேக் கலே இலக்கணம் |
| 3. முத்திநெறி இலக்கணம் | 4. கரண இலக்கணம் |
| 5. பண்ணிலக்கணச் சூக்கம் | 6. இலக்கிய இராமாயணம் |
| 7. இரத்தினச் சுருக்க இராமாயணம் | 8. திருஞானசம்பந்தர் கால நிர்ணய விளக்கம் |
| 9. திருமூலரின் சூனிய சம்பாதனை (உரை விளக்கம்) | 10. திருமுறைப் பெருநூல் விளக்கம் |
| 11. திருமகள் திருப்பதிகம் | 12. கலேஞானம் |
| 13. இலிங்கபுராணம் | 14. ஞான சரஸ்வதி பதிகம் |
| 15. வைத்திய சாஸ்திரம் | 16. திருஞானசம்பந்தர் திரு அவதாரச் சிறப்பின் விளக்கம். |

17. திருஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்த இரண்டாம் திருமுறை பொருள்விளக்கம். பூர்வ மீமாம்சை. உத்தர மீமாம்சை.

கலியுகத்தில் கருணை கூர்ந்து நம் உயிருக்கு துணையான நூல்களை தந்திருக்கிருர்கள். நம் உயிர்த்தீயை இயக்கி ஒலி மூலம் ஒளியை உண்டாக்க அதன் மூலம் முத்தி அடைய ஆக்கிய நூல்கள். முதற்பொருளாகிய இறைவனுடைய கலேயின் மூலம் ஆக்கியதால் இந்நூல்களுக்கு எல்லாம் அகவுரையாகவும் சாட்சியாகவும் அவனே இருப்பதால் கலியின் கொடுமை தீர ஒவ்வொரு நூலாக வெளி வந்து கொண்டிருக்கிறது.

அவர்கள் மிகவும் கருணை உள்ளம் கொண்டு முத்தாத்தாள் நடுநிலேப்பள்ளியில் முத்தமிழ் வேதத் திருச்சபை நிறுவி பௌர்ணமி தோறும் திருமுறைப் பெருநூல் விளக்கமும் ஞாயிறு தோறும் இலக்கிய இராமாயணத்தையும் இயம்பி செவிக்கு பனிரெண்டு ஆண்டுகள் விருந்து படைத்தருளினர்கள். அதைத் தொடர்ந்து அவர்கள் காட்டியருளிய நெறி வழியே 26 ஆவது ஆண்டு நிறைவை நோக்கி சீரும் சிறப்புமாக இயங்கி வருகிறது. முத்தி தரும் தெய்வ சபையைக் காண்பதற்கு சேரவாரும் செகத்தீரே என அன்போடு தெளிவு குருவின் ஆசியோடு அழைக்கின்றேம்.





அரி ஓம் நன்ருக குரு வாழ்க குருவே துணை



# அகத்தியம்

## காப்பு

**நிலவணி மௌலியும் நெற்றிமேற் கண்ணும்**
**பலநுகர் அங்கையும் பாசாங் குசமும்**
**குலவரை ஏடாய்க் குறித்தகூர்ங் கோடும்**
**துலங்கும் விநாயகன் றூய்தாள் துணையே.**

அகத்தின் கண்ணே தோன்றும் ஆவளியின் ஒலியானது, மூலாதாரம் முதலாகத் தோன்றும் முறைமைபற்றி மூலக்கடவுளாம் விநாயகப் பெருமானுக்கு முதலில் வணக்கம் கூறுகின்ருர்கள் ஆசிரியப் பெருந்தகையார் அவர்கள்.

### இதன் பொருள்

தண்ணளியினையுடைய மூன்ரும் பிறைச் சந்திரனை அணியாகக் கொண்டு விளங்கும் சடையும், நெற்றியின் புறத்தே தோன்றும் ஞானக் கண்ணும், கனிகள் பலவற்றை எடுத்து உண்ணும் துதிக்கை என்னும் ஆயுதமும், மலே அடுக்குகளையே ஏடுகளாகக் கொண்டு பாரதம் என்னும் அரிய இதிகாசத்தை வரைந்த கூரிய தந்தமும் கொண்டு விளங்கும் விநாயகப் பெருமானுடைய தூய திருவடியே இந்த அகத்தியம் என்னும் இலக்கண நூல் இனிதே நிறைவுறத் துணையாக விளங்கும்.

முடிமுதல், திருவடிவரை நோக்கும் முறையாகக் காப்புச் செய்யுளை அமைக்கின்ருர்கள்.

நிலவு என்னும் மங்கலச் சொல்லால் தொடங்கவே, இந்நூல் தண்ணளி சார் தன்மையுடையது என்பது விளங்கா நிற்கும்.

"திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்" என்னும் இளங்கோவடிகளின் கூற்றையும் ஈண்டு நோக்குதல் வேண்டும்.

நினைக்கும் அடியார்களின் உள்ளத் தினைத்தூய்மையாக்கலின் தூய் தாள் என்று கூறுகின்ருர்கள்.

தாம் எடுத்துக் கொண்ட அகத்தியம் என்னும் இனிய இலக்கண நூல் இனிதே நிறைவுற விநாயகப் பெருமானின் தூய்தாள் துணையே என்று கூறுகின்ருர்கள். இறைவன் தூய திருவடியே நான்மறைகளுக்கும் ஆகம நூல்கள், சாத்திரங்களுக்கும் காரணமாய் இருத்தலின் தூய்தாள் துணையென்ருர் எனினும் பொருந்தும்.

# அகத்தியம்

**ஒலியின் அடர்த்தியை யொருமுறைப் படுத்த**
**அகத்திய மான அகத்தியம் ஓர்ந்து**
**தெளிந்தவா றீது செப்ப லுற்றும். (க)**

**உரை**

ஒலிக்கூட்டத்தின் செறிவினை முறைப்படுத்தியமைக்க, அகத்தின் கண்ணே எழும் பத்துவகை நாதத்தினையும் செவியான் நன்ருக ஓர்ந்து, உள்ளந் தெளிந்த நிலையில் இந்த நூலினைச் செப்புதற்குத் துணிந்தோம்.

வெளியின் கண்ணே தோன்றும் ஒலியின் கூறுபாடு அளவின்றிப் பெருகிச் செல்லுதலின், அதனை ஒருமுறைப்படுத்திச் சொல்ல வேண்டும் என்னின் அகத்தின் கண்ணே எழும் ஆவளியின் பத்து வகையான நாதத்தினை நன்ருக உணர்தல் வேண்டும் என்பதூம், உணர்ந்த வழியேயன்றி நன்ருகத் தெளிவும் பெறுதல் வேண்டும் என்பதும் இதனுற் புலனுகும். அங்ஙனம் தசவித நாதத்தினையுட் செவியாற் கேட்டு அதன் கண்ணே சொக்கி ஆழ்ந்து உள்ளந்தெளிந்த நிலையில் இந்நூலினைச் செப்புகின்றேம் என்று தம்முடைய நிலையை ஏனையோரும் உணர்ந்து கொள்ளத் தெளிவாகக் கூறுகின்ருர்கள். இது தற்பெருமையன்று, தன்னளியாம்.

"மணிகடல் யானை வளர்குழல் மேகம்
மணிவண்டு தும்பி வளைபே ரிகையாழ்
தணிந்தெழு நாதங் கடாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கவொண் ணுதே"

என்பது திருமந்திரமாம் ஆகமத்தின் திருமூலர் வாக்கு.

மணி, கடல், யானை, புல்லாங்குழல், மேகம், வண்டு, தும்பி, சங்கு, பேரிகை, யாழ் ஆகியவற்றின் நாதங்கள் தசவித நாதம் என்று கூறப்படும். இவை ஆவளி என்று சொல்லப்படும் வாசியின் நாதங்கள் ஆம். இந்த நாதங்கள் மணிபூரகத் தானம் வரை ஆவளி தணியும் படி நன்ருக இழுத்துப் பின்னர் சிரம் நோக்கிச் செல்லுமாறு சாதனம் செய்யும் திறனுடைய ஞான யோகியர்கள் உண்முக நோக்கால் கேட்கக் கூடியனவாம். இவையே உண்மை மறைமுழக்கமாம். இவற்றினைக் கேட்டுத் தெளிந்த ஞானியரே அகத்தியம் என்னும் தமிழ் இலக்கிய நூல் செய்யத் தக்கார் ஆவர் என்பதனை,

"அகத்தெழு வளியிசை அரில்தப நாடின்
அளவிற் கோடல் அந்தணர் மறைத்தே."





என்னும் தொல்காப்பியப் பெருந்தகையார் கூற்றுனும் உணரலாம்.

அந்தணர் - அந்தத்தின் இயல்பினையுணர்ந்த ஞானியர்

**ஒலி தோன்றும் முறை**

**வெளியும் அதனிடை வளியும் தோன்ற**
**உளவாய்ப் புலனுகர் வுறத்தோன் றுவதொலி (உ)**

**உரை**

ஆகாயமும், அதன்கண்ணே காற்றுந் தோன்றுதலால் செவியாகிய புலன் கொள்ளுமாறு தோன்றுவது ஒலியாகும்.

## வெளி யொலி இயல்

### ஒலி என்பதன் வரிவடிவ விளக்கம்

**அண்டம் ஒகரமாம் அண்டத் தெழுந்து**
**உலவுங் காலாய் உறுவது ரகரம்**
**ரகரம் சலனமாய் லகரம் ஆகி**
**லகரம் இகரமாய் நாத எழுத்துடன்**
**ஒன்றி நின்று ஒலியெனப் பெற்றது. (ங)**

**உரை**

இந்நூற்பாவின் கண் ஒலியென்னும் ஈரெழுத்தொரு மொழியின் வரிவடிவ நுட்பத்தினையும் விளக்குகின்ருர்கள்.

அண்டம் 'ஒ' என்னும் ஒகர வடிவமாக இருக்கிறது. அண்டத்தின் கண்ணே தோன்றி உலவும் காற்றின் வடிவம், ர என்னும் ரகரவடிவமாக இருக்கின்றது. ரகர வடிவினைப் பொருந்திய காற்றுனது சலனப்படுவதால் (இயக்கங்) கொள்வதால் லகரம் என்னும் வடிவத்தைப் பெறுகின்றது. ('ல' என்னும் எழுத்தாக மாறுகின்றது). அவ்வாறு மாறிய 'ல' என்னும் எழுத்தானது நாதத்தினை உணர்த்தும் இகரத்துடன் கூடி 'லி' என்னும் எழுத்தாகி 'ஒலி'யென்னும் வரிவடிவத்தைப் பெறுகின்றது. இவையே ஒலியென்னும் சொல்லினுடைய வரிவடிவ நுட்பமாகும்.

இருப்பை என்னும் சொல் இலுப்பை என்று வழங்குதலே ரகரம் சலனமாய் லகரம் ஆனதற்கு உதாரணம் ஆம்.

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே.
மொழிப்பொருட் காரணம் விழுப்பத் தோன்ரு",

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தின் கண்ணே, சொல்லும் என்பதன் கண் அமைந்துள்ள உம்மை அதன் வரிவடிவம் என்னும் பொருளையும் உணர்த்தா நிற்கின்றது.

ஆகையால்,

வெளிவளி உலவை ஒலியென் றாகும் (௪)

உரை

ஆகையினால் ஆகாயத்தின் கண்ணே காற்றானது உலவுகின்ற தன்மையே ஒலியென்று கொள்ளப் பெறும்.

ஆயவிவ் வகையொலி யடங்கலும் பகுத்து
வரையறை செய்து வழங்கப் புறவெளி
போன்றுள் ளகத்திற் றோன்றும் வெளிவளி
ஒலியை யுள்ளவா றுரைப்போம் காண்க. (௫)

உரை

ஆகிய இவ்வகையினால் தோன்றிய ஒலிக் கூட்டத்தை வரையறைபடுத்திக் கூறுமுகத்தால், வெளியே உள்ள ஆகாயத்தின் தோன்றும் ஒலி போன்று அகத்தின்கண் அமைந்துள்ள ஆகாயத்தில் இயங்கும் காற்றினால் உண்டாகும் ஒலியினை உள்ளவாறு கூறுகின்றோம். உணர்க.

## வெளி யொலி எழுத்தியல்

### ஒலியின் அத்துக்கள்

காண்கநம் அகத்திற் கால்கொண் டெழும்வளி
மூலா தாரம் முதல்நா தாந்தம்
ஈறுயமைந்த ஏழ் நிலை யங்களிற்
சார்ந்த ஆறுஆ தார வடுக்கிற்
பொருந்தி நடனம் புரியும் அதனால்
ஒலிஎழு அத்தாய் உருப்பெறு கின்றது. (௬)

உரை

நம்முடைய அகத்தில் தோன்றி, மேல்நோக்கி எழும் ஆவளியானது, மூலாதாரம் முதல் நாதாந்தம் நிறைவாக உள்ள ஏழு நிலையங்களிலும் சார்ந்து, ஆறு





ஆதாரங்களாகிய அடுக்கில் பொருந்தி நடனம் புரிகின்ற காரணத்தால் ஒலியானது ஏழு அத்தாக உருவங் கொள்கின்றது.

**ஆறு ஆதாரம் :** மூலாதாரம், சுகவதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, அக்க இணையம் என்னும் ஆக்ஞை என்பனவாம்.

குறிஞ்சி நிலத்தில் உலாவும் ஒருவனைக் குறிஞ்சியான் என்று கூறுமாப் போலவே ஏழு அத்துக்களில் உலாவும் ஆவளியை எழுத்தென்றே பெருந்தகையார் கூறுகின்றார்கள். முன்னோர்களும் அங்ஙனம் கொண்டிருக்கின்றார்கள்.

அத்து - எல்லை.

### ஒலியுருவே எழுத்தென்பது

எழுத்தாய் உருப்பெறும் என்று காட்டிய
எழு அத்தான எல்லையே எல்லை அஃது
அன்றி ஒலிஉரு வாம்நிலை இல்லையால்
இவ்வொலி யுருவம் எழுத்தென வழங்கும். (எ)

உரை

எழுத்துக்கள் உருவம் பெறுதற்குரிய எல்லையாம் இடங்கள் ஏழேயாகும். அதற்குமேல் ஒலியுருவங் கொள்ளும் இடம் வேறொன்றும் இல்லை. இவ்வாறு ஏழு இடங்களிலும் உருவங் கொள்ளும் ஒலியே எழுத்தென்று வழங்கப் பெறும். ஏழ் + அத்து என்பது எழுத்தென மருவியது.

### சொல்லின் எழுத்தெல்லை

சொல் சொல்
வழங்கும் மொழியில் வரும்எழுத்து எல்லையும்
அவ்விதம் ஆகவே அமைந்து நிற்கும். (அ)

உரை

தமிழ் மொழியில் வழங்கும் சொல்லின் எழுத்தெல்லையும் ஏழாகவே அமைந்து நிற்கும்.

பகாப்பதம் ஏழும் பகுபதம் ஒன்பதும்
எழுத்தீ றாகத் தொடரும் என்ப

7 - 9.

என்னும் நன்னூல் நூற்பா வானும் இதனை உணரலாம்.

## ஏழு கோள்களே இலிபியாம் என்பது

நிற்கும் இவ்வாறே நீள்புற வெளியிலும்
கதிரவன் முதலாய்க் கதிர்மகன் ஈறுய்
உள்ள ஏழின் உறழ்ச்சிக் கூட்டமே
இகத்தில் எவர்க்கும் இலிபியாய்த் துலங்கும். (௯)

உரை

வரையறைக்குட்படாது நீளும் புறமாகிய ஆகாயத்தின்கண் தோன்றும் ஞாயிறு (சூரியன்) முதலாக, கதிர்மகன் என்று சொல்லப்படும் சனி ஈருகவுள்ள ஏழு கோள்களின் உறழ்ச்சி கூட்டமே (தொகையே) இவ்வுலகில் உள்ளவர்கள் அனைவருக்கும் இலிபியாகத் தோன்றும்.

இலிபி - விதியெழுத்து.

## இலிபி இன்னதென்பது

இலிபி என்பது இல்லமாம் நம்அகம்
பிற்பட வெளியிற் பிறங்கிக் காண்பது. (௰)

உரை

இலிபி என்று சொல்லப்படுவது, உயிருக்கு இல்லமாக அமைந்த நம் உடலானது அழிந்து போனவிடத்து ஆகாயத்தின் தன்மையுடையது என்று கூறப்படும். நம் மண்டை ஓட்டின் கண் காணப்பெறும் குறியீடுகள் ஆகும்.

குறியீடு - வட்டம், சதுரம், பிறைக்கோடு, முக்கோணம், அறுகோணம் அன்ன பிறவுமாம்.

அதுஇது என்று ஐயப் படாமல்
அகம் போற் புறத்தும் அமைவ காட்டி
ஒலிஎழுத் திலிபியிவை உரைத்தனம் இவற்றின்
தொகைவரம் பாதியும் தொகுத்துக் காட்டுதும். (௰௧)

உரை

மக்கள் யாவருக்கும் ஐயந்தோன்றுதவாறு அகத்தின் கண்ணே ஒலி, எழுத்து, இலிபி ஆகியவை அமையும் தன்மை புறத்தின் கண்ணும் உள்ளதை விளக்கிச் சொன்னேம். இவற்றின் தொகையினையும், எல்லை வரம்பு முதலானவற்றையும் தொகுத்துக் காட்டுகின்றேம்.





# எழுத்து ஆதார இயல்

## ஆதாரத் தமையும் எழுத்தின் தொகை

மூலா தாரம் நாலு சுகவதிட்
டானம் ஆறும் மணிபூரகம் பத்து
அனற்கதம் பன்னிரண் டாம்விச்சு அத்தி
எண்ணிரண் டக்க இணையம் இரண்டு
ஆறும் கடந்தநா தாந்தம் ஒன்று
ஆகக் கூடிய ஐம்பத் தொன்றும்
வெளிவளி யங்கியில் விளங்கும் எழுத்தின்
உறழ்ச்சியால் நாற்பத் தொன்ப தாகி
ஆதியந்த மாம் நாத விந்து
இரண்டுடன் கூட எழுத்தைம் பத்தொன்
ருகியா தாரத் தமைந்தன காண்க. (௰௨)

உரை

மூலாதாரத்தில் நான்கு எழுத்தும், சுகவதிட்டானத்தில் ஆறு எழுத்தும், மணிபூரகத்தில் பத்தும், அனற்கதத்தில் பன்னிரண்டும், விச்சு அத்தியென்னும் விசுத்தியில் பதினறும், அக்க இணையம் என்னும் ஆக்ஞையில் இரண்டும், ஆறு ஆதாரத்தையும் கடந்த நாதாந்தத்தில் ஒன்றும் ஆகிய எழுத்து ஐம்பத்தொன்றும், ஆகாயத்தின்கண் காற்று உலாவுதலால் உண்டாகக் கூடிய யவசி எழுத்தின் உறழ்ச்சியால் நாற்பத் தொன்பது எழுத்து ஆகி, எழுத்துக்கு ஆதியாகிய நாதமும், அந்தம் ஆகிய விந்துவும் ஆகிய இரண்டுடன் கூட ஐம்பத்தொரு எழுத்தாகி ஆதாரங்களில் அமைந்தன.

ஆதாரங்கள் ஆறு, நாதாந்தம் ஒன்று ஆகிய ஏழுவகை இடங்களிலும் விளங்கும் எழுத்தின் உறழ்ச்சி ஏழேழ் நாற்பத்தொன்பது என்பதனை ஆசிரியர் சுட்டிச் சொல்கின்றுர்கள்.

எழுத்துக்கு ஆதி நாதம் ஆகும். அந்தம் விந்து ஆகும்.

மேற்கூறிய எழுத்துக்கள் யாவும் ஆதாரத்தின்கண் இயல்பாய் அமைந்துள்ளன என்பார்.

எழுத்தைம் பத்தொன்ருகி ஆதாரத் தமைந்தன காண்க என்று குறிப்பிடுகின்றுர்கள்.

# ஆதார எல்லை இயல்

## வாக்காம் வாசியே எழுத்தை ஆக்கும் என்றது

**அமைந்து காணும் ஐம்பத் தொன்றும்**
**ஆக்கையுள் வாக்கு ஆகவா ஆக்கும்.** (௩)

### உரை

உடம்பின் அகத்தே நிலை பெறும் ஐம்பத்தோர் எழுத்தும் இயல்பாய் அமையுமாறு வளி என்னும் வா ஆக்கும்.

வா ஆக்கும் - ஆவளியாம் காற்றுனது ஆக்கும்.
ஆக்கை - உடம்பு

ஆவளிக்கு வாக்கு என்னும் பெயரும் உண்டு. ஆவளி ஆக்கையுட் புகுந்து வெளிவரும் போது வகார வடிவத்தில் வெளிவருகின்றது என்பது உடற்கூற்றியல் உணர்ந்தார்க்கு எளிதின் விளங்கும். ஆவளி மூலாதாரத்தினின்றும் மேல்நோக்கிச் செல்லும் போது அந்தந்த ஆதாரத்தின் வாகாய் அமைந்து செல்வதால் வாக்கு என்னும் பெயர் அதற்குப் பொருத்தமாகிறது.

## வகரம் கால் ஆகும் வகையுரைத்தது

**வகரம் கால்ஆம் வளியெழுத் தாகையால்**
**கணித குறிப்பிற் கால்ஆம் வகரம்.** (௪)

### உரை

'வ' என்னும் எழுத்தானது காலாகிய வளியினை (காற்றினை) உணர்த்தக் கூடிய எழுத்தாகும். ஆகையால் கணித நூலின் கண் 1/4 (கால்) என்னும் பின்னத்தை உணர்த்துவதாக இது அமைகிறது.

உயிரினங்களுக்கு நடை கொள்ள கால் அமைந்துள்ளது போல, வளியும் ஆதாரங்களிலும், நாடித்தாரைகளிலும் நடைகொள்ளும் இயல்புடைமை பற்றி வளியினைக் கால் என்று கொள்ளுமாறு மரபாகிறது.

## வாக்கு நாலில் ஐம்பத்தோர் எழுத்தும் தோன்றும்

**வகரம் ஆக்கும் வாக்கு நாலில்**
**ஐம்பத் தொன்றும் அடுக்கின் தோற்றம்.** (௫)





### உரை

வகரம் ஆனது (காற்றுனது) நிலைபெறச் செய்யும் நான்கு வாக்கில், எழுத்துக்களின் அடுக்கு ஐம்பத் தொன்றுகும்.

வாக்கு நான்கு : சூக்குமை, வைகரி, மத்திமை, பைசந்தி என்பனவாகும்.

சொற்களைக் கேட்கும் உறுப்பாகிய செவியே சூக்குமை என்று சொல்லப் பெறுகிறது. சொற்கொள்மெய் என்பது சூக்குமை என்றுயது. இது மரூஉ மொழியாம்.

சான்றுக விளங்கும் கண்ணே வைகரி என்று வகுக்கப் பெறுகிறது. வைகுகரி யென்பது வைகரி ஆயது.

மத்திமத் தானமாகிய மூக்கே மத்திமை என்று மொழியப்படுகின்றது.

பேச இயைந்த உறுப்பாகிய நாவே பைசந்தி என்று பகரப் பெறுகிறது. இஃதும் மரூஉ மொழியாகும்.

மேற்குறித்த நான்கும் காற்றினல் செயற்படும் தன்மை பற்றி வாக்கு என்று கூறப் பெறுகிறது.

# எல்லைக் கணக்கியல்

## மூலத்திற்றேன்றும் எழுத்துக்கள்

**க க்க ஙக ஙகை என்னும் நாலும்**
**முக்க மூலவுட் கத்திற் றேன்றும்.** (௬)

### உரை

க க்க ஙக ஙகெ என்னும் நான்கு எழுத்துக்களும் முக்குதலாகிய செயற்பாட்டினல் மூலமாகிய உள்மனையில் தோன்று நிற்கும்.

ககர வர்க்கமாகிய நான்கு ஒலிகளும், முக்குங்கால் மூச்சு உள்வரும் போதும் தோன்றுவனவாகும்.

உட்கம் - உள்மனை - உள்ளேகம் என்று அடங்கும் மூலம்.

## சுகவதிட் டானத்தில் தோன்றும் எழுத்துக்கள்

**ச ச்ச ஞ்ச ஞ்செ ஙரு எனும்ஆறும்**
**ஆறு மூச்சு அதனற் சுகவதிட்**
**டான அரைமையம் அதனிற் றேன்றும்.** (௭)

### உரை

ச, ச்ச, ஞ்ச, ஞ்செ, ங ஞ என்னும் ஆறு எழுத்துக்களும், ஆக்கையும், உளமும் புத்துணர்ச்சி பெற நீள இழுத்து உள்வாங்கும் மூச்சினுல் அரைமயம் என்னும் சுகவதிட்டானம் ஆகிய இரண்டாம் ஆதாரத்தில் தோன்றுவனவாம்.

ஆறும் மூச்சு - நீள இழுத்து உள்வாங்கும் மூச்சு.

அரைமயம் - சுகவதிட்டானம். சுகத்தைத் தோற்றுவிக்கும் இடம்.

## மணிபூரகத்துத் தோன்றும் எழுத்துக்கள்

**ட ட்ட ண்ட ண்டெ த த்த ந்த ந்தெ**
**ணந என்ன நவிலும் பத்தும்**
**அதட்ட மணிபூ ரகநிலை யான**
**அகலுள் எதனில் அணிபெறத் தோன்றும். (௰அ)**

### உரை

ட, ட்ட, ண்ட, ண்டே த, த்த, ந்த, ந்தே, ண ந என்று சொல்லக் கூடிய பத்து எழுத்துக்களும், அதட்டும் செயற்பாட்டால் மணிபூரகமாகிய அகலுள் அதனில் அழகுபெறத் தோன்றும்.

மணி என்பது ஈண்டு ஆவளியாகிய மூச்சினைக் குறிக்கும். ஆவளி, வாசி என்றும் கூறப்படும். ஆவளியாம் வாசி மீண்டும் புகும் இடமே மணிபூரகம் என்னும் தாரமாகும். ஆன்மாவை மாணிக்கம் ஆக்குவது மணியென்னும் வாசியேயாகும். வாசியை மணிபூரகம் வரை இழுக்கும் தன்மை ஒருவருக்கு வாய்க்குமானல் அதனைப் பிரமரந்திரம் அமைந்திருக்கும் சிரத்துள் செலுத்தும் யோகநெறிச் செயற்பாடும் எளிதில் அமையும். அதனல் சிரம் உள்மணியாம் சிரோன்மணியென்னும் நிலையினை ஆன்மா அடையும். இத்தகு உயர்நிலையை அடையச் செய்தலால் வாசி மணியென்று கூறப் பெறுகிறது.

அகநிலையான அகல் - அகத்தின் கண்ணே நிலைபெறும் வாசியாம் நெய்யினை வாங்கி, சோதியாம் சுடர்ஒளி தோன்றுதற்குக் காரணமான இடம் மணிபூரகம். ஆகலின் அகநிலையான அகல் என்று பெருந்தகையார் கூறுகின்ருர்கள். இதனல் அவர்களின் யோக நெறியின் நுட்பம் புலனுகின்றது.

அகல் - நெய், எண்ணெய் ஊற்றும் மண்சிட்டி.





## அருகத்துள் தோன்றும் எழுத்துக்கள்

**ப ப்ப ம்ப ம்பெ மயரல வழளற**
**என்ன வருபன் னிரண்டும் மனதின்**
**எழுச்சிப் பிதற்ற லின்னற் கதமாம்**
**திட்டன மேடை யுட்படத் தோன்றும். (௰௯)**

### உரை

ப, ப்ப, ம்ப, ம்பெ, ம ய ர ல வ ழ ற ள ஆகிய எழுத்துக்கள் பன்னிரண்டும் மனதின் கண்ணே அச்சவுணர்வு எழும் போது பிதற்றும் ஒலியாக அருகத்துள் தோன்றுவனவாம்.

அருகதம் என்னும் ஆதாரம் திட்டுப் போன்ற மேடாக அமைந்திருத்தலின் திட்டன மேடை என்று குறிப்பிடுகின்ருர்கள்.

அன, அன்ன என்பதன் இடைக்குறை உவம உருபு.

## விசுத்தியின் கண்தோன்றும் எழுத்தின் விவரம்

**அஆ இஈ உஊ க்ரு க்ரூ**
**க்லு க்லூ ஏ ஐ ஓ ஔ அம் அஃக**
**ஆக வருபதினறும் பொறிவாய்**
**உறழ்ச்சி மனேநிலை யொலியாய் விசுத்தி**
**ஆயசதுக்கத் தமைந்து தோன்றும். (௨௰)**

### உரை

அ ஆ இ ஈ உ ஊ க்ரு, க்ரூ, க்லு, க்லூ, எ ஐ ஓ ஔ அம் அஃக ஆகிய பதினறு எழுத்துக்களும் மனேநிலை ஆவளியுடன் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து பொறிகளின் கண்பொருந்தி உறழ்ச்சி கொள்ளும் காரணமாக விசுத்தியென்னும் ஆதாரத்தில் அமைந்து தோன்றும்.

விசுத்தியைச் சதுக்கம் என்று கூறுகின்ருர்கள். வளியானது ரேசக, பூரக, இடகலை, பின்கலை ஆக அமைந்து பயிலுதற்கு ஏற்ற இடமாக இருத்தலின்.

## அக்க இணையத்தில் தோன்றும் எழுத்துக்கள்

**எஒ என்னும் இரண்டு மென்மையும்**
**மத்திம ஒலியினு மாகி அக்க**
**இணையமுச் சந்தி யிடமாய்த் தோன்ற**

**ஆறு தார மனைத்தும் சார்ந்து**
**ஒன்றுய் னகாரம் ஒடுக்கம் காட்டி**
**ஐம்பத் தோரெழுத் தானவா காண்க.** (உ௰௧)

**உரை**

எ, ஒ என்னும் இரண்டு எழுத்துக்களும், மென்மையும், மத்திமம் ஆகிய ஓசையினைப் பெற்று அக்க இணையம் என்னும் ஆதார முச்சந்தியில் தோன்றவும், னகாரம் எழுத்தானது, ஆறு ஆதாரங்கள் அனைத்திலும் சார்ந்து, தன்மையாக நின்று எல்லா எழுத்துக்களுக்கும் ஒடுக்கமாம் வரையறையினைக் காட்டி, ஐம்பத்தொரு எழுத்தாக அமைந்து நின்றன.

கண்கள் இணைந்து ஒன்றும் இடமாதலின் ஆக்கை என்னும் ஆதாரம் அக்க இணையம் என்று கூறப் பெறுகிறது.

அக்கம் - கண்கள்

இடகலை, பின்கலை, சுழிமுனை ஆகிய மூன்று நாடிகளும் சந்திக்கின்ற இடமாதலின் ஆக்கை முச்சந்தி என்று கூறப் பெறுகிறது.

**மொழியொலி அனைத்துக்கும் மூலம் உரைத்தது**

**ஐம்பத் தோரெழுத் தான விந்நிலை**
**உயிர்வளி மனோநிலை யொன்று கூடிப்**
**பலவகை மொழியாம் பாகு பாட்டைக்**
**கடந்தெம் மொழிக்கும் கருவாய் நின்றுள்**
**அகத்திய மாம்வாக் காகி க்ஒ**
**ஆதி யந்த மானதாற் கோஆய்**
**மொழியொலிக் கெல்லாம் முதலாய் நிற்கும்.** (உ௰உ)

**உரை**

ஐம்பத்தோரெழுத்தாகிய இம்முறையானது, போதத்தை(ஞானத்தை)த் தரும் பரம்பொருள் என்று சொல்லும்படியாக, வாக்கு என்னும் வாசியானது வீணாகமல் ஆறு ஆதாரத்திலும் மலர்தலைப் பொருந்தியதால், ஆக்கையை நிறைவிடமாகப் பெற்று இயங்கும் இயமானன் என்னும் உயிராய் இயைந்து, மொழிகளின் வேறுபாடுகளுக்கு உட்படாமல் க், ஒ என்னும் ஆதியும் அந்தமும் தோன்றலால் கோ என்று வழங்கும் கொள்கையுடையதாகி, எல்லா மொழிகளுக்கும் மூலமாக அமையும்.





இறைவனர் எல்லா உயிர்களுக்கும் ஆதியாகவும் அந்தமாகவும் இருப்பது போன்று, 'க்' முதலாகவும் (ஓ) அந்தமாகவும் உள்ளதால் மொழி போத சுயம்பு என்னும் பொருளாகிறது.

**மேற்கூறியதையிரட்டித்துக் கூறியது**

ஐம்பத் தோரெழுத் தான இந்நிலை
உயிர், வளி, மனோநிலை ஒன்று கூடிப்
பலவகை மொழியாம் பாகுபாட்டைக்
கடந்தெம் மொழிக்கும் கருவாய் நின்றுள்
எகத்திய மாம்வாக் காகி க்ஓ
ஆதி யந்தம் ஆனதாற் கோவாய்
மொழியொலிக் கெல்லாம் முதலாய் நிற்கும்

ஐம்பத் தொரு எழுத்தாகிய இந்த நிலையானது, உயிரும் வளியும் (வாசியும்) மனோ நிலையும் ஒன்று சேர்வதால், பலவகையான மொழிகளின் பாகுபாட்டினைக் கடந்து, எல்லா மொழிகளுக்கும் மூலமாகிய நிலை பெற்று, ஆக்கையின் அகத்தே இயமாகிய வாக்காகி க், ஓ என்னும் எழுத்துக்கள், எல்லா எழுத்துக்களுக்கும் முதலும் முடிவும் ஆனதால் கோ என்பதாகி, மொழிகளின் ஒலிகள் அனைத்திற்கும் முதலாக நிற்கும்.

## கணக்கு உருவ இயல்

**மொழியொலிக் கெல்லாம் முதலாய் நின்ற**
**ஆறு தார மதன்சார் புருக்கொண்**
**டெழுத்தாய் விளங்கு மிதன் தற் போக்கைப்**
**போத சுயம்பாய்ப் பொலிவுறச் செய்ய**
**அகர முதலாய் னகரம் ஈறாய்**
**அன்னம் என்ன அத்துவம் கொள்ளும்.** (உ௰௩)

**உரை**

மொழிகளின் ஒலிகளுக்கெல்லாம் காரணமாக நின்ற ஆறு ஆதாரங்களைச் சார்தலினுல் அதன் உருவினைப் பெற்று எழுத்தாக விளங்கும் இதன் தன்மைத் திறத்தை ஞானத்தினை நல்கும் பரம்பொருளாகப் பார்க்க முற்படுங்காலத்து, அகரம் முதலாகவும் னகரம் ஈருகவும் அமைந்து அன்னம் என்று சொல்லும்படி ஆதார அத்துக்களில் தோன்றி விளங்கும்.

எழுத்துக்களைப் பரம்பொருளாகக் காண்பது இந்த நாட்டின் தனிச் சிறப்பாம்.

எழுத்துக்களின் ஆதியையும் அந்தத்தையும் கூறவே அவை இறைவனின் தன்மையைப் பெற்றவை என்பது விளங்கும்.

அத்துவம் - அத்தில் தோன்றுவது

அத்து - ஆதார எல்லை

**ஆதார வடிவே எழுத்தின் வடிவென்றது**

**அத்தில் துவம் கொண்டமையும் இவற்றின்**
**உருவமும் அஃதஃ துள்ளவா றேயாம். (உ௰௪)**

**உரை**

ஆறு ஆதாரங்களின் எல்லையில் (அத்தில்) தோன்றியமைகின்ற எழுத்துக்களின் உருவ அமைப்பும், அவை சார்ந்த இடத்தின் வடிவத்தைப் போன்றதேயாகும்.

**ஆதார ஆதேய வடிவம் உரைத்தது**

**அவையாவன.**

**ஆறு தாரங்கள் ஆறிலஃ தேயம்**
**ஆதேயங்கள் ஆறில் மூலம்**
**முட்டை வடிவமாய் மோவாய் தனிலும்**
**அதன்மேற் சுகவதிட்டானம் சதுரமாய்த்**
**திறந்த வாயிற் றிகழும் வடிவிலும்**
**அதனில் மணிபூ ரகம்பிறை கோண**
**வடிவாய் வார்த்தை வழங்கு நாவிலும்**
**அதன்மேல் அனற்கத மானது மூன்று**
**கோண வடிவாய்க் கோணந் தனிலும்**
**அதன்மேல் விசுத்தி யறுகோ ணங் கொண்**
**டெழில்விழி வட்டத் திருபுறங் களிலும்**
**அதனள வளவாம் ஆக்ஞை வட்ட**
**வடிவாய்க் காதிலும் மதியு மிரவியோர்**
**இரண்டும் ஆதாரம் எல்லாம் சார்புற**
**றிடம்வலம் மேற்கீழ் எய்தும் உருவும்**
**கொண்டெழுத் துருப் பொதுக் குறிப்பைக் காட்ட**
**விவை யெழுத் துப்பொது விரேகையாகி**





**விதிக்குறிப் பாகவும் வினைக்குறிப் பாகவும்**
**அமைந்தும் அமைக்கவும் ஆக்கங்காட்டும். (உ௰௫)**

**உரை**

ஆதாரம் ஒன்றைத் தாங்கி நிற்கும் பொருள் ஆதேயம் - ஆதாரப் பொருள்மேல் அமைந்திருப்பது. ஆதாரத்தின் உருவத்தை ஆதேயம் பெறும். அஃதேயாம் என்பதே ஆதேயம் என வந்துள்ளது. இது மரூஉ மொழியாகும். முதல் ஆதாரமாகிய மூலாதாரம் முட்டை வடிவமாகும் இதன் ஆதேயம் மோவாயாகும். இஃதும் முட்டை வடிவமாகவே அமைந்துள்ளது. இதனைத் தாவாய் என்று மக்கள் கூறுவர். தாவாயின் பள்ளத்திலிருந்து விரலினால் கோடிட்டு வந்தால் அது முட்டை வடிவமாகவே முடியும்.

இரண்டாம் ஆதாரமான சுகவதிட்டானம் சதுர வடிவம் உடையதாகும். அதன் ஆதேயம் வாய் ஆகும். வாயும் சதுர வடிவைக் கொண்டதாகும் வாயின் மேலுதட்டையும், கீழ் உதட்டையும் திறக்கும் போது இதன் வடிவத்தையுணரலாம். இந்தச் சதுரத்தைக் குத்துச் சதுரம் என்று பெருந்தகையார் கூறுவார்கள். சாய் சதுரம் என்றும் கொள்ளலாம்.

மூன்றுவது ஆதாரமாகிய மணிபூரகம் பிறைகோண வடிவமாகும். இதன் ஆதேயமாகிய நாக்கும் பிறைகோண வடிவம் உடையதாகும்.

நான்காவது ஆதாரமாகிய அனுகதம் முக்கோண வடிவம் உடையதாகும். இதன் ஆதேயமாகிய மூக்கும் முக்கோண வடிவம் உடையதாகும்.

ஐந்தாவது ஆதாரமாகிய விசுத்தி அறுகோணம் உடையதாகும். இதன் ஆதேயம் ஆகிய விழியின் இருமருங்கும் அறுகோணம் உடையதாகும்.

ஆறுவது ஆதாரமாகிய ஆக்ஞை வட்ட வடிவம் உடையதாகும். இதன் ஆதேயமாகிய செவியின் உட்பகுதி வட்ட வடிவமுடையதாகும்.

மதியாகிய இடகலையும் இரவியாகிய பின்கலையும் ஆதாரம் அனைத்தையும் சார்ந்து இடமாகவும், வலமாகவும் மேல்கீழ் எய்தும் வடிவத்தைப் பெறும் இந்த உருவம் எழுத்தின் பொதுக் குறிப்பைக் காட்டும். அனைத்து மொழிகளின் எழுத்தினது பொது உருவை மேற்கூறிய ஆதார ஆதேய வடிவங்கள் அனைத்தும் எழுத்துக்களின் பொதுக் குறிப்பையுணர்த்தும் இரேகையாகி விதியோன் விதித்த குறிப்பாகவும், செயற்குறிப்பாகவும் அமைந்து அமைக்கவும் உள்ள ஆக்கத்தைக் காட்டும்.

## அன்னத்துவ இயல்

ஆக்கங் காட்டும் அமைப்பை விளக்கிய
நுண்மை யுணரும் நுழைபுல னுடையோர்
அக்கரம் அக்கர அந்தம் ஆய.
மொழிவ கைக்குரு மூலம் அறிவது
அன்றிப் பொய்யை மெய்யாய் ஆக்கி
வித்து வைத்த விதிசெய் யெழுத்தாம்
இயர ஏக யியையிரே கையையும்
மெய்பொய் யாகி வீழ்ந்த பின்னர்
தலைப்படக் காணும் நிலைப்படி லேகையாம்
இல்லம் ஏக இயையிலே கையையும்
காண்விதி யுணர்கா விதிய ராகலாம். (௨௧௬)

உரை

எல்லாவகையான ஆக்கத்தினையும் காட்டும் அமைப்பினை விளக்கமாகக் கூறிய சான்றோர்களின் நுட்பமான கருத்துக்களையெல்லாம் தம்முடைய கூர்த்த மதியால் உணரும் அறிவினையுடையவர், எழுத்து, எழுத்தின் வடிவம் ஆகிய மொழியின் கூறுபாட்டுக்குரிய மூலத்தினை அறிவது அன்றியும், பொய்யாகிய உடம்பினை மெய்யென்று சொல்லும் வண்ணம் நியமித்து வேதன் செய்து வைத்த இயர ஏக இயை ரேகையினையும், மெய்யென்று சொல்லப்படும் உடல் பொய்யாக வீழ்ந்த (இறந்த) பின்னர், மண்டை ஓட்டின் கண் காணும் நிலையில் தோன்றுகின்ற இல்லம் ஏகப் பொருந்துகின்ற இலேகையையும் கண்டு உணரக்கூடிய காவிதியரும் ஆகலாம்.

இலேகை - மண்டை ஓட்டில் தோன்றுவது. இல்லமாகிய உடல் இறந்தபின் தோன்றுவது.

இரேகை - கையின் கண் தோன்றுவது.

ஆதாரங்கள் ஆறு என்பதனையும், அவற்றின் வடிவங்கள் ⬯ ◇ ◡ △ ◁ ▷ ○ இவை என்பனவற்றையும், இந்த வடிவங்களையே எழுத்துக்கள் பெற்றிருக்கின்றன என்பதையும் மேலே குறிப்பிட்டுள்ளார்கள். இவைகள் எழுத்துக்களின் உருவங்களாகப் பயன்படுவதோடல்லாமல் கையின் கண்ணே அமைந்துள்ள இரேகை வடிவமாகவும் இருக்கின்றன என்பதை ஈண்டு குறிப்பிடுகின்றார்கள்.





இலேகை - மண்டை ஓட்டில் பொறிக்கப்பட்டுள்ள குறியீடுகள்

இரேகை - கையின்கண் அமைந்துள்ள குறியீடுகள்

கைரேகை வல்லுநர்கள் மாந்தர்களின் கையில் அமைவன முப்பத்திரண்டு இரேகை என்றும், அவற்றுள் சிறப்பாகத் தெரிந்து கொள்ள வேண்டியவை 14 என்றும், பார்த்துப் பலன் சொல்லப் போதுமானது 10 என்றும் குறிப்பிடுகின்றார்கள். இந்தப் பத்தும் ஆதாரங்களின் வடிவமாக மேற்காட்டிய ஆறனுள் அடங்கும் என்றும் கூறுவர். இந்தக் குறியீடுகள் கைவிரல்களின் அங்குல அத்துக்களிலும், குரு, சனி, சூரியன், புதன், செவ்வாய், சந்திரன், சுக்கிரன் ஆகியவற்றின் மேடுகளிலும் செவ்வாய்ச் சமவெளியிலும் அமைந்துள்ள தன்மைக்கேற்பப் பலன் சொல்ல வேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளனர்.

இய ர ஏக இயை என்பனவற்றின் சுருக்கமே இரேகை என்பதாகும்.

இயம் - ஒலி, ர அந்த ஒலியால் நடத்தப் பெறும் காலாகிய வளி. ஏக - அதைச் செலுத்தும்படியாக வுள்ள. ஐ - தலைவன். அவன் குறிப்பே இரகை. ஆகவே இரேகை என்பது இறைவனுடைய குறிப்பெழுத்து என்பதாகும். இத தவிர வேறுவகைப்பட்ட குறியீடுகளும் காணப்படுகின்றனவே என்று ஐயுறல் வேண்டா. வடிவெழுத்தும், தன்மை எழுத்தும், சார்பெழுத்தும் உள்ளன போல இரேகையிலும் வடிவம், தன்மை, சார்பு என்பன உண்டாம் என்றுணர்க.

இலேகை என்பது ஆக்கை வீழ்ந்து விட்டபின்னர் மண்டையில் காணப்பெறுவது.

இல்லம் ஏக இயை என்பதன் சுருக்கமே இலேகை என்பதாகும்.

மண்டை ஓட்டின் கண் எவ்வெவ்விடங்களில் எந்தக் குறி அமைந்திருக்கிறதோ அதற்கேற்ப பலன் கூறுவர். இலேகை வல்லுநர், இவை இரண்டையும் இரேகை என்றே குறிப்பினும் இழுக்கில்லை.

### அகத்தின் அழகை அமைய வுரைத்தது

ஆகம் ஆக வமைந்த பொருளோ
டொ ன்றிக் கோபதி யுறலே யகமாம். (௨௧௭)

உரை

கோ என்னும் உயிரானது, தனக்கு இல்லமாக உடம்பு அமைதற்கு நிமித்த காரணமாக இருந்த பதியை (பரம்பொருளை) ஒன்றிப் பொருந்துதலே அகமாகும்.

ஈண்டுக் கூறும் அகத்திற்கும், அகப்பொருள் இலக்கியம் இலக்கணம் கூறும் அகத்திற்கும் வேறுபாடு உண்டு.

இது யோக நெறியின் உச்சம். அது போக நெறியின் உச்சம்.

இறையொடு கலந்த உயிர் வேறுபாடின்றி இயைதலாம். உலகில் அகப்பொருள் கூறும் அகம் சற்றே தோன்றி வேறுபாடுறுவதாம்.

**வாக்குத் தோன்றும் வளஞ் செப்பியது**
**அகமாய் நின்ற தகப்புற மாகி**
**மனோநிலை வளியுற வாக்குத் தோன்றும். (உ௰அ)**

உரை

உயிரானது பரம்பொருளின்கண் ஒன்றிய நிலையிலிருந்து நீங்கி அகப்புறமாகிய நிலையில், மனோநிலையும், வாயுவும் இயைவதால் வாக்கானது தோன்றுகின்றது.

பரம்பொருளை விட்டு எள்ளளவு உயிர் பிரிந்தாலும் அது அகப்புறமாகிறது. ஆங்கு மனோநிலையும், வளியும் (வாசியும்) உயிரினடத்துத் தோன்றிவிடுகின்றன. தோன்றவே வாக்கும் தோன்றுகின்றது.

"மன்மனம் எங்குண்டு வாயுவும் அங்குண்டு" என்னும் திருமந்திர அடி ஈண்டு நோக்கத் தக்கது.

**வாக்கு ஈரிரு வகையாய் ஐம்பத்**
**தொன்றாய் அகத்தில் ஒலிப்ப தகத்தியம். (உ௰௯)**

உரை

வாக்கானது நான்கு வகையால் வகையாய் அமைந்து, ஐம்பத்தொரு எழுத்தாக அகத்தின் கண்ணே ஒலிப்பது அகத்தியமாகும்.

**அகத்திய வொலியெழுத் தாக்கும் வகையின்**
**விளக்க விரியே மேற்சொல் லியதாம். (௩௰)**

உரை

மேலே கூறப்பட்டது அனைத்தும் அகத்திய ஒலியை எழுத்தாக்கும் விளக்க விரியே ஆகும்.

வாக்கு நாலின் வகையுஞ் சுட்டி அதன் ஆக்கமாம் இரேகை, இலேகை நூலுரைத்தது.





**அதனுள் வாக்கா யமைந்த நாலுள்**
**சொற்கொள் மெய்யும் துழநி யாகிப்**
**பேச இயைந்த பெற்றியு டையதும்**
**முதல்சார் பென்ன மொழியும் எழுத்தின்**
**கருவாய் நிற்பதூஉம் காட்டினோம் மேலும்**
**ஒலியுருப் பொருளிவ் வருவாய் வைகுங்**
**காணென வைகு கரியாய் நிற்பதும்**
**மற்றுண் மெய்யாய் வயங்கி நிற்பதும்**
**வடிவுந் தன்மையும் ஆம் எழுத் திரண்டின்**
**கருவாய் நிற்குங் காண்க இவையே**
**இரேகை இலேகை இரண்டி லுருவும்**
**தன்மையு மாகச் சமைந்துள தெனக**
**இதன்வகை விரியே இரேகை நூலாம். (௩௰௧)**

**சொற்கொள் மெய்யை சூக்குமை. என்றும் பேச இயைந்ததைப்**
**பைசந்தி என்றும், வைகுகரி யை வைகரி என்றும்**
**மற்றுண்மெய்யை. மத்திமை என்றும் வட நூலார் கூறுவர்.**

காது, வாய், கண், மூக்கு ஆகிய நான்கும் வாக்கு என வழங்கப்படும். இவை வாக்காகிய ஆவளியால் இயக்கங் கொள்வதால் வாக்கு என்று வழங்கப் படுகிறது.

உரை

மேற்கூறியவற்றில் வாக்கு என்று சொல்லும்படி அமைந்த நான்கனுள் சொற்களை ஏற்றுக் கொள்ளும் செவியும் ஒலி முழக்கத்துடன் பேசுதற்கு இயைந்த உறுப்பினைக் கொண்ட வாயும், முதல் எழுத்தென்றும், சார்பெழுத்தென்றும் சொல்லக்கூடிய எழுத்துக்களின் கருவாக நிற்பதையும் காட்டினோம்.

மேலும் ஒலியின் உருவத்தைக் கொண்டவை, இவ்வரி வடிவ வுருவத்தோடு விளங்கும் அவற்றைக் காண் என்று கூறும் வண்ணம் நிலைபெற்றுச் சான்றுக விளங்கும் வைகரியும், மெய்யின் உள்ளே நிலைபெற்று மெய்யாகவே இயங்கும் தன்மையது மத்திமையென்பதும், அது வடிவத்தையும் தன்மையினையும் விளக்குங் கருவாக அமையும். இவையே இரேகை, இலேகை இவற்றின் உருவமும், தன்மையுமாக அமைந்திருக்கின்றன. இவ்விரண்டு வகையின் விளக்கமே இரேகை நூலாம்.

சொற்கொள் மெய் காது. இதனைச் சூக்குமை என்றும். பேச இயைந்த பெற்றியுடையது நாவினைக் கொண்ட வாய். இதனைப் பைசந்தியென்றும். எல்லாவற்றிற்கும் சான்றாக விளங்குவது வைகுகரியென்னும் கண். இதனை வைகரி என்றும். உடம்பின் உள்ளே நிலை கொண்ட மெய்யை மெய்யாகி இயக்கி. இயங்கும் வளியியங்கும் இடமாகிய மூக்கினை மத்திமை என்றும் கூறுவர்.

காது. வாய். கண். மூக்கு ஆகிய வளியால் இயக்கங் கொள்ளும் உறுப்புக்களை சூக்குமை. பைசந்தி. வைகரி. மத்திமை என்று வடநூலார் வழங்குவர். இந்நான்கையும் சொற்றொடராக விரிவாக்கிக் காணும் போது தமிழாதல் பெறப்படும்.

**அண்ட வெளியி லகவெளி தன்னி லமையவுறக்**
**கண்ட வொலியெழுத் தாதாரம் எல்லை கணக்குருவங்**
**கொண்ட முறைமையஃ தன்னத் துவமாய்க் கொளுமுருவம்**
**பண்டமை யச்செய்ய லேழு முணர்பவர் பண்டிதரே. (௹௨)**

**உரை**

அண்ட வெளியென்னும் ஆகாயத்திலும். ஆக்கையின் கண் அமைந்த வெளியிலும். உண்டாகும் ஒலி. எழுத்து. ஆதாரம். எல்லை. கணக்கு. உருவங் கொண்ட முறை. அஃது அன்னத்துவமாய்க் கொள்ளும் உருவம். இவை ஏழினையும் பண்டுள்ள முறைப்படியே உணர்பவர் பண்டிதர் ஆவார்.

## அகத்தியம் பாலினின் இயம் தோன்றல்

ஆறு ஆதாரத்தின் அமைந்த இயமானது புறத்திலும் புறப்புறத்திலும் ஒலிக்கும் தன்மையைக் கூறுவது.

**ஒலியெழுத் தக்கர உருவாய் அகமும்**
**அகப்புறமுங் கடந் தாமியல் கூறுவாம் (௹௩)**

**உரை**

ஒலியாகிய எழுத்து அக்கர உருவாகி அகத்தையும் அகப்புறத்தையும் கடந்து இயங்கும் தன்மையைச் சொல்லுவோம்.

**கூற வாக்காய் குறிகொள நின்றதை**
**இயம்எனும் ஒலியால் இயம்பல் வாகக்யம். (௹௪)**





**உரை**

அகத்தின் கண்ணே வாக்காகி ஆதாரத்தின் வடிவமாகப் பொருந்தி நின்றதை (அகத்தியத்தை) செவியால் புறப்புறத்தக் கேட்கும் வண்ணம் வாயினுல் இயம்புவது வாக்கியம்.

வாக்கியம் - செவியினுல் கேட்கும் வண்ணம் வாயினுல் இயம்பப்படுவது.

**இவைதாம்**
**தற்பவம் என்றும் தற்சமம் என்றும்**
**மற்றெரு வகையால் வழங்கப் பெறுமே. (௹௫)**

**உரை**

புறப்புறத்தே ஒலிக்கும் ஒலித் தொகுதியானது தற்பவம் என்றும் தற்சமம் என்றும் வேறு ஒருவகையானும் வழங்கப் பெறும்.

## பகாஉ விதமாம் பிராகிருதம் இதே.

**அதுமொழி வகைகள் அனைத்திற் காதி**
**யாகினும் உளக்குறிப் பதனை வெளியிட்டு**
**ஒலித்து உணர்த்தற்கு உதவும் வகையில்**
**செந்நெறி யினதாய்ச் செய்யுங் காலை**
**அகலம் களத்துற்று அகலமாய் ஒலியை**
**ஒலிக்க உதவும் அங்குற்ற எழுத்தோ**
**அகரம் முதல வாகும் ஆனஅந்**
**நெறி பிறழாத நிலையில் அகரம்**
**முதலாய் அமைய முறைமைப் படுத்த**
**ஒன்றுய் வேறுபா டெய்தி ஆண்பெண் வேறுபாடின்றி நின்றது**
**இரவி மதியென் னியற்கைத் தாகி**
**விந்து நாத மிவைதலைப் பட்டுக்**
**காணப் பன்னிரு கலைபதி னாறு**
**கலையின தான் நிலையாய்த் தென்வட**
**திசையின தென்று தேசியம் கூற**
**அமையும் அவ்வாறுய் அமைந்து நின்ற**
**தென்வட திசையகத் தெய்தும் திசையே**
**உணர்க ஒன்றே ஓரிரண் டானது**

**இரண்டொன் றுக இணையல் இழுக்கல**
**ஆயினும் ஆண்மை யான தென்மொழித்**
**திறமும் அதன்பெருஞ் சிறப்புங் காட்டுதும்.** (௫௰௬)

**உரை**

பகுக்க முடியாத இரண்டாய் விளங்கும் அத்தன்மையானது மொழிகளின் கூட்டத்திற்கு முதலாக இருந்தாலும் உள்ளத்தின் கண்ணே தோன்றும் கருத்தினை வெளியிட்டுக் கூறும் வகையில் செம்மையான முறையாகச் செய்யும் போது, மாறுபாடின்றி அகத்தின்கண் அமைந்த அகத்தியத்தை, புறத்தே ஒலி வகையான் உதவும் முறையில் அங்குப் பொருந்திய எழுத்து வகை அகர முதலனவாக ஆக்கப் பெறும்.

அவ்வாருகிய அம்முறை பிறழாத நிலையில் அகரம் முதலாக அமையும்படி முறைப்படுத்த வேறுபாடு இல்லாமல் ஒன்ருக நின்றது. இரண்டாக வேறுபாடு அடைந்து, ஆண் என்றும், பெண் என்றும், இரவியின் கூறு என்றும், மதியின் கூறு என்றும், பிரித்துக் கூறும் இயல்பினைப் பெற்று, விந்தும், நாதமும் ஆகிய இவைகள் தலைப்பட்டுத் தோன்ற, பன்னிருகலை பதினறுகலைகளைக் கொண்ட தென்மொழி என்றும் வடமொழி என்றும் கூறும் வண்ணம் அமையும். தென்திசையென்பதும், வடதிசையென்பதும் அகத்தின் கண்ணே பொருந்தியனவேயன்றி, நிலத்தின்கண் அமையும் தெற்கு, வடக்கு ஆகா.

அகத்தின் கண்ணே ஒருமைப்பாட்டுடன் நிலைபெற்ற அமைப்பே புறத்தே வாக்கியமாக இசைக்க இரண்டாக ஆயது. இரண்டாக அமைந்த இந்நிலையானது ஒன்ருகத் திரும்பவும் இணைதல் குற்றமன்று என்ருலும், ஆண்மைத் தன்மையுடைய தென்மொழியின் திறமும் அதன் பெருஞ்சிறப்பும் விளங்கும் வண்ணம் உரைக்கின்ருேம்.

## தீரங்காட்டும் தென்மொழிச் சிறப்பியல்

**காட்ட இரண்டாய்க் காண நின்ற**
**இரவி மதியின் இயல்பை நோக்கின்**
**வழுவறு நிலைமையும் மாறுத லில்லாத்**
**தெளிவும் ஆண்மைச் சிறப்பும் கொண்டது**
**இரவியாம் தென்மொழி இயற்கை யாகும்.** (௫௰௭)





**உரை**

மதிநுட்பம் உடையோர் இரண்டாகக் காணும் வண்ணம் எடுத்துக்காட்டிய இரவி (சூரியன்) மதி (சந்திரன்) ஆகிய இரண்டின் நிலைமையை நோக்கும் போது குற்றமற்ற நிலையும், மாறுபாடு கொள்ளாத தெளிவும், ஆண்தன்மை ஆகிய சிறப்புங் கொண்டது சூரியனின் தன்மையாய் அமைந்த தென்மொழியாம் தமிழ் மொழியின் இயற்கையாகும்.

பின்னர் வரும் நூற்பாக்களால் இவற்றின் தன்மையை உணரலாம்.

**வழுவறு நிலையும் மாறுத லுடன்உட்**
**களங்கமும் அடங்கக் கனிவு காட்டி**
**விழைபொறிப் பெண்மை மேவக் கொண்டது**
**மதியென நின்ற வடமொழி இயற்கை** (௫௰௮)

**உரை**

வழுவற்ற தன்மையும் மாறுபாடு கொள்ளும் நிலையுடன் தன்னிடத்து இருளனைய உட்களங்கத்தையுங் காட்டி, விருப்பத்தைத் தரும் பொறிகளும், பெண்மைத் தன்மையும் அமைந்தது. மதியின் கூருக நிலை பெற்ற வடமொழியின் தன்மையாகும்.

**தனித்து நின்று சாதித் தாண்மை**
**செலுத்தும் செயலிற் றீரங் காட்டுதல்**
**தென்மொழிக் குரிய சிறப்பாம் என்க.** (௫௰௯)

**உரை**

பிற மொழிகளின் துணையில்லாமல், தனியாக நின்று இயங்கவும், பிறவற்றை இயக்கவும் முடியும் என்பதனைச் சாதித்துக்காட்டி, ஆளுந்தன்மையில் தீரமும் காட்டுவது தென்மொழிக்குரிய சிறப்பாகும்.

**இந்நிலைத் தனியில் லாகத் துணையாய்**
**வழுக்குறு பாச மணைய வரினும்**
**கொண்க ளுகக் கொண்டு நின்று**
**தன்வழி நடத்துதல் தென்மொழிச் சிறப்பாம்.** (௬௰)

**உரை**

இங்ஙனம் தனித்து நின்று செயலாற்றும் நிலையின்றி வழுக்குதலைச் செய்யும் பாசத்தோடு துணையாகத் தன்னுடை இயங்கவரினும், தலைவனும் நிலையில் நின்று, அதனைத் தன்னியல்பின் நெறி நடத்துதல் தென்மொழிச் சிறப்பாகும்.

தென்மொழிச் சேர்க்கையிற் சிறந்த வடமொழி
மயக்காம் பாச வழுக்களில் வீழ்ந்து
பாசம் இயைந்த பாசைகள் பலவும்
தோன்றப் பசுவான் றுணைமை நிற்பினும்
கூடுதல் பிரிவுறும் கொள்கையிற் பியல்
காண விவ்விரண் டானதே மிஞ்சும். (௪௰௧)

உரை

தென்மொழியுடன் சேர்வதால் சிறப்பினை அடைந்த வடமொழியின் மயக்காகிய பாச வழுக்குந் தன்மையில் வீழ்ந்து விட்ட மொழிகள் பலவும் வடமொழியின் சாயலாகவே தோன்ற, பசுவுக்கு ஆனேறு துணையாக நின்றாலும், கூடுதல் பிரியுந்தன்மையில் பிரிவுறு நிலையைக் காணும் போது இவ்விரு மொழிகளின் இயல்பே தோன்றுமல்லது, பிற மயங்கிய மொழிகளின் சாயல் தனித்துத் தோன்றுது.

## மொழிகளின் அகமும் புறமுமாகக் காணப்படுதல் இவை இரண்டேயாதலின் ஆதாரசுக்க அமைபாம் எழுத்தியல்

மிஞ்சுதல் இன்றி வேறு வேறும்
இயற்கையிற் றற்சமம் எய்தி நின்ற
மொழியிற் றென்மொழி மூல முதலாம்
ஆறு தார அடுக்கில் நடக்கும்
கலை மூன்றுன நிலையை மேற்கொண்
டறுமூன் றுகி யாதார சூக்க
மெய்யெழுத் தாக விளங்கும் என்க (௪௰௨)

உரை

மொழியின் வரம்பின் மிகாமல் வேறு வேறுகி வரும் இயற்கையிலும் தற்சமம் எய்திநின்ற மொழியில், தென்மொழியாம் தமிழானது, மூலம் முதலாகிய ஆறு ஆதார அடுக்கில் நடைகொள்ளும், இடகலை, பின்கலை, சுழிமுனை ஆகிய மூன்று கலைகளின் தன்மையினை மேற்கொண்டு, அறுமூன்று பதினெட்டு என்னும் எண்ணிக்கையைப் பெற்று ஆதாரங்களின் சூக்கும மெய்யெழுத்தாக விளங்கும்.

ஆறு ஆதாரத்தின் கண்ணும் மூன்று கலை நிலையும் பயின்று வருதலால் மெய்யெழுத்துக்கள் - 6X3=18 ஆக அமையும்.





## தூலமாகத் தோன்றும் வடமொழி

விளங்கும் இந்நிலை வெளிமண் டலத்தில்
உடுவிரு பத்தேழ் உடனோர் ஐந்தாம்
கோள்நிலை யொன்று கூடமுப் பத்திரண்
டான தோற்றத் தமையுடு பதியென
விழைபொறி யைந்துடன் மேவிரு பத்தேழ்
உறுப்புங் கொண்ட ஒன்றுந் தூலமாய்
வெள்ளிடை யாக விளங்கும் வடமொழி (௪௰௩)

உரை

தென்மொழியின் கண் ஆதார சூக்குமாக தோன்றும் மெய்யெழுத்துக்கள் வடமொழியில் தூலமாகத் தோன்றும் இயல்பையுடையன என்பதனை இந்நூற்பாவால் குறிப்பிடுகின்றார்கள்.

வெளி மண்டலத்தில் தோன்று நிற்கும் விண்மீன்களுடன் இருபத்தேழுடன், விண்மீன்களின் தன்மை அமைந்த, செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய கோள்கள் ஒன்று கூட முப்பத்திரண்டான தோற்றத்தின் அமையும் சந்திரன் என்னும்படி விருப்பத்தினைத் தரும் பொறிகள் ஐந்தடன் இருபத்தேழ் உறுப்பும் பொருந்தும் தூலமாக வடமொழி வெளிப்படையாக விளங்கும்.

ஞாயிறு, திங்களை விடுத்த ஏனைய ஐந்து கோள்களும் விண்மீன் தன்மையை எய்துதலின், விண்மீன்களோடு எண்ணப்பட்டன. இவைகளே விருப்பத்தினைத் தரும் பொறிகள் ஐந்தாகவும் கூறப்பட்டன.

செவ்வாய் வாயினைக் குறிக்கும். புதன் நாசியினை உணர்த்தும். வியாழன் செவியினையுணர்த்தும். வெள்ளி கண்ணினையுணர்த்தும். சனி இவையனைத்தையும் தாங்கிய மெய்யினையுணர்த்தும்.

## வடமொழி யமையு மரபியல் விளக்கம்

அ. இ. உ, என அமையும் மூன்று
நெடிலோ டாறுய் நிலவுதல் காட்ட
அடுக்கில் ஆறுய் அமையும் ஙகரம்
இறுதி யாக இயையல் அ இ உ ண் (௪௰௪)

**உரை**

அ இ உ என்னும் எழுத்துக்கள் மூன்றும் தமக்குரிய நெட்டெழுத்துக்களோடு ஆறு எழுத்துக்களாக விளங்கவதைக் காட்டும் வண்ணம், மெய்யெழுத்தின் வைப்பு முறையில் ஆறுவதாக அமையும் ணகரத்தை அ இ உ என்பனவற்றினுடன் சேர்த்து அ இ உண் என்று கூறப்படுகிறது.

**ரி லு ஒக்க இயைவ காட்ட**
**இக்குடன் கூடி இயைவ ரிலுக்** (௪௫)

**உரை**

ரி லு என்பன ஒத்த நிலையில் இயையும் என்பதனைக் காட்டவே (க்) என்னும் எழுத்துடன் இரண்டையும் இயைத்து ரிலுக் என்று கூறப்பட்டுள்ளது.

**ஏ என ஓங்கொலி இயைவ ஏஓங்.** (௪௬)

**உரை**

ஏ ஓ என்னும் எழுத்துக்கள் எ, ஒ, என்னும் எழுத்துக்களின் ஓங்கொலியாய் அமைவன என்பதே ஏஓங் என்பதன் பொருளாம்.

**ஐ ஓ ஔ என வானது மூன்றென**
**இச் உடன்கூடி இயைவ ஐ ஔச்** (௪௭)

**உரை**

ஐ ஓ ஔ என ஆனது மூன்று என உணரச் செய்யவே மெய்யெழுத்தின் வைப்பு முறையில் மூன்றும் எழுத்தாக விளங்கும் 'ச்' என்னும் எழுத்துடன் சேர்த்து ஐ ஔச் என்று கூறப்படுகிறது.

**அஃகா அழகுற அமைதல் அம்அஃக**
**கலைபதி குறுய் நிலைஉடு பதினை**
**ஆய வரும் ரட்டுள எண்இதே**
**மயக்கிசை யாக வரஹய வரட்லண்** (௪௮)

**உரை**

அம் அஃக என நிறைந்த அழகுடன் அமைதல் சந்திரன் கலை பதினுருக உடையவன் என்று கூற வேண்டிய எட்டு என்பதன் இரட்டிப்பே என்பது மயக்கிசையாக வ ர ஹ ய வ ர ட் ல ண் என்று கூறப்படுகின்றது.





**உடுபதி நடனத் தடுபஞ் சகமாம்**
**சத்த வமைபுத் தானத் தோற்றம்**
**கடத்தின் அச்செனக் காணல் கடதஷ்** (௪௯)

**உரை**

உடுபதி என்னும் சந்திரனுடைய நடனத் தோற்றத்தால் தோன்றிய பஞ்சகமாகிய சத்த அமைபுத் தானத் தோற்றமானது யாக்கையின் அச்சு என்று காணுதல் கடதஷ் என்பதன் பொருளாகும்.

நடனம் - இயக்கம். உடுபதி - சந்திரன்
கடதஷ் - நடத்தின் (யாக்கையின்) அச்சு

கடமாகிய யாக்கை இயங்க மூலமாக நிற்பதே அச்சாகும்.

**செப்பம் இதனைச் செயல் செபகடதச்** (௫௰)

**உரை**

இதனைச் செப்பம் செய்து காண்க என்பதே செபகடதச் என்பதன் பொருளாம்.

**கசட தபனைக் காணும் கபஜ**
**நாலெனத் தாவுடன் நண்ணக் காட்டி**
**அதுசடத் தச்சு அடைவாம் என்றும்**
**காட்டி யுணர்த்தல் கபசட தசடதவ்** (௫௧)

**உரை**

க ச ட த ப என மூலம் முதல் அனகதம் வரை நெறிமுறையாகக் காணும் ஐந்தில் ஒவ்வொன்றும் நான்காக விரிவுற்று இருபதாகும் என்பதனை 'த' என்னும் எழுத்துடன் நெருங்கியமையதல் காட்டி, அம்முறையான யாக்கையின் அமைந்து இயக்கும் ஆவளியாம் அச்சின் அடைவாகும் என்பதனைக் காட்டியுணர்த்தலே க ப ச ட த ச ட த வ் என்பதன் பொருளாம்.

**கசட தபவெனும் அடைவு நாலெந்**
**திடையில் அடுக்கா யியைங்ஞ ண நம**
**அதைஞம நணநம் ஆகக் காட்டிச்**
**செப்பஞ் செய்து சேர்எனல் செபஞ்ச்** (௫௨)

**உரை**

செபஞ்ச் என்பது நூற்பா ஆகும். செப்பஞ் செய்து சேர் என்பதன் சுருக்கமே செபஞ்ச் என்பதாகும்.

க ச ட த ப என்னும் அடைவில் உள்ள எழுத்துக்களில் ஒவ்வொன்றும் நான்கு நான்காக விரிவுற்று விளக்கும். அவ்வாறு விரிவினையடையும் போது ஒவ்வொன்றிற்கும் உரிய மெல்லின எழுத்துக்கள் நான்காவது எழுத்தின்பின் இயையும். இங்ஙனம் இயையும் போது 'க' வர்க்கத்திற்கு 'ங' வும், 'ச' வர்க்கத்திற்கு 'ஞ' வும், 'ட' வர்க்கத்திற்கு 'ண' வும், 'த' வர்க்கத்திற்கு 'ந' வும், 'ப' வர்க்கத்திற்கு 'ம' வும் அமைந்து இயைதல் முறை இதனை ஞ ம ங ண ந ம் என முறை மாற்றியமைத்து, இதனைச் செப்பஞ் செய்து அமைத்துக் கொள்க என நாம் உணரும் வண்ணம் அமைத்திருப்பது உய்த்துணர வைப்பது என்னும் விதிபற்றியதாகும் இது இக்காலத்தில் பொருத்திக் காட்டுக என்னும் வினு வகையைப் போன்றதாகும்.

ச்ச. ஷ. ஸ்ச. மூன்றோர் சார்பே என்றும்
அதன்முன் யரலவ அமையும் என்றும்
உபதச மாற்றம் உரைத்தல் ச்ச. ஷ. ஸர். (௫௰௩)

உரை

ச்ச, ஷ, ஸ், ச ஆகிய மூன்று ஒலிகளும் ஒரு சார்புடையன ஆகும். அவற்றின் முன் ய, ர, ல, வ என்னும் எழுத்து அமையும். இவை யாவும் உ ப த ச மாற்றத்தினை உரைப்பன ஆகும்.

அதுஅள் ளுக்கொள லாக்குத லேஹள (௫௰௪)

உரை

அந்த உபதசத்தை அகத்தே அமையும் வண்ணம் ஆக்குதலே ஹள என்பதன் பொருளாகும்.

ஈண்டு கூறிய தெல்லாம் நோக்கின்
ஆதி யாய அஇக் சரத்தின்
கோர்வை காண்எனப் பார்வையின் அக்ஷரம்
கண்ணுறும் வண்ணம் காட்டுதல் தோன்றும் (௫௰௫)

உரை

ஈங்குக் கூறியவை அனைத்தையும் நோக்குமிடத்து எல்லாவற்றிற்கும் முதலா விளங்கும் அ இ உ என்னும் உயிர், நாதம், விந்து என அமையும் வாசியின் கோர்வை என்பதனைக் கண்டு கொள்க. நாம் கண்ணுரைக் கண்டு தெளியும் எழுத்தின் வண்ணமாக அமைத்துக் காட்டுதலாகும்.





இதுமா ஆகத் தெய்தும் உடுபதி
நடத்தொலி கொண்டு நவிலப் பெற்றது. (௫௰௬)

உரை

மேற்கூறிய தொகையனைத்தும் பெருவளியின் கண்ணே பொருந்தி நடம்புரியும் உடுபதியினராம் இறைவனின் நடன ஒலியையுணர்ந்து சொல்லப்பட்டதாகும்.

## நடனத் தொலித்த டமருக ஒலியாம் மயேச்சுர சூத்திரம்

அ இ உண் (௧) ரிலுக். (௨) ஏ ஓங். (௩) ஐ ஔச் (௪)
ஹ ய வரட்(௫)லண். (௬) ஞம ஙண நம் (௭) செபஞ் (௮)
கடத ஷ் (௯) ஜ ப கடதச் (௰) கபசட தசட தவ் (௰௧)
கபய் (௰௨) ச்ச ஷ ஸ்ச (௰௩) ஹல். (௰௪)

இவற்றுள்

அகரம் முதற்பதி னாறும் திங்கட்
திதியமை வாகத் திகழல் அதிதியாம் (௫௰௭)

உரை

இவற்றுள் அகரம் முதலாய பதினறு உயிர்வர்க்கமும் சந்திரனின் திதி. பதினறின் அமைவாகத் திகழ்தலால் இவை அதிதி என்றழைக்கப்படும். அகரத்தை முதலாகக் கொண்டு நிகழ்வுறுதலின் அதிதி ஆகிறது.

அதித் க்அமுதல் அச்சு ஆகிய
பம்முத லனமுப் பத்து மூன்றுய்க்
கோவென அடிகொடு கோடி யாகி
மதியென வமைந்து வழங்கும் மொழியிது
தேவ மொழியெனச் செப்பப் பெற்றது. (௫௰௮)

உரை

அதிதியால் வழங்கும் க முதல் அச்சாக விளங்கும் ப முதலியனவும் முப்பத்து மூன்றுயமைந்து, கோவென்னும் அடியினைப் பெற்றுக் கோடியாகி இருபத்தேழு நச்சத்திரத்தினையும் ஐந்து கோள்களையும் இவையனைத்தும் ஒன்றுய் அமைந்த கூறுபாட்டினையும் கொண்ட சந்திரன் என அமைந்து வழங்கும் மொழியிதுவாதலின் இது தேவ மொழியெனச் செப்பப் பெற்றது.

முப்பத்து முக்கோடி தேவர் என்று வழங்கும் முறையில் இதுவும் முப்பத்து மூன்றுய் விளங்குதல் தேவ மொழியாகிறது.

தேவர் மொழி தேவ மொழியென நிலைமொழி ஈறு கெட்டுப்புணர்ந்தது.

**இதனுள்**

**கலைமதி புணர்ப்பாம் நிலையம் நாள்மீன்**
**இருபத் தேழா யியைவ கண்டோம்**
**இவையொன் றொழிய எஞ்சிய பதமூன்**
**றிருபத் தேழே எண்பத் தொருபதம்** (ருமகூ)

**உரை**

சந்திரன் கூடும் நாள்மீனுகிய நிலையம் இருபத்தேழாகும். இவை ஒவ்வொன்றிலும் ஒரு பாதம் நீங்க ஏனைய மூன்று இருபத்தேழு பாதங்களும் எண்பத்தொரு பதம் ஆகிறது.

பாதம் என்பதன் முதல் குறுகி பதம் என்ருயது.

**இது.**

**கூடி நிற்கும் கோள்ஓர் ஐந்தே**
**பஞ்ச கலைகள் அஞ்சாம் என்க.** (கூ00)

**உரை**

இவ்வாறு நட்சத்திரங்களின் பாதங்களில் பொருந்தி நிற்கும் ஐந்து கோள்களே பஞ்ச கலைகள் என்று சொல்லப்படும் அஞ்சு ஆகும்.

மக்களின் யாக்கையின் கண்ணே அமைந்துள்ள வாசி என்னும் கலையானது ஒருநிலைப்படாது அலைந்து திரியும் தன்மை போல கோள்கள் ஐந்தின் இயல்பும் ஒரு நிலையின்றி பல நச்சத்திரங்களின் பாதங்களிலும் பொருந்தி அலைந்து திரியும் தன்மைத் தாகலின், கோள் ஓர் ஐந்தும் பஞ்ச கலையாம் அஞ்சு என்று குறிப்பிடுகின்ருர்கள்.

அஞ்சு - ஐந்து என்பதன் முற்றுப் போலியாகும்.

**பஞ்ச கலைகள் அஞ்சின் அமைதியே**
**அக்கர அந்த அட்சரம் ஆகி**
**வெளிப்படை யாய்உரு விளக்கம் காட்டலான்**
**சுத்த வித்தைத் தொடர்பின் அகன்ற**
**மந்திர வுருவாய் யந்திரத் தமையும்** (கூ0க)





**உரை**

பஞ்ச கலைகள் என்று சொல்லப்படும் ஐந்தின் நிலையே அக்கரமாகிய எழுத்துக்களின் உருவத்தைத் தரும் அச்சரமாகி வெளிப்படையாக உருவங்களின் விளக்கத்தினைக் காட்டுதலான் சுத்தவித்தை என்று சொல்லப்படும் தொடர்பினின்றும் விலகிய மந்திரவுருவாய் யந்திரத்தின் கண்ணே அமையும்.

சுத்தவித்தை யென்பது தூய ஞானப் பெருவெளி அங்கு ஓசை இல்லை, உருவம் இல்லை, ஒலியில்லை, இன்ன தன்மைத்தென இயம்பப்படாத பரவெளி இந்த நிலையின் நீங்கி உருவங் கொள்ளும் நிலை எய்துதலின் சுத்த வித்தைத் தொடர்பின் நீங்கிய மந்திர உரு என்று கூறுகின்ருர்கள்.

அந்த சுத்த வித்தையின் பரவெளியினை மீண்டும் பெறுதற்குரிய மந்திரமாகவும் அமைதலின், மந்திரவுருவாய் யந்திரத்தமையும் என்று கூறுகின்ருர்கள்.

**அமைத்துக் காட்டிய தைம்பத் தொருவகை**
**எழுத்தே போல இயைந்து நிற்பினும்**
**ச்ச. ஷ. ஸ்ச மூன்ருேர் சரமே யாகி**
**யடங்கலால் ஏழே ழாம் ஈதென்க.** (கூ0உ)

**உரை**

ஆதாரத்தானும், ஆதாரத்தின்கண் இயங்கும் வாசி, நிலையானும் அமைத்துக் காட்டிய எழுத்து ஐம்பத்தொன்றே போலத் தோன்றினும் ச்ச ஷ ஸ்ச ஆகிய மூன்றும் ஒரு சரமாக அமைந்து அடங்கலால் எழுத்து நாற்பத்தொன்பதாகவே அமையும்.

**எண்ணுன் குறுப்பும் இயைகின்ற எட்டும் இதிலமைந்த**
**திண்மை யுடையதா தேழுஞ் சடமாய்த் திரண்டவெழி**
**லுண்மை எழுத்தினியலிற் றுலங்க லுரைத்தனமிந்**
**நுண்மை யறிவோ ரியாவ ரெனினுமுந் நூலவரே** (கூ0௩)

**உரை**

முப்பத்திரண்டு உறுப்பும் இயைகின்ற (பொருந்துகின்ற) எட்டு உறுப்பினையும் இதன்கண் அமைந்த ஏழு தாதுப் பொருள்களையும், இவை அனைத்தையுங் கொண்டு உடம்பாய் அமைந்த அழகினையும், எழுத்தின் இயல்பினில் விளங்க உரைத்தனம். இதன் நுட்பத்தை உணர்கின்றவர் யாவரேனும் நூலவரே யாவர்.

(௩௰௨) உறுப்பும் (கடத்தச்) பகுப்பு (அ)

| | |
|---|---|
| கால் | உதரம் |
| விரல் | கடிதடம் |
| பாதம் | குய்யம் |
| தொடை | குதம் |
| கை | மார்பு |
| விரல் | நெஞ்சு |
| அங்கை | மேல்வயிறு |
| புயம் | கொப்பூழ் |
| காது | பின்தாரை |
| கண் | முதுகு |
| மூக்கு | இடை |
| வாய் | புட்டம் |
| கண்டம் | உச்சி |
| குரல்வளை | பிடரி |
| கபோலம் | நெற்றி |
| மோவாய் | குழல் |

ஆ ௩௰௨ }
மெய் க } ௩௰௩ அங்கம்

தாது. ஏழும், சடம். ஆறும், செபகடதச்

| | | | | |
|---|---|---|---|---|
| கால் | ... | க | ... | சனி |
| விரல் | ... | வ | ... | பூரட்டாதி |
| பாதம் | ... | டி | ... | உத்திராடம் |
| தொடை | ... | ஊ | ... | விசாகம் |

ஐகை ... சித்திரை

| | | | | |
|---|---|---|---|---|
| கண்டம் | ... | வ | ... | ரேவதி |
| குரல்வளை | ... | ஞ | ... | உத்திரட்டாதி, |
| கபோலம் | ... | ஜ | ... | சதயம் |
| மோவாய் | ... | சூ | ... | அவிட்டம் |





ரு விரல் ... உத்திரம்

| | | | | |
|---|---|---|---|---|
| உதரம் | ... | ட | ... | திருவோணம் |
| கடிதடம் | ... | ௦ | ... | அபிஜித் |
| குய்யம் | ... | ஶ | ... | பூராடம் |
| குதம் | ... | ஶ | ... | மூலம் |

ண அங்கை ... புனர்பூசம்

| | | | | |
|---|---|---|---|---|
| மார்பு | ... | த | ... | கேட்டை |
| நெஞ்சு | ... | ய | ... | அநுடம் |
| மேல்வயிறு | ... | உ | ... | சுவாதி |
| கொப்பூழ் | ... | ய | ... | அத்தம் |

ந புயம் ... மிருகசீரிடம்

| | | | | |
|---|---|---|---|---|
| பின்தாரை | ... | வ | ... | பூரம் |
| முதுகு, | ... | ஞ | ... | மகம் |
| இடை | ... | ஷ | ... | ஆயில்யம் |
| புட்டம் | ... | ஜ | ... | பூசம் |

உமெய் ... கார்த்திகை

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| திருவாதிரை | ... | உச்சி | ... | ய | மூக்கு | ... | ஷல | ... | புதன் |
| ரோகிணி | ... | பிடரி | ... | ரு | வாய் | ... | ஹ | ... | செவ்வாய் |
| பரணி | ... | நெற்றி | ... | ம | கண் | ... | ஜ | ... | வெள்ளி |
| அசுவதி | ... | குழல் | ... | வ | காது | ... | க்ஷ | ... | வியாழன் |

சூரியன் கிழமை – உத்திரம்
சந்திரன் கிழமை – சதயம்
சனியின் கிழமை – மகம்

எண்ணன் குறுப்பு பாதாதி கேசமாய்க் காட்டிய (௩௰௨) 32. இயைகின்ற எட்டு நன்ஞனகாய்க் காணும் பகுப்பு, இதிலமைந்த திண்மையுடைய தாது ஏழு. ஆருதாரங்களில் அமைவு பெறும் தாதுக்கள் ஏழெனக் காணும் மூக்கு வாய் கண் செவியாக இணைந்துள்ள உறுப்புப் பகுதி இதுவே சடம். இது கடத்தச்சைச் செப்பம் செய்த செபகடத்தச், செப்பம் செய்தது நேர்மையுடையதா என அளக்கும் அளவு கோல் காண்க.

**பாதாதி கேசமாக வமைந்த பகுப்பு ஆறும் புறத்திணை**
**அதிலமைந்த மெய், வாய், கண், மூக்குச் செவியாக வுள்ளவை**
**ஐந்தும் அகத்திணை. அதில் நான்காகி இயம் ஆழ்ந்து**
**தோன்றுவது இயாழ் நான்கு புறத்திணை ஆறினின்றும்**
**பெயர்வுற்றுக் காண்பது பெயரும் திணை. இதையே பெருந்திணை**
**யென்று கூறுவர் இது அண்ட வெளியிலும் நம் அகத்திலும்**
**ஒருமைப்பாடு கொண்டுள்ளமையைக் காட்டவே நாள்மீனும்**
**அதற்குரிய அக்கரமும் அமைக்கப் பெற்றிருக்கின்றன, அது**
**சீர்மையுடையதா எனக் காட்ட மேலும் விளக்கம் தருகிறேம்.**

செப்பம் செய்த செபகடத்தச்சில் ஞாயிறும் திங்களும் ஒன்றியுள்ளன. அதில் சூரியன் சிம்மராசிக்கு உரியவன் அவனுடைய நாள்மீன் சிம்மராசியிற் கால் கொண்டு நிற்பதும் சூரியதிசைக்குரியதுமான உத்தர மீன். ஆகவே சூரியனுடைய கிழமை நாண்மீன் உத்தரம் என்று குறிக்கப் பெற்றுள்ளது. திங்களாகிய சந்திரனுக்குரிய கிழமை நாள்மீன் சதயம் அதன் விளக்கம் காண்க சிம்மராசியிற் சூரியன் நின்ருல் சந்திரன் முழுமை பெற்ற கலையுடன் நிற்குமிடம் கும்பமாக வமையும் உத்தரமீனினின்று நடு நாளாய் நிற்கும் பதினன்காவது நாள்யாதென அபிஜித்தையும் கூட்டி யெண்ணிப் பார்க்குங்கால் சதயமீன் தோன்றும் ஆகவே மதியின் கிழமை நாள்மீன் சதயம் சூரிய சந்திரன் இரண்டாய் சூக்குமத்தில் தோன்றி நிற்பது வாசியாகியகால் என்னும் உயிர்வளி அதன் தன்மையைப் பெற்றுத் தூலமாக நிற்பது கால் ஆகவே கால் ஆகிய உறுப்பு சனிக்கு ஆயிற்று பெண் கோளாகிய மதி. எழிலுடன் நிரம்பிய கலைகொண்டு சூரியனல் நோக்கப் பெற்ற காலையில் கதிர்மகனைத் தோன்றிச் சூரியனுடைய ராசியில் முதற்பங்காகிய மகத்தில் நிலைகொண்டு சூரியனுக்குப் பின்னல் அவனுடைய நிழல் என்னத் தொடர்ந்து முதலெழுஞ் சனி இடையெழுஞ்சனி கடையெழுஞ்சனி என சிம்ம ராசியைத் தந்தையின் உடைமையாய்ப் பங்கிட்டுக் கொண்டு நிற்பதும் பங்கு என்றே பெயர் பெற்றுள்ளதுமாகிய கோள் சனியாகையால் சனியின் கிழமை நாண்மீன் மகம் எனக் கணக்கிடப் பெறுகிறது இதிற் சூரியன் தன் இராசியாகிய சிம்மத்தைச் சனியாகிய பிள்ளைக்குக் கொடுத்து விட்டு தன் ஒரே நண்பனுகிய வியாழன் வீட்டிற் சென்றிருந்து கொண்டு தனது வெங்கதிரைப் பரப்புகிருன் அந்த மாதத்தைப் பங்குநி மாதம் என்கிரேம். பங்கு என்ருற் சனி.நி. என்பது இன்மையைக் குறிக்கும் ஆகவே பங்குநியாகத் தம் உடமை ஆகிவிட்டபடியால் தன் நண்பனுகிய குருவின் வீட்டிலிருக்கும் சுபகரமாகிய மாதத்தில் கடவுள் வழிபாடு திருநாட்கள் கொண்டாடப் பெறுகின்றன. நண்பனுடைய வீட்டிலிருந்த சூரியன்





தன்னரசுத் தானமாக மேடத்தைக் கொண்டு விளங்கப் புத்தாண்டு தோன்றுகிறது. காரியென்பவன் சனி அவனுடைய தொடர்புள்ளமையால் சிம்மராசியாகிய ஆவணி மாதம் கார் காலம் எனப் பெறுகிறது இது சரிதான யென்பதற்கு மேலும் ஒரு அளவுகோல் தருகிரேம். அளவிட்டு கொள்க. செப்பஞ் செய்த செபகடத்தச் சில தனித்துக் காணும் ஐந்து நாள் மீனே தனிஷ்டாபஞ்சமி எனக் கூறும் தனித்த பஞ்சகம் பாதமாகிய உறுப்பமைந்த நான்குமீன்கருன பாதம் எனக் கூறப்பெறுகிறது மேலும் புதன் செவ்வாய் வெள்ளி வியாழன் என்னும் கோள்களுக்குரிய திருவாதிரை ரோகிணி பரணி அச்வனி ஆகிய நாண்மீன்களுடன் முற்கூறிய உத்திரம் சதயம்மகம் ஆகிய மும்மீன்களையும் சேர்த்து வரும் ஏழு நாட்களுக்கும் அட்டம ராசிக் கூருகிய பதினெட்டாம் நாள்மீன் எதுவென எண்ணிப்பார்க்க.

செங்கதிரோன் பிறந்த நாள் பரணியாகும் செழு மதிக்குச் சித்திரை சேயுத்தராடம் பொங்கு புதன விட்டம் பொன்னவர்க்குக் கேட்டை புகர் பூராடங்காரி ரேவதி இந்நாளில் மங்கய ரை மணம் புணர்ந்தால் விதவையாவாள் மனயெடுக்கிற்பாழாகும் வழியிற்றீது.

என்ற தாய் அமையலுற்ற காரணத்தைக் காணலாம் நாம் வகுத்துக்காட்டிய நிலைபேருன சாட்சியாகவும் அமையும் இதுவே அகச்சான்ருகும் என்க.

## ஆரியமான நாரியைக் கூடும்
## தொன் மொழியான தென் மொழி விளக்கம்

என்றும் குன்ரு எழில்நலம் உடைய
தென்மொழி வரன்முறைச் சிறப்பியல் கூறுதும் (சூ.௭)

உரை

என்றும் குறையா அழகு நலமுடைய தென்மொழியாம் தமிழ் மொழியின் வரன்முறையின் சிறப்பினை கூறுகின்ரேம்.

"என்றும் உளதென்றமிழ் இயம்பி இசை கொண்டான்" என்னும் கம்ப நாடரின் கூற்றும் ஈண்டு நோக்கத்தக்கதாம். எல்லையறு பரம்பொருள் முன்னிருந்தபடி இருப்பது போல் என்னும் மனேன்மணிய வாழ்த்தையும் நோக்குக.

**கூறு பாடுடை யாறு தாரம்**
**நானிலம் மாயிரு ஞாலம் ஆகி**
**தென்வட திசையாயத் திகழ எழுத்தும்**
**ஆறைந் தேழே டாகி நிற்பதுள்**

உ
சிவமயம்

**ஏழேழை யாறைந் தெழுத்துள் ளடக்கி**
**ஆட்சி புரியும் ஆண்மை காட்டுதும்** (௬௰௫)

**உரை**

கூறுபாடுகளைக் கொண்ட ஆறு ஆதாரங்கள், நான்கு நிலையங்களைக் கொண்ட பெரிய உலகம் ஆகி, தெற்கு வடக்கு என்னும் திசையாய் விளங்குதலால், எழுத்துக்கள் முப்பதும், நாற்பத்து ஒன்பதுமாக நிற்பதில் நாற்பத்தொன்பதாக விளங்கும் வடமொழி எழுத்துக்களை, முப்பதாக விளங்கும் தென்மொழியாம் தமிழ் மொழியெழுத்துக்கள் அடக்கி ஆட்சி புரியும் ஆண்மைச் சிறப்பினைக் காட்டுவோம்.

ஆறு ஆதாரம், மூலாதாரம், சுகவதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை என்பன.

நானிலம் - குறிஞ்சி, முல் லை, மருதம், நெய்தல், முதல் நான்கு ஆதாரம் தமிழ் மொழி நிலவும் தென்திசையாம். விசுத்தி, ஆக்ஞை இரண்டும் வடமொழி நிலவும் வடதிசையாம்.

தமிழ் மொழியின் முதல் எழுத்துக்கள் முப்பதாகும். நாற்பத்தொன்பது எழுத்துக்களைக் கொண்டது வடமொழி.

நாற்பத்தொன்பதனையும் முப்பதுக்குள் அடக்கியாளும் ஆண்மைத் தன்மையினைக் காட்டுவோம் என்று கூறுகின்றார்கள்.

## சாரியை விளக்கம்

**ஆண்மை பெண்மை ஆம்இரு பாலிற்**
**பாலி னிலை வாலிதின் மனையாய்ச்**
**சாரும் இயல்புடைச் சாரியை கொள்ளும்**
**சிறப்புறும் வண்ணம் செய்யக் ககரத்து**
**அகரம் கரமாய் அமைந்து முதல**
**எழுத்தெலாம் ஆக இயைந்து காண்பதால்**
**தன்னிக ரில்லாத் தனிமுதல் மூலத்து**
**ஒன்றும் க்அ. வின்னின்று அகரம்**
**தோன்றும் இயைபுச் சூக்கம் விளங்கும்** (௬௰௬)



உ
சிவமயம்

**உரை**

ஆதாரங்களாம் உள்ளிடத்தில் ஒரே நிலையில் அமைந்த வளியிசை ஆண்தன்மை பெண்தன்மை என்பதனை அனைவரும் அறியும் வண்ணம் புறப்புறத்தில் நாசியின் வெளியே நீண்டு வரும் போது உண்டாகும் ஒலியின் வடிவை உணர, சாரியை வேறுபடும். அங்ஙனம் சாரியையை சிறப்புற அமைத்தற்கு மூலாதாரத்தில் நிலைபெற்ற, அழிவற்ற, திரிபற்ற 'க' கரத்தில் அகரம் இணையும், அங்ஙனம் அகரம் கரமாய் அமைந்து எல்லா எழுத்துக்களிலும் விரவி இயக்கும் இயக்கங் காண்பதால் அகரம் மூலக் 'க' கரத்து இயைந்து தோன்றும் சூக்குமம் விளங்கும்.

**சூக்கம் விளங்கச் சொல்லுங் காலை**
**மெய்யும் உயிரும் மேற்கொள் வளியும்**
**ஒன்று படவதி னின்றெலி தோன்றல் போல்**
**க்அ உயிர்மெய் இணைவழி ரகரம்**
**இவையமை மூலம் ம்இவை கூடக்**
**கரம் என்றுகும் கரம்சா ரியையால்**
**மெய்யுயிர் இயக்க மெல்லாம் தோன்றும்** (௬௰௭)

**உரை**

இந்த நூற்பாவில் கரம் என்ற சாரியையில் அமைந்துள்ள பொருளை நுட்பமாக விளக்குகின்றார்கள். அகரம், க என்னும் மூல எழுத்தில் சூக்குமமாக அமைந்து, கரம் என்னும் சாரியை தன்னைப் பெற்ற தன்மையை விளக்குங் காலத்து, மெய்யும் உயிரும், இயங்க மேற் கொள்ளும் வளியும் ஒன்றுபடுதலால் ஒலி தோன்றுதல் போல க் என்னும் மெய்யும் அ என்னும் உயிரும், இணையும் வழி தோன்றும் ர என்னும் காலும் (காற்றும்) இவை எல்லாம் அமையும் மூலமாகிய 'ம' என்னும் எழுத்தும் கூடுதலால் கரம் என்னும் சாரியை தோன்றும். கரம் என்னும் சாரியை தோன்றுதலால் மெய் எழுத்து, உயிரெழுத்து ஆகியவற்றின் இயக்கம் எல்லாம் தோன்றும். (நிகழ்வுறும்)

## தமிழின் உருவகத்தன்மை விளக்கம்

**எல்லாம் தோன்ற இயக்கும் மூலத்து**
**அக்கரம் ககரம் அதனிடத்து அகரம்**
**தோன்றி நிற்கும் துலக்கம் காட்டவே**
**அக்கர அந்தம் ஆம்வடி வெழுத்தில்**

**ககர எழுத்தொரு கதிர்கொள நீட்டி**
**அகரம் என்றுரு அமைக்கப் பெற்றது** (௩௰அ)

**உரை**

எல்லா எழுத்துக்களும் தோன்றும்படி இயக்கும் மூலத்தின் தன்மையுடைய எழுத்து ககரம் ஆகும். )க என்னும் எழுத்தாகும்) அதனிடத்து அகரம் (அ என்னும் எழுத்து) தோன்றி நிற்கும் விளக்கத்தைப் புலப்படுத்தவே அக்கரத்தின் உருவமாகிய வடிவ எழுத்தில் ககரம் என்னும் எழுத்தினை ஒரு கதிர் கொள்ளும்படி நீட்டி அகரம் என்னும் எழுத்துருவம் அமைக்கப் பெற்றிருக்கின்றது.

ககரம் ஒரு கதிர்கொள நீளும் வடிவம். க

**பெற்ற நன்னிலை யுற்ற அகரமே**
**குடகுடப் பான குடத்தில் தீர்ந்த**
**உயிராம் இவ்வுயிர் உடம்பெடுத் தற்கு**
**நாதம் விந்து நாதவிந் தால்ஆம்**
**பூதம் அஃதமை பூதியம் ஆகவும்**
**கலையும் அஃதமை கலாதி யாகவும்**
**சமைந்து காணும் தமிழியல் காட்டுதும்** (௩௰௯)

**உரை**

இங்ஙனம் நிலைபெற்ற, நிறைவுற்ற, சிதைவற்ற ககரத்திடம் பொருந்திய அகரமே, குடகுடப்பான குடத்தினின்றும் நீங்கிய உயிராகும். இந்த உயிரானது, உடம்பினைப் பெறுதற்குத் தேவையான நாதமும், விந்தும், அந்த நாத விந்தால் ஆகிய ஐம்பூதங்களும், அவைகலத்தலால் உண்டாகும் பூதியமும் ஆக கலையும், அஃதமையும் கலை ஆதி ஆகவும் சமைந்து காணும் தமிழியல் காட்டுவோம். மேற்கூறியவற்றால் தென்மொழியாம் தமிழின் தத்துவச் சார்பு தெள்ளிதின் விளங்கும்.

**அகரம் உயிர்அஃ தமையும் நாதம்**
**இகரம் விந்தாம் எழுத்தே உகரம்**
**இதில்**
**அகரம் தலைக்கொள லாய்வரும் இகரம்**
**யகரத் திகரமே யாக லானும்**
**குற்றியல் இல்லா முற்றியல் இகரம்**
**அதுவே யாக வமைய லானும்**
**இகரம் தலைப்பட் டிசைக்கும் ஒலியில்**





**குறுகிக் காணும் குற்றியல் இகரமாய்**
**அதுவே யுளதென் றுமியல் காட்டவே**
**அரைஎனும் எண்ணிற் கமைத்தனர் இகர**
**உருவம் என்றும் உண்மையை யுணர**
**யகரத் திகரம் அமைதல் தோன்றும்.** (௪௰)

**உரை**

அகரம் உயிராகும். அது பொருந்தி நிற்கும் நாதம் இகரம் ஆகும். உகரம் விந்தெழுத்தாகும்.

இந்த நூற்பாவில் யகரத்தினின்று தோன்றியதே இகரம் என்பதனைக் காரணங் காட்டி நிறுவுகிருர்கள். இது தத்துவ நிலைக்குப் பொருத்தமாக உள்ளது என்பதனை ஊன்றி நோக்குவார் உணர்வர்.

ஈண்டுக் கூறியதில் அகர வடிவத்தைத் தலைப்பில் கொண்டுவரும் இகரம், யகரத்தில் தோன்றியதேயாகும். அதுவே குற்றியல் இல்லாத முற்றியலிகரமாக அமையும். இகரம் தலைப்பட்டு இசைக்கின்ற ஒலியில் அது குறுகும் குற்றியலிகரமாக ஒலிக்கும். அவ்வாறு ஒலிக்கும் தன்மையை உணர்த்தவே அரை என்ற சொல்லும் எண்ணிற்கு, உருவமாக இகரத்தினை அமைத்துள்ளனர். இந்த உண்மையை உணரின் யகரத்தின்கண்ணே இகரம் தோன்றியுள்ளது என்பது புலப்படும்.

**உயிரது நாதத் தொன்றி விந்தோ**
**டுறவுயிர் மெய்யாம் உடம்பு தோன்றும்**
**இயல்போல் நாத எழுத்தாம் இகரம்**
**தலைப்படு புள்ளி சாரும் விந்தாம்**
**எழுத்துடன் கூட இக்இங் இச்இஞ்**
**என்றும் உயிர் அதில் இயைய உயிர்மெய்**
**கஙசஞ என்றும் காண்பத னேடு**
**இசையொலிப் பிராணியை ஈனை லானும்**
**இகரம் நாத எழுத்தே என்று**
**உலக வழக்கினும் நிலவுதல் தோன்றும்** (௪௰௧)

**உரை**

உயிரானது, நாதத்தோடு பொருந்தி விந்துடன் சேர உயிர்மெய்யாம் உடம்பு தோன்றுதல் போல, நாத எழுத்தாகிய இகரம், தலையின் கண்ணே புள்ளியையுடைய விந்தெழுத்தாகிய மெய்யுடன் கூட, இக், இங், இச், இஞ் என்று ஒலிக்கப்படுகிறது.

உயிரெழுத்தானது அவற்றெடு பொருந்த உயிர்மெய்யாகிய க, ங, ச, ஞ என்று ஒலிக்கப்படுகிறது.

இவ்வாறு மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து ஆகியவற்றின் தோற்றத்தினைக் காண்பதோடு இ என்னும் இசையாக ஒலிக்கும் பிராணியை ஈ என்று கூறுதலானும் இகரமானது நாத எழுத்தே என்பது உலக வழக்கினும் பேசப்படுவது தோன்றும்.

உலகில் உயிரானது தோற்றங் கொள்ளும் நியதிப்படி எழுத்துக்களை முறைப்படுத்தியிருப்பது தமிழ் மொழியின் சிறப்பாகும்.

இந்த அமைப்பின் நுட்பத்தை எடுத்துக்காட்டி விளக்கி அகத்தியம் என்னும் நூலைச் செய்தருளிய தமிழ் முனிவராம் சாத்தா மகான் அவர்களுக்கு ஞாலம் முழுதும் நன்றி சொலக் கடமைப் பட்டிருக்கின்றது.

**இவ்வகை முறைமை எளிதின் விளக்க**
**அகர யிகரத் தமைசுழி குண்டை**
**தலைப்படும் யகரம் சாரும் உருவம்**
**கொண்டொன் றனகூட் டெழுத் தாக**
**அமைத்தனர் ஐந்தாம் ஐகான் உருவம்** (௭௩௨)

**உரை**

மேற்கூறிய முறையானது எளிதாக விளங்கும் வண்ணம் அகர எழுத்தைத் தழுவும் இகரத்தின் கண்ணே அமைந்த சுழியினையும், குண்டையினையும், தலைப்பிற் கொண்ட யகரம் சாரும் உருவம் அமைந்த கூட்டெழுத்தாக ஐந்தாவதாக விளங்கும் ஐகான் உருவத்தை ஆன்றோர் அமைத்தனர்.

ஐகான் - ஐ என்னும் எழுத்து

அகரத்தைத் தழுவும் இகர நிலையுருவம் அ
அதன் கண்ணே தோன்றும் சுழி ெ
அதன் கண்ணே தோன்றும் குண்டை ˥

இவையிரண்டும் சேருங்கால் தோன்றும் வடிவம் 'ள' என்பதாகும். இந்த வடிவத்தைத் தலைப்பில் கொண்ட யகரத்தையும் சாரச் செய்யும் போது ஐ என்னும் ஐகான் வடிவம் தோன்றுகிறது.

**ஐகான் என்பதில் அமைந்த சாரியை**
**குன்று நெடில்நிறை வொன்றும் எழுத்தீவ்**
**விரண்டொன் றுய்க்கா இன் என்றுகி**
**இகரமுற்றும் இது எனக் காட்டும்** (௭௩௩)





**உரை**

ஐகான் என்பதில் அமைந்துள்ள சாரியை கான் என்பதாகும். இஃது கா + இன் என்ற இரண்டும் இணைந்து நிறைவுற்ற, சிதைவற்ற, திரிபற்ற 'க' கரத்தின் நெடிலாகும் 'கா' வென்னும் எழுத்தொடு இன் என்னும் சாரியை இரண்டொன்றுக இணைந்து கான் என்றுகி ஐகான் இகரத்தின் முற்றும் என்பதனை உணர்த்துகின்றது.

இகரத்தின் இயைபுடைய ஈ, எ, ஏ, என்பனவெல்லாம் ஐயென்னும் எழுத்தொடு நிறைவுறுகின்றன என்பதை கான் என்னும் சாரியை வலியுறுத்துகின்றது. கான் என்னும் சாரியை தன்னை கா + இன் எனப் பிரித்து இயைத்துப் பொருள் கூறும் பெருந்தகையாரின் நுட்பம் மகிழ்தற்குரியதாகும்.

"இன்னின் இகரம் ஆவின் இறுதி
முன்னர்க்கெடுதலுமுரித்து மாகும்"

என்னும் தொல்காப்பிய நியதி மேற்கூறிய புணர்ச்சிக்குப் பொருந்தும்.

**மேலும்**

**பழுத்த பழமறை எழுத்தைந் ததனில்**
**ஒலிப்பிறப் பிடமாம் வெளி எழுத்தாக**
**இதை வலியுறுத்தும் இயல்பாம் யகரம்** (௭௩௪)

**உரை**

என்றும் உள்ள நான்மறையில் கனிவுற்றுத் தோன்றிய திருவைந்தெழுத்தில் ஒலி தோன்றுவதற்குரிய ஆகாயத்தினை உணர்த்தும் எழுத்தாக யகரம் தோன்று நிற்கும்.

**ஆகையால்**

**குற்றிய லிகரம் முற்றியல் இகரம்**
**இரண்டும் யகரத் தியைபெனல் தெளிவாம்** (௭௩௫)

**உரை**

ஆகையினுல் குற்றியலிகரமும், முற்றியலிகரம் யகரத்தோடு இயைந்து தோன்றுபவை என்பது தெளிவாகும். இருவகை யிகரத்திற்கும் யகரம் பிறப்பிடம் என்பது தெளிவாகும்.

**உயிரும் நாதமும் ஒன்றவுருப் பெறும்**
**விந்தெழுத் தியலின் விளக்கம் கூறுவாம்** (௭௩௬)

உரை

உயிரும் நாதமும் ஒன்றுதலினல் உருவத்தைக் கொள்ளும் விந்தெழுத்தின் (மெய்யெழுத்தின்) இயல்பாகிய தன்மையைக் கூறுவாம்.

உயிரும், அது இயையும் நாதமும் ஒன்றுகூடினலன்றி விந்து ஓர் உருவத்தினை தோற்றுவிக்காது என்பது இதனல் விளங்குகின்றது.

**விந்தெழுத் தாக விளங்கும் உகரம்**
**வகரம் தரலால் வந்த தென்பதை**
**உயிர்மெய் யடுத்த உகரம் வகர**
**உவ்வாய் முற்றியல் உகரம் ஆகி**
**வருவது கொண்டும் மற்றது குற்றியல்**
**உகரமாக வுறுவது கொண்டும்**
**குற்றியல் தீரவோர் கோடிட வஃதே**
**வகரமாக வமைவது கொண்டும்**
**விந்துயிர் நாத மேவில் நிறைவும்**
**இல்லையேல் குறுகு மியல்புங் கொள்ளும்**
**ஆகையால் அவ்வித மாக வகர**
**வுரிமை யவுரிமை யுறலினுங் காணலாம்.** (௭௦௫)

உரை

இந்த நூற்பா விந்தெழுத்தாக விளங்கும் உகரம், வகரத்தினின்று தோன்றியதென்பதனை வலியுறுத்துகின்றது.

விந்தெழுத்தாக விளங்கும் உகரம், வகரம் தருதலால் வந்தது என்பதனைப் பின்வருவனவற்றல் உணரலாம். உயிர், மெய்யினை அடுத்த உகரமானது வகர மெய்யினைச் சார்ந்து வரும்போது அது நிறைவுற்ற முற்றியலுகரமாக ஒலிப்பது கொண்டும், ஏனைய மெய்யொடு சார்ந்து வரும்போது அது குறுகிய ஓசையைப் பெற்று, குற்றியலுகரமாக அமைவது கொண்டும், உ என்னும் எழுத்தின் குறுகிய ஓசை ஒரு கோடிட்டுப் பார்க்க அதாவது, உகரத்தின் மீது ஒரு செங்கோடு இட்டுப் பார்க்கஅதுவே வகரமாக அமைவது கொண்டும், விந்து, உயிரும், நாதமும் பொருந்தின் நிறைவும் அஃதில்லையேல் குறுகும் தன்மையும் பெறும் ஆகையினல் வகர உகரத்தினைத் தரும் உரிமையைப் பெற்றுள்ளது. அந்த உரிமை ஒன்றேடு ஒன்று இணைதலினலும் உணரலாம்.





**உறுவதி ரண்டுகொண் டொன்ருச் சிறக்கும்**
**உடன்பாட் டியலில் உகரம் தோன்றலும்**
**ஒன்றின் மற்றென் றுடனும் இரண்டில்**
**விந்தெழுத் தீதுஎன விளங்கும் இயற்கையே.** (௭௦௪)

உரை

ஒரு பொருளினேடு மற்றும் ஒரு பொருளை இணைத்துக் கூறும் போது வகரத்தோடு உகரம் கவ்வும், சவ்வும் என்று தோன்றுதலும் ஒன்றேடு ஒன்றைக் கூட்டி இரண்டு என்று கூறும் வடிவில் உ என்று உகரந் தோன்றலும், இது விந்து எழுத்து என்று சொல்லும்படி விளங்கும் இயற்கையாகும்.

**இவ்வாறே.**

**உடன்பட வகரமெய் யுற்ற அஉ**
**ஔகான் ஆகும் அதுமுற் றுகரமாய்**
**அடக்கியும் அடங்கியும் அமையும் விந்தென**
**எல்லா வுறுபு மியைவு கொண்ட**
**ஒருரு வாகி யொற்றுகால் கொம்பிவை**
**கொண்டு நிறைந்தது குறுகும் யற்கை**
**யுடைத்தாய் விளங்கலும் ஓர்தனிச் சிறப்பாம்** (௭௦௫)

உரை

அகரம், உகரம் இரண்டும் உடன்படப் பொருந்தும்படி வகரம் இயைதலால் இரண்டும் 'ஔ' என்னும் எழுத்தாகும். அது உகரத்தின் ஒலி நிரம்பிய முற்றுகரமாய், விளங்கும். விந்தானது எல்லாவற்றையும் அடக்கியும், அடங்கியும் இருப்பது போன்று, ஔகாரம், உயிர்வர்க்க ஒலிகளின் உருவங்கள் அனைத்தினையும் தன்னுருவத்தில் அடக்கியும், ஒலிப்பதில் அதனின்றும் மிகாமல் அடங்கியும், எல்லா உறுபும் பொருந்தும் ஓர் உருவத்தினைப் பெற்று, ஒற்றுகால், கொம்பு இவை கொண்டு நிறைந்துள்ளது. இங்ஙனம் அமைந்தது குறுகும் தன்மையும் உடையதாகவும் இருக்கும். இஃது இதற்கு ஒரு தனிச்சிறப்புடையதாகும்.

ஒற்று - ౦ - கால் - ா - கொம்பு - ெ

அறுவகைத் தாதுப் பொருளையும் அடக்கிக் கொண்டு மிளிர்வது விந்தாகும். இஃது தலைமகன் சிரசின் அடங்கியும் இருக்கும் தன்மைத்தாகலின் "அடக்கியும் அடங்கியும் அமையும் விந்தென" என்று பெருந்தகையார் கூறுகின்றார்கள்.

ஒற்றும், காலும், கொம்பும் ஆய இவற்றைக் கொண்டு விளங்குதலே ஔகாரம் எல்லா எழுத்துக்களின் வரி வடிவத்தினையும் பெற்றுள்ளது என்பது தேற்றமாம். ஆலம் வித்தும், அத்தி வித்தும், எல்லாவற்றையும் தம்முள் அடக்கி பழத்தில் அடங்கி இருப்பதையும் காணலாம்.

அ உ எழுத்துக்களோடு வகர மெய் இயையின் ஔகாரம் ஆகும் என்பதனை

"அகரத் திம்பர் வகரப் புள்ளி
ஔ என் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்"

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் உணரலாம்.

**மேலும்**

**விஞ்சுதல் ஆகல் வித்தென இயைதல்**
**உகரமுற் றுதல் உடைமை சாலல்**
**ஓ அதிகம் பெறல் ஆறிரண் பாதல் ஆல்**
**விஞ்சை வித்தை ஊதியம் சாலம்**
**ஓதி கலை யோடு உறுதி கேள்வி**
**யொலியாய் ஔகான் உரிமைப் பாடு**
**கொளக்கல்விப் பொதுக் குறிப்பினும் வழங்கும்** (அ௰)

**உரை**

ஔகாரத்தின் நிறைவினை இந்நூற்பாவால் விளக்குகின்றார்கள்.

விஞ்சுதலாகக் காணும் அனைத்தும் அமைதலின் ஔகாரம் விஞ்சையென்றும், எல்லா ஒலிகட்கும் வித்தாக இருப்பதால் வித்தை யென்றும், உகரத்தின் ஒலி நிறைவு பெற்றிருப்பதால் உகர முற்றென்றும் ஊகாரத்தின் ஒலி அதிகம் உள்ளமையின் ஊதியம் என்றும், மிகுதிப்பாடு அனைத்தையும் கொண்டமையின் சாலம் என்றும், தோன்றுதல், குவிதல் ஆய தன்மையின் இடைப்பட்ட எல்லாவற்றையும் கொண்டுள்ளதால் ஓதியென்றும், பன்னிரண்டாக நிறைவு பெறுதலால் கலையென்றும், 'உ' அறுதியாக அமைவதால் உறுதியென்றும், கூப்பிடக் கேட்கும் ஒலியாய் இருப்பதால் கேள்வியென்றும் ஔகான் சிறப்பிக்கப் படுகிறது.

**வழங்கும் இயற்கை மலிவெளி யதனிற்**
**றோன்றும் வளியிற் றன்அணுத் திரளாய்**
**விந்து சலன மெய்தும் அதனுல்**
**மறையெழுத் தைந்தில் வாய்வாம் வகரம்** (அ௰க)





**உரை**

ஒலி வழங்கும் இயற்கையை மிகுதியாகக் கொண்ட ஆகாயத்தின் கண்ணே தோன்றும் காற்றில், விந்தானது அணுக்கூட்டத் திரட்சியாய், நிலைபேறு கொள்ளாமல் சலனஞ் செய்யுங் காரணத்தினுல் மறையிற் கனிந்த திருவைந்தெழுத்தாம் ஐந்தில் வாயுவின் கருவாக (பீஜமாக) வகரம் விளங்கும்.

**ஆகையால்**

**குற்றிய லுகரம் முற்றிய லுகரம்**
**இரண்டும் வகரத் தியைபனல் தெளிவாம்** (அ௰உ)

**உரை**

ஆகையினுல் குற்றியலுகரம், முற்றியலுகரம் ஆகிய இரண்டும் வகரத்தின் கண்ணே இயைந்து தோன்றியன என்பது தெளிவாகும்.

வாயுவின் சலனத் தன்மை போல் விந்துவும் சலனம் எய்துதலின் விந்தெழுத்தாகிய உகரம் வளியின் கூருகக் கொள்ளப் பெறுகிறது.

**ஆமா கவய மாய்ப்புறத் துற்ற**
**நிலையின் நீங்கி நீள்நிலை கொண்டு**
**காலேயாம் எனக் கரந்து நடைகொள்**
**நிலையிற் குறிலும் நெடிலும் தோன்றும்** (அ௰௩)

**உரை**

உயிரானது 'க' என்னும் எழுத்தின் வயமாகி, புறம் என்னும் மூன்றும் நிலையையுங் கடந்து, நெடிதே செல்லும் காற்றே என்று சொல்லும் வண்ணம் அதன்கண் மறைந்து, புறப்புறத்தின் கண்ணே இயங்கும் போது குறிலும், நெடிலும் தோன்றும்.

குறில் - குற்றெழுத்து நெடில் - நெட்டெழுத்து

**அது.**

**முன்னுன் கிருநான் கென்னு மளவையின்**
**மாத்திரை என்ன வருதல் போதல்**
**ஆம்நடை முறையின வாத லாலம்**
**முறையே மாத்திரை மூன்றும் இரண்டுமாம்** (அ௰ச)

**உரை**

ஆவளியானது ஆகத்தை விட்டு வெளியே செல்லும் போது பன்னிரண்டு அங்குலமும், மீண்டும் உள்ளே வரும் போது எட்டு அங்குலமும் உடையதாக அமையும். இது கடலின் அலையானது கரை நோக்கி வருதலையும், உட்செல்லுதலையும் ஒக்கும்.

ஆவளி நீண்டு வெளியே செல்லுதல் மூன்று பங்காக அமைதலின் அதன் இயைபு கொண்ட நெட்டெழுத்து மூன்று மாத்திரை பெறுகிறது என்றும், அத உட்புகும் போது இரண்டு பங்காக இருத்தலின் அதன்இயைபு கொண்ட குற்றெழுத்து இரண்டு மாத்திரை பெறுகிறது.

இங்ஙனம் மாத்திரை கொள்ளும் முறை, ஆவளி வெளியிற் செல்லும் நிலையினையும் உள்ளே புகும் அளவினையும் ஒத்துக் கூறியதாகும்.

இலக்கண நூலார் நெட்டெழுத்துக்கு இரண்டு மாத்திரையும், குற்றெழுத்துக்கு ஒரு மாத்திரையும் கூறவர்.

முன்னது தத்துவ நிலைக்கு ஒத்தாக அமைகிறது. பின்னதற்குக் காரணங் கூறப்படவில்லை.

மா - கடல் - திரை - அலை கடலின் அலை வருதலும், உட்புகுதலும் போல ஆவளியும் வெளியிலும் அகத்திலும் இயங்குதலின் மாத்திரை ஆவளிக்கு உவமை ஆகிறது.

"இயல்பெழு மாந்தர் இமை நொடி மாத்திரை" என்பர் பவணந்தி முனிவர் பெருமான்.

"கண்ணிமை நொடியென வவ்வே மாத்திரை நுண்ணிதின் உணர்ந்தோர்
கண்ட வாறே" என்பார் தொல்காப்பியப் பெருந்தகையார்.

இருவரும் மாத்திரை என்பதற்கு அளவு என்றே பொருள் கொண்டனர். கடலின் திரை, கரை நோக்கி வருதலும் உட்புகுதலும் ஆகிய கால அளவு என ஆசிரியர் கொள்கின்றுர்கள்.

**ஆதலால் முதற்சுட்டு அஆ இஈ**
**உஊ என்ன ஓராறுகும் (அமரு)**

**உரை**

முதற்சுட்டு என்று சொல்லப்படும் அ இ உ எனும் மூன்றும் தத்தம் நெடிலோடு சேர்ந்து அ ஆ இ ஈ உ ஊ என ஆறு எழுத்தாகும்.





அ, இ, உ என்பனவற்றை முதற் சுட்டென்ருர், இவையே உயிர் வர்க்கமும் உயிர்மெய் நிரலும் தோன்றக் காரணமாக இருத்தலின்

**ஓரா றுடன்மேல் ஓராறுகி**
**ஓரை யாமா றெலியின் இயியில்**
**இ . அ . ஐ . என எகரம் தோன்றும் (அமசா)**

**உரை**

ஓராறு எழுத்தின் மேலும் ஓராறு எழுத்தாகி பன்னிரண்டு ராசி, அல்லது லக்கினம் ஆமாறு பன்னிரண்டையும் கூறினுர்கள். அந்நிலை முறைப்படி ஒலியின் நியதியில் இ அ ஐ என்ற மூன்றயும் சேர்த்து ஒலிக்க எகரம் தோன்றும்.

இ அ ஐ மூன்றையும் சேர்த்து ஒலித்துப் பார்க்க எகரந் தோன்றுவது புலப்படும்.

அ, இ, உ ஆகிய மூன்றின் இயைவால் ஏனைய எ ஏ ஐ ஒ ஓ ஔ என்ற ஆறும் தோன்றும் காரணமாக ஓராறுடன் மேல் என்று கூறுகின்ருர்கள். இவையே, அவையாம் என்பது புலப்பட.

**தோன்று வியல்பையோர் தோற்ற மாக்கச்**
**சார்பு வேண்டும் அச்சார்பே ஐகான் (அமஎ)**

**உரை**

தோன்று நிலையில் இருக்கும் ஒன்றை ஒரு தோற்றமாக உண்டாக்குதற்குச் சார்பு ஒன்று வேண்டும். அந்தச் சார்பே ஐகாரமாகும்.

இகரம் அகரத்தோடு இணைந்து ஐகாரச் சார்பு பெறுதலினுல் எகரம் தெளிவாகத் தோன்றும். இகரம் ஆம் நாத எழுத்து அகர உயிருடன் கூடி எகரம் தோன்றுதல் தெளிவாகப் புலப்படாது. இவை ஐகாரச் சார்பு பெறும் போது எகரந் தோன்றுதல் தெளிவாகும்.

"அகர இகரம் எகரம் ஆகும்" என்பது தொல்காப்பிய நூற்பா.

மேற்கூறியவற்றையும் இந்த நூற்பாவின் இயைபு முறையினையும் இணைத்துப் பார்த்து எகரந் தெளிவுடன் தோன்றும் நிலையினையுணர்க.

**ஐகான் இகரமுற் றுய்ச்சார் யெழுத்தாய்**
**நாதம் உயிரை நண்ண வருஉம்**
**எழுத்தை யடுத்ததாய் இயைவதும் இதனுல் (அமஅ)**

உ
சிவமயம்
**உரை**

ஐகாரமானது, இகர எழுத்தின் ஒலி நிறைவைக் காட்டக் கூடியதாய், சார்பு எழுத்தாய், நாதமாகிய இகரம், உயிராகிய அகரத்தைப் பொருந்துதலினுல் தோன்றும் எகரத்தை அடுத்து வருவதும் இதனுலேயாம்.

**இயையும் எழுத்து இரண்டொன் ருனதே**
**எகரம் என்பதற்கு எடுத்துக் காட்டாய்த்**
**தலைப்படு புள்ளி சாரும் வரிசையில்**
**எகரமேற் புள்ளியொன் றிட்ட தென்க** (௮௰௯)

**உரை**

இகரம் ஆகிய நாத எழுத்தும், அகரம் ஆகிய உயிர் எழுத்தும் இயைவதால் உண்டானதே எகரம் என்பதனை எடுத்துக்காட்டவே, தலைப்படுபுள்ளி சாரும் எழுத்து வரிசையில் எகரத்தை நிறுத்தி அதன்மேல் புள்ளியிட்டதும் ஆகும்.

ஏ் இவ்வாறு எகர எழுத்தின் மேல் புள்ளியிடுவது, இகரம் அகரம் ஆகிய இரண்டும் ஒன்ருனதைக் காட்டவேயாம். இ, அ என்னும் இகர அகரத்தின் இரண்டு புள்ளிகளையும் நோக்குக.

இகரம் - நாதம்
அகரம் - உயிர்

**எண்ணில் ஆறின்மேல் எய்தும் ஒன்றற்**
**கிலக்கமாய் எகரம் இயைவதும் நோக்குக** (௯௰)

**உரை**

ஆறும் எண்ணின்மேல் ஏழாம் எண்ணிற்கு உரிய எழுத்தாக இலக்கமாக எகரம் ஆனது இயைவதும் இந்தக் காரணத்தினுலேயாம்.

எண் குறித்த 'எ' என்னும் இலக்கம் பொருள் குறித்தும் வருவது அறிந்து மகிழ்தற்குரியதாம்.

**எகரம் ஏழின் இலக்கம் ஆவதோ**
**டேழாம் எழுத்தாய் இயையப் பெறுவதும்**
**ஏழினைச் சத்தம் என்று மொழிவதும்**
**நாத வுயிர்மெய் யாதல் காட்டும்** (௯௰௧)



உ
சிவமயம்
**உரை**

எகரமானது ஏழ் என்னும் எண்ணைக் குறிக்கும் இலக்கம் ஆவதோடு, அகர வரிசையில் ஏழாம் எழுத்தாக அமைவதும், ஏழினைச் சத்தம் என்று கூறுவதும் எகரமானது நாத உயிர்மெய் என்பதனைக் காட்டும்.

நாத உயிர்மெய் - நாதத்திற்கும், உயிர்க்கும் மெய்யாக அமைவது.

**மேலும், ஙஅ ல்அ, மெய்யில் நலிந்து குன்றியும்**
**சகர மெய்யிற் றனிச்சிறப் புற்றும்**
**ரகரமெய் கூட லாற்றிரி புற்றும்**
**சார்பாம் ரகரமெய் தன்னிற் றுலங்கியும்**
**எகரம் வரலால் இயைந்து தோன்றிய**
**ஐந்தைச் சத்தெழுத் தைந்தாய்க் கொள்ளும்**
**இயலினும் எகரத் தோற்றம் உணரலாம்** (௯௰௨)

**உரை**

உயிரானது நாதத்தைச் சார்வது முறையாகும். நாதமானது உயிரைச் சார்வது எதிர்மறையாகும். அவ்வாறு எதிர்மறையாய சார்வதால் காற்றுனது லயப்படுதலால் அங்கி என்னும் கலையானது இருவகையாகத் தோன்றும் முக்கலையாகி விளங்கும் தன்மையால் சூரியகலையாய் ஏழ்வகைக் குதிரைகளையுடைய சூரியனுக 'எ' கரம் தோன்ற நிற்கும்.

'ங' கர மெய்யில் எகரம் சேரும் போது ஙெ என ஒலி நலிவுறுதலை நுண்ணிதில் உணர வேண்டும். ல-கர மெய்யில் சேரும் போது 'லெ' என எகரம் குன்றி ஒலிப்பதையுணரலாம். ச-கர மெய்யில் எகரம் சேரும் போது 'செ' என அழுத்தந்திருத்தமாய் ஒலித்தலும் ர கர மெய்யானது எகரத்துடன் இணையும் போது 'எர்' என எகரத்தின் ஒலி திரிபடைதலும், சார்பாகிய ர-கர மெய்யில் எகரமானது, 'ரெ' எனத் தெளிவாக விளங்கி வரும். ஆதலால் ஙெ, லெ, செ, எர், ரெ ஆகிய ஐந்தும் சத்த எழுத்து என்று கொள்ளப் பெறுகிறது.

இறைவனுரின் செயற்கூறுபாடுகள் ஐந்து ஆறை போல நாதத்தின் செயற்கூறுபாடும் ஐந்து ஆனதன்மையை விளக்கிய நிலை நுட்பமுடையதாகும்.

நுணுகி ஆராய 'எ' கரத்தின் ஏற்றம் புலப்படும்.

**உணர்க நாதம் உயிரைச் சாரும்**
**எதிர்மறை யாற்கா லியம் ஆக**
**அங்கியொன் றிருவகை யாகி முக்கலையாய்**
**விளங்கும் மியலில் வெய்யோன் கலையாய்**
**இவுளி ஏழோன் எனவாம் எகரம்** (௯௰௩)

உரை

இறைவனோடு ஒன்றியிருந்த உயிர், விட்டணுவாகி நாதத்துடன் ஒன்றி விந்தில் அமையும் இது தான் இயற்கை. இங்கு நாத எழுத்தாகிய 'இ' உயிர் எழுத்தாகிய 'அ' வுடன் சார்வதால் 'எ' தோன்றுகிறது. இதில் எதிர்மறையாக சேர்வதால் கால் எழுத்தாகிய 'ர' கரம் இலயம் ஆக ஒன்றியிருந்த அங்கி இருவகையாகி முக்கலையாய் மாறி விளங்கும் இயலில் ஏழு குதிரைகள் பூட்டிய வாகனத்திற்குரியவனை சூரியன்யென சூரியகலையாய் பிங்கலை எழுத்தாம் 'எ' ஆகும்.

**எகரம் என்னும் எழுத்திற் சூக்கமும்**
**சிறப்பும் சார்பாற் றெளியுங் காலை**
**என்றூழ்சகர மெய் யிற்சவி தாவென**
**நாத எழுத்தை நண்ணிச் சிகாரமாம்** **(௬௰௪)**

உரை

எகர எழுத்தின் சூக்குமத்தினையும், (நுட்பத்தினையும்) சிறப்பினையும் அது சார்ந்து நிற்கும் எழுத்தின் நிலை வழி ஆராயும் போது நாத உயிர்மெய்யாகிய எகரம், தன் ஒலி, தெளிவும், உரமும் அமையும் வண்ணம் ஒலித்தற்கு ஏதுவாகிய ச-கர மெய்யிற் சேர்ந்து தான் உருவாவதற்குக் காரணமாய இகரமாய் (சகரத்தைப் பொருந்தி) சிகரமாம் நிலையினைப் பெறுகிறது.

எகரம் நாதத்துவத்திற்றேன்றி சூரிய கலையை நினைவூட்டும் தன்மையதாகும். இது இகரம் அகரத்துடன் கூடும் கூட்டத்தால் தோன்றிய கூட்டெழுத்தாகும். எகரம் தான் சிறந்தொலிக்கும் சகரமெய்யில் சூக்கும நிலையில் உள்ள இகரமாய்ச் சேர்ந்து சிகாரம் என்னும் நிலையைப் பெறுகிறது.

எகரம் - தூலம் - சிகாரம் - சூக்குமம்.

**சிகார மாகச் சிறந்த நாத**
**விந்தில் வெளியும் வெளியில் வளியும்**
**வந்த போற் கலையில் வன்னிதோன்ற**
**எகரச் செகரம் எய்திச் சிகாரம்**
**தோன்றி நிற்பதை தொன்மறை தந்த**
**ஐந்தில் நடுவெ முத் தமைவுகாட்டும்**
**சிவய மாகச் திகழுஞ் சிகாரம்** **(௬௰௫)**





உரை

நாத தத்துவத்தில் வெளியும், அந்த வெளியில் வளியும் தோன்றுதல் போல கலையில் தீ என்னும் பூதம் தோன்றி நிற்பதை எகரமானது ச் என்னும் மெய்யுடன் பொருந்தி செகரம் என்னும் நிலையை எய்தி அதன்கண் சிகாரம் தோன்றி நிற்பதை என்றும் நிலையாக உள்ள வேதங்கள் முடிவாகத் தந்த திருவைந்தெழுத்தில் நடுவெழுத்தாக நிலைபெறும் சிகாரம் காட்டும். இது சிவயமாகத் தோன்றும்.

நாதத்தில் ஆகாயமும் விந்துவில் வெளியும் தோன்றுமாப் போலே கலையில் தீ என்னும் பூதம் தோன்றியுள்ளதை தீயின் கருவாகிய (பீஜமாகிய) சிகாரம் உணர்த்தும்.

**நாதம் உயிரை நண்ண எகரம்**
**வந்த போன்று விந்து வுயிரோ**
**டுறவு கொள்ள ஒகரம் தோன்றும்** **(௬௰௬)**

உரை

நாத எழுத்தாகிய இகரம் உயிர் எழுத்தாகிய அகரத்தைப் பொருந்த எகரம் தோன்றுதல் போல, விந்தெழுத்தாகிய உகரம், உயிர் எழுத்தாகிய அகரத்தினோடு உறவு கொள்ள ஒகரம் தோன்றும்.

"அகர உகரம் ஒகர மாகும்" என்பது தொல்காப்பியம். உகர அகரம் ஒகரம் ஆகும் என்பது அகத்தியம்... பெருந்தகையார்கள் இரண்டையும் உற்றுநோக்கி உணர்வார்களாக.

**ஒகரம் தோன்றும் உகரம் அகரமோ**
**டொன்ற விந்நிலை நின்றது காணச்**
**சார்பாம் ஔவுடன் நேர்பட வாக்காய்**
**உ. அ. ஔ. என ஒன்று கூட்ட** **(௬௰௭)**

உரை

உகரம் ஆகிய விந்தெழுத்தானது அகரமாகிய உயிரெழுத்துடன் பொருந்த ஒகரம் என்னும் எழுத்து தோன்றும். இவ்வாறு நிலைபெற்று நின்றதைக் காட்டும் வண்ணம் ஒகரத்தைச் சார்ந்து நிற்கும் சார்பெழுத்தாகிய ஔகாரத்தை, விந்து உயிர் ஆகிய உ அ என்னும் எழுத்துடன் ஒன்று கூட்ட வேண்டும்.

உ அ ஔ ஆகிய மூன்றையும் ஒன்று கூட்டி ஒலிக்கும் போது, ஒகரத்தின் ஒலித் தெளிவுடன் புலப்படும்.

உ அ ஔ என ஒன்று கூட்ட என்னும் ஈற்று அடியுடன் ஒகாரந் தோன்றும் என்னும் முதலடியை இயைத்துப் பொருள் கொள்ள வேண்டுதலின் இது பூட்டுவில் பொருள்கோளாகும்.

**ஒன்று கூட்ட நின்ற எழுத்தாய்**
**ஔகான் உள்ளதென் றமைவு காட்டவே**
**ஒகரத் தொடர்அடுத் துள்ள சார்பாய்**
**ஔகான் எழுத்தை அமையச் செய்தது.** (௫௰௮)

**உரை**

விந்து எழுத்தாகிய உகாரத்தையும், உயிர்எழுத்தாகிய அகரத்தையும் ஒன்று சேர்க்க நின்ற எழுத்து என்று காட்டவே ஒ ஓ என்னும் ஒகரத்தின் தொடர் அடுத்துள்ள சார்பாய் ஔகான் என்னும் எழுத்தை அமையச் செய்திருக்கிறார்கள். ஆகவே ஔகாரம் ஒகரத்தின் சார்பெழுத்தாகும்.

**அமையாப் பேரொலி யாய்நீள் ஒகரம்**
**அமையச் செய்யல் அதனுற் சிறப்பாம்** (௫௰௯)

**உரை**

அமையாத பேரொலியாக நீண்டு ஒலிக்கும் ஒகரத்தை (ஓ என்னும் எழுத்தை) உரிய அளவோடு நிலைபெறச் செய்யதல் ஔகாரத்தின் சிறப்பாகும்.

**சிறப்புடைத் தாகத் திகழும் நாத**
**விந்து கலையில் விளங்கி நின்ற**
**வெளிவளி யங்கிபோல் விந்துயிர் மெய்யாம்**
**சந்திர கலையில் தண்புனல் தோன்றும்** (௬௰)

**உரை**

மிகவும் சிறப்புடைய பொருளாக விளங்கும் நாதம், விந்து, அவை உயிருடன் பொருந்தும் கலை ஆகியவற்றில், வெளியும், வளியும், அங்கியும் (தீயும்) தோன்றும் தன்மை போல, விந்துயிர் மெய்யென்றும் சந்திர கலையில் தண்புனல் தோன்றும்.

நாத எழுத்து இகரம் ஆகும். நாதம் ஒலிக்கின்ற இடமாக யகரம் என்னும் கருவைக் கொண்ட (பீஜத்தைக் கொண்ட) ஆகாயம் தோன்றும். நாதம் என்னும் இகர எழுத்து அகரம் என்னும் உயிரை எதிர்மறையாகப் பொருந்த எகரம் என்னும் எழுத்துத் தோன்றும். அது போல் விந்தெழுத்தாகிய உகரம் உயிர் எழுத்தாகிய அகரத்தோடு எதிர்மறையாகப் பொருந்த ஒகரம் தோன்றும். உகரமாம் விந்து வகரத்தில்





தோன்றியதாகும். இந்த விந்தில் வகரத்தைக் கருவாகக் கொண்ட (பீஜமாகக் கொண்ட) வளி தோன்றும்.

ஆகவே நாதத்தில் வானும் விந்துவில் வளியும் நாத உயிர்க் கூட்டமாம் சூரியகலையில் தீயும், விந்து உயிர்க்கூட்டமாம் சந்திரகலையில் தண்புனலும் தோன்றும்.

இங்ஙனம் எழுத்தில் உலகத் தோற்றத்திற்குரிய பூதங்களை உணர்த்தும் பாங்கு தமிழ் மொழிக்கு உரியதாகிறது. இங்ஙனம் கூறியுள்ளமை புதுமையாகும்.

**புனல்வளித் தூல மெனவுருப் பெற்றது**
**அம்முறை வளியெழுத் தான சூக்கத்**
**தூலமாகத் தோன்றும் மகரம்** (௬௰௧)

**உரை**

வளியின் (காற்றின்) வெளிப்படை உருவமாக நீர் உருப்பெற்றிருக்கிறது. அம்முறையாகவே வளியின் கருவாகிய வகரத்தின் தூலமாக மகாரம் அமைகிறது ஆகவே வகரமகரம் மோனைத் தொடைக்கு உரியனவாகின்றன.

தூலம் - வெளிப்படை. சூக்குமம் - நுட்பம்

**மகரத் திலயமாகும் ஒகரம்**
**இரண் டொன்றுன எழுத்தெனல் காட்ட**
**வந்தது அதன்மேல் மற்றுமோர் புள்ளி** (௬௰௨)

**உரை**

ஒகரம், மகரத்தில் லயப்படும். ஒகரமானது விந்தாம் உகரமும் உயிராம் அகரமும் ஆகிய இரண்டும் சேர்ந்த ஓர் எழுத்து என்பதனைக் காட்டவே ஒகரத்தின் மேலும் ஒரு புள்ளியை இட்டுள்ளனர். ஒ் ஒகரத்தின் தொடக்கத்தில் ஒரு புள்ளி இருத்தலோடு அதன் மேலும் ஒரு புள்ளி அமைத்து இரண்டு ஒன்றுன எழுத்து என்று காட்டப் பெற்றது.

"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையால்" என மெய்யெழுத்துக்கு வடிவம் கூறும் போது அதன் பின்னர் "எகர ஒகரத்தியற்கையும் அற்றே என ஒல் காப்பெரும் புகழ்ப் தொல்காப்பியனுர் கூற்றுக்குப் பெருந்தகையாரால் விளக்கங் கூறப்பட்டுள்ளது. இஃதும் புதுமையின் பாற்படுவதாம்.

**புள்ளி எழுத்தா யுள்ள விவைகள்**
**தூல சூக்குமத் தோற்றம் ஆகையால்**
**ஒன்றிற் சூக்கமாய் ஒன்று தோன்றியது.** (௬௰௩)

**உரை**

புள்ளியைக் கொண்ட எழுத்தாகிய இவைகள் தூலம், சூக்குமம் ஆகிய இரண்டினை தோற்றமாய் விளங்குபவை ஆதலினல் ஓர் எழுத்தின் சூக்குமமாக ஒன்று தோன்றியது.

நாத உயிர்மெய்யின் தோற்றம் 'ஏ்' என்னும் எழுத்தாகும். இவற்றின் கூட்டால் சூரியகலை தோன்றியது. இதன் தூலம் சிகாரத்தைக் கருவாகக் கொண்ட அங்கியாகும்.

விந்து உயிர்மெய்யின் தோற்றம் 'ஒ்' என்னும் எழுத்தாகும். இவற்றின் கூட்டால் சந்திரகலை தோன்றியது. இதன் தூலம் மகாரத்தைக் கருவாகக் கொண்ட நீராகும்.

**ஒன்றில் ஒன்று ஒன்றும் முறையின்**
**மாறிக் கூட வந்த கலையில்**
**மகரம்நீர்க் கூறு மாறு காட்டவே**
**இம்அம் எனப் பனியையும் இமகிரணன் என**
**தண்கதி ரவனையும் சாற்றினர் காண்க.** (பா ௪)

**உரை**

ஒன்றில் ஒன்றுனது பொருந்தும் முறைப்படி, முறை மாறிக் கூடுதலினல் வந்த கலை எழுத்தில் ஒ என்னும் எழுத்தில் அதன் தூலமாகிய மகரம் என்னும் எழுத்து, நீரின் கூறுகி விளங்கி நிற்பதைக் காட்டும் பொருட்டே இம் அம் (இமம்) என்று பனியையும், குளிர்ந்த கதிர்களையுடையவன் (இமகிரணன்) என சந்திரனையும், நம் முன்னோர் கூறியுள்ளனர். அதனை நாம் தெளிவாக உணர்தல் வேண்டும்.

**மேலும்.**

**தமிழ்தரும் மறையிற் றண்புனற் கூறய்**
**இதைவலி யுறுத்த இயையும் மகரம்** (பா ௫)

**உரை**

இத்துடன் தமிழ் மொழியானது தெளிவுறத் தரும் மறையில் (வேதத்தில்) கனிந்த திருவைந்தெழுத்தாகிய நமசிவய என்னும் மந்திரத்தில் மகரம் என்னும் எழுத்து குளிர்ந்த நீரின் கூருய் அமைந்து மேற்கூறியவற்றை வலியுறுத்தும்.

**மகரம் வந்த வரன்முறை நியதியின்**
**நீர் னின்று நிலம்தோன் றுவபோல்**
**மகர நிலையின் நகரம் தோன்றும்** (பா ௬)





**உரை**

மகரம் தோன்றிய வரன்முறை நியதியின் வண்ணம் நீரினின்று நிலமானது தோன்று போல மகரத்தினின்று நகரமானது தோன்றும்.

**மகரந்தோன்றிய வரன்முறை**

உ என்னும் விந்தெழுத்தானது அ என்னும் உயிரை மாறிக் கூடிய முறையால் ஒகரந் தோன்று நிற்கும் ஒகரம் விந்துயிர்மெய் என்னும் பெயர் பெறும். இது கலையின் அறிகுறியாய் விளங்கும். ஒகரமானது மகரத்தின் இலயம் ஆகும். (ஒடுங்கும்) ஒகரத்தின் மூலமாகிய விந்தெழுத்து (உகரம்) வகரத்தினின்று தோன்றியது என்பது முன்னரே விளக்கப்பட்டுள்ளது.

வகரம் வளி என்னும் பூதத்தின் கருவாகும். வளியின் தூலம் நீராகும். நீரின் உயிர்க்கூறு (கரு) மகரம் ஆகும். நீரினின்று தோன்றியது நிலம் ஆகும். அது போல நீரின் கருவாகிய மகரத்தினின்றும் நிலத்தின் கருவாகிய நகரம் தோன்றியுள்ளது.

**நகரம் மகரம் நாசியின் புறமும்**
**அகமும் ஆக அமைந்து ஒன்றற்**
**கொன்று தொடர்பாய் நின்று நிலமும்**
**நீரும் ஆன நிகழ்வு காட்டி**
**ஐந்திற் பழுதில் லாத விரண்டாய்**
**கலையுயிர்க் கணங்கள் நிலவும் நிலமாய்**
**நீரகங் கொண்டு நிற்கும் நகாரம்** (பா ௭)

**உரை**

நாசியின் புறமாக நகரமும், நாசியின் அகமாக மகரமும் அமைந்து ஒன்றற்கொன்று தொடர்பாக நின்று நிலமும் நீரும் ஆகிய நிகழ்ச்சியைக் காட்டி, ஐம்பூதங்களில் பழுதில்லாத இரண்டாய், கலை கொண்டு, உயிர்க்கும், உயிர்க்கணங்கள் நிலவும் நிலமாக நீரினை அகத்திற் கொண்டு நகாரமானது நிலை பெறும்.

நகாரம் - நிலத்தின் கருவாகும்.

மகாரம் - நீரின் கருவாக நிற்கும்.

நீரும், நிலனும்உயிர்க்கணங்கள் வாழுதற்குரிய இடமாதலின் ஐந்திற் பழுதில்லாத இரண்டாய் எனக்கூறுகின்ருர்கள். ஏனைய மூன்று பூதங்களும் உயிர் வாழும் இடமாக இல்லாமற் போனமையின் இவற்றைச் சிறப்பித்துக் கூறினுர்கள்.

நீரின் சூக்குமம் - வளி

நிலத்தின் சூக்குமம் - வெளி

சூக்குமம் நுட்பமாய் உணர்தற்குரியனவேயன்றி உயிர்க்கணங்கள் வாழ்வதற்கு இடமாகா.

**நகாரம் மகாரம் சிகாரத் துடனே**
**யொன்று மதனுல் உருத்திரள் சமையும்**
**அகமாய் உயிர்க்கணம் அனைத்தினுக் காக்கம்**
**அளிக்கும் பூதிய மாக நகாரம்**
**எல்லா எழுத்தினும் இயைந்து ஒலியின்**
**அறுதி தந்து அமைவு கொள்ளும்.** (பா ௮)

**உரை**

மண்ணின் கருவாகிய நகாரமும் நீரின் கருவாகிய மகாரமும் தீயின் கருவாகிய சிகாரத்துடன் ஒன்றும் தன்மையினுல் எல்லா உருவங்களும் உண்டாகும் இடமாகவும் உயிர்க்கணம் அனைத்தினுக்கும் ஆக்கத்தைத் தரும் பூதியமாகவும் நகாரம் எல்லா எழுத்தினும் இயைந்து (பொருந்தி) ஒலிகளுக்கெல்லாம் வரையறையினைத் தந்து அமையும்

பூதம் - ஐந்து பூதங்களும் தனித்தனியே குறிப்பிடப்படும் போது அமையும் பெயர்.

பூதியம் - ஐம்பூதங்கள் கலவை கொண்டு ஒன்றுகி நிற்கும் போது அமையும் பெயர்.

நகாரமானது பூதக்கலவையாம் பூதியமாக அமைந்து அனைத்தையும் உணர்த்தும் எல்லா எழுத்துக்களிலும் விரவி நின்று, அவற்றிற்கெல்லாம் நிறையும் எல்லை அறுதியைத் தந்து அமையும் தன்மையுடையதாகும். ஆதலின் இது பூதியம் என்னும் பெயர் பெறுகிறது.

**அமைவு கொள்ளும் ஐந்தெழுத் ததனில்**
**மற்றும் ஓர்நான் குற்றமண் கூறுய்**
**இதைவலி யுறுத்தும் இயைந்த நகாரம்** (பா ௯)

**உரை**

எல்லா எழுத்துக்களும் அடங்கி அமைவு கொள்ளும் ஐந்தெழுத்தில், ஏனைய நான்கு பூதங்களின் இயல்பையும் பெற்ற மண்ணின் கூறுய் அமைந்துதான் பூதியமும் ஆம் என்னுந் தன்மையினையும் உணர்த்தும்.





"பாரிடை ஐந்தாய் பரந்தாய் போற்றி" என்னும் திருவாசக அடியினையும் நோக்குக.

**இயைந்த முறையே ஈண்டு கூறிய**
**தொன்றே ரினமீ தொருமை கொள்ள**
**ஆக்கும் வகையில் அகஏனம் என**
**அனைத்தும் கூடியொன் றுய்த்தனி நிலையாம்** (பா ௰)

**உரை**

பொருத்தமாக ஈண்டுக் கூறியதில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு இனமாகும். இதனை ஒருமை கொள்ளச் செய்யும் வகையில் அக ஏனம் என அனைத்தும் கூடிய ஒன்றுய் நின்று, தனிநிலை என்னும் படி தனித்து நிற்கும் தன்மையும் உடையதாகவும் அஃகேனம் இருக்கும். ஆதலின் இது தனிநிலையென்னும் பெயரினையும் பெறும்.

தனிநிலை - ஆய்த எழுத்து

**அகரம் உயிரெழுத் ததன்சா ரியைக்அ**
**எகரம் நாதம் இயையுயி ரிவைகள்**
**அகஏ என்றும் அதனுடன் நம்எனும்**
**விந்துயி ரதனின் விளைவையுங் கூட்ட**
**அகஏனம் என யமைவ காண்க.** (பா ௰௧)

**உரை**

அகரம் உயிர்எழுத்தாகும். அது சார்ந்து வரும் க் அ (அதாவது க) சாரியையாகும்.எகரம் நாத எழுத்துப் பொருந்திய உயிராகும். இவையின் கூட்டு அ க ஏ என்ருகும். அதனுடன் விந்துயிராகும் ஒகரத்தின் விளைவினுல் உண்டாகும் நம் எனும் இவற்றையும் கூட்ட அ க ஏ னம் அமையும்.

இதுவரையும் கூறிவந்தது என்னையெனின், உயிர், நாதம், விந்து, நாத உயிர், விந்து உயிர் இவற்றின் விளைவாம் உயிர்வர்க்க எழுத்தாம் என்க. அவை பின் வருமாறு.

**அமைவு காண வாக்க வருந்தொடர்**
**அஆ இஈ உஊ எஏ**
**ஐ ஒஓ ஒளஃ கான் ஆம்** (பா ௰௨)

**உரை**

மேற்கூறிய அமைப்பில் வரும் உயிர்வர்க்க எழுத்தின் தொடர் அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ ஃ என்ன வரும் பதின்மூன்றும்.

ஃகான் ஒன்றே யனைத்தாம் மூல
குண்டலி மூன்று குண்டலி ஆண்பெண்
என்னும் உருவாய் இதுதனி நிலையின்
தொடர்நிலை தன்னிற் றூலமுஞ் சூக்கமும்
ஆகும் ஐவாய் அதமாகுங் கால்
ழ்ஃச (ஷ) ல்ஃச ( உரு ) ஃச ( ) ஃஅ (ஹ)
க்ழ்ஃச (க்ஷ) என்ன
சுரம்சரம் பூதம் ஆவி அச்சுஆம்
காது மெய்யொடு கண்வாய் மூக்கில்
வேதை யொலியாய் விளங்கி யாண்பெண்
இரண்டோ டலியாய் இருமொழிப் பொதுவாம் (௱௭௩)

## உரை

அஃகான் என்று சொல்லப்படும் ஆய்த எழுத்தாகிய ஒன்றே எல்லாம் ஆகும் மூல குண்டலி ஆனது. அக்கினி மண்டலம், ஆதித்த மண்டலம், சந்திர மண்டலம் ஆகிய மூன்றையும் உணர்த்தும் மூன்று சுழியாய் ஆண் பெண் என்னும் உருவமாய் விளங்கும். இத தனி நிலையிலும் தொடர்நிலையிலும் தூலமும் சூக்குமமும் ஆகும்.

ஐம்பொறிவயப்பட்டுத் தன்னிலை கெடும் போது ழ்ஃச (ஷ) ல்ஃச (உரு) ஃச ( ) ஃஅ(ஹ) க்ழ்ஃச (க்ஷ) என்னும் ஒலியாகவும், சுரம், சரம், பூதம், ஆவி, அச்சு ஆகிய காது, மெய், கண், வாய், மூக்கு, ஆகிய பொறிகளின் வேதைப்பாட்டு ஒலியாகவும் விளங்கி, ஆண், பெண் இரண்டோடு அலியாகி வடமொழி தென்மொழி ஆகியவற்றுக்குப் பொதுவாக நிலைபெறும்.

இருமொழிப் பொதுவின் ஒருமைச்சிறப்பீ
தீண்டு கூறிய தெல்லாம் நோக்க
உயிர்நாத விந்து கலைக லாதிகள்
பூதம் பூதியம் ஆதியாய் நிறைவாம் (௱௭௪)

## உரை

ஆரியம், தமிழ் என்னும் இரண்டுமொழிகளிலும் பொதுவாக அமைந்த தன்மை இதுவேயாகும். இவ்விடத்துக் கூறிய எல்லாவற்றையும் நோக்கும் போது, உயிர், நாதம், விந்து, கலை, கலாதிகள், பூதம், பூதியம் ஆகிய அனைத்தும் ஆக நிறைந்து நிற்கும்.

அதில்





உயிர்நாத விந்தாம் ஒரு தொடர்ச்சுட்டு
அஇஉ முதலெழுத் தாய மூன்றும்
ஐ ஔ சார்பெழுத் தாகி நிற்கும்
எ . ஒ கலைக ளிரண்டின் எழுத்தாம்
சார்பு நீக்கிய தான ஐந்தில்
பூத்துக் காணும் பூத எழுத்து
ஆ ஈ ஊ ஏ ஓ எனும் ஐந்து
எல்லாம் கூடி இயங்கும் பூதிய
மூல எழுத்தே முப்புள்ளி யதாம்
இவ்வா றுயிர்க்கலை எல்லாம் ஆக்கம்
சேர்நிறை வாகும் சிவய நமஃக. (௱௭௫)

## உரை

ஒரு தொடர்ச்சுட்டு என்று கருதப்படும் உயிர், நாதம், விந்து ஆகியவற்றை உணர்த்தும் அ, இ, உ என்னும் மூன்றும் முதலெழுத்துகளாம்.

ஐ ஔ என்னும் இரண்டும் சார்பெழுத்துக்கள் ஆகும்.

எ, ஒ என்னும் இரண்டு எழுத்துக்களும், கதிர், மதி ஆகிய இரண்டு கலை எழுத்தாம் ஐ ஔ என்னும் சார்பெழுத்துக்களை நீக்கிய ஏனைய ஆ, ஈ, ஊ, ஏ, ஓ ஆகிய ஐந்தும் பூத எழுத்துக்கள் ஆகும்.

எல்லாம் கூடியியங்கும் பூதியம் என்று சொல்லக்கூடிய மூல எழுத்து மூன்று, புள்ளிகளையுடையதாகும். இவ்வாறு உயிர்க்கலையெல்லாம் சேர்ந்து ஆக்கந்தரும் நிறைவாம் சிவயநமஃக ஆகும்.

அ, இ, உ ஆகிய மூன்று எழுத்துக்களும் உயிர்வர்க்கம் அனைத்தும் தோன்றுதற்கு மூலமாய், நிற்றலின் ஒருதொடர்சுட்டு என்று கூறுகிறார்கள்.

சுட்டு - வலியுறுத்திக் கருதச் செய்வது.

எகர ஏகாரங்கள் எல்லையின்றி நீளா வண்ணம் ஏகாரத்தைச் சார்ந்து ஒலி வரையறை செய்தலின் ஐகாரம் சார்பெழுத்தாகிறது.

ஒகர ஓகாரத்தைச் சார்ந்து அவற்றின் ஒலி நீளா வண்ணம் ஔகாரம் வரையறை செய்தலின் இஃதும் சார்பெழுத்தாகிறது.

ஆ, ஈ, ஊ, ஏ, ஓ ஆகிய ஐந்தும் நிறைவுற்றுப் பொலிதலின் இவை பூத எழுத்தாகின்றன. உயிர்வர்க்கத்தின் இயல்புகள் அனைத்தும் நிரம்பி

பரிணமிக்கின்றமையின் அஃகேனம் பூதிய எழுத்தாகிறது. உயிர்வருக்கம் அனைத்தும் சிவயநமஃக. மயமாகவே திகழ்வனவாம்.

**உயிரிய மானனு யாற்றல் புரிய வுறுந்தொடர்பு**
**பயிலிய வெல்லா மெழுத்தினிற் காட்டிய பண்புணர்வோர்**
**செயிரியல் தீர்நா விடத்தெழு தோற்றந் திகழவரு**
**முயிரியன் மெய்க்கலை கண்டவெழுத்தறி யுத்தம ரே. (பா௰௬)**

உரை

உயிரானது இயமானனுய் ஆற்றல் புரிய அமையும் தொடர்பினையெல்லாம் மேற்கூறிய எழுத்துக்களில் காட்டி விளக்கஞ் சொன்ன பண்பினை உணர்கின்றவர்கள் குற்றந்தீர்ந்த காது, கண், மூக்கு, வாய் ஆகிய நான்கிடத்திலும் எழுகின்ற தோற்றந்தரலால் வந்த உயிரியல் மெய்க்கலையை எழுத்தின் மூலம் கண்டறிந்த உத்தமர் ஆவர்.

இந்நிலையைச் சிலரே காணவல்லர் என்பது இதனுன் விளங்கும். இதனை "சைவ சித்தாந்தத் தேனமுதருந்தினர் சிலரே" என்பதனேடு நோக்கிப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

## பூர்வ காண்டம்

எழுத்துக்களின் முதலாய் அமைந்த உயிர்க்கலையின் இயல்பினை, அதன்வடிவான எழுத்தியல்பால் விளக்கும் பகுதியாதலின் இது பூர்வ காண்டம் வடிவெழுத்தியல் படலம் என்று பகரப்படுகிறது.

படலத்தின் பாங்கினை

"ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரின் அது படலமாகும்" என்னும்

பொதுப்பாயிரத்திற் கூறப்பெற்ற நன்னூல் நூற்பா நமக்கு நன்ருக விளக்கிக் காட்டுகின்றது.

இந்த பூர்வ காண்டத்தில், உயிர், நாதம், விந்து, கலை, கலாதி, ஆகிய அனைத்தின் கூறுபாடுகளையும், அவற்றின் வடிவ அமைதியினைக் கொண்ட பிராணிகளின் வடிவத்தில் இயைத்துக் காட்டியும், அவற்றின் ஒலியுருவத்தினை ஒலிக்கும் பிராணிகளின் மூலம் விளக்கிக் காட்டியும் சொல்வதால் இது பூர்வகாண்டம் வடிவெழுத்தியற் படலம் என்னும் பெயர் கொண்டது பொருத்தமாகிறது.

பல பொருள்களின் தன்மையை விளக்கிக் காட்டுதலின் இது படலமாகிறது.



## வடிவெழுத்தியற் படலம்

**அகரம் முதலாய் ஔகான் ஈருய்**
**வருந் தொடர் வைப்பின் வகுத்தவுருவ**
**நெறிவரன் முறைமை நிலைமை காண்பாம். (பா௰௭)**

உரை

அகரம் முதலாகவும், ஔகான் ஈருகவும் வருந்தொடர் வைப்பின் வகுத்தவுருவத்தின் நெறிமுறையின் நிலைமையினை வரன்முறையாகக் காண்பாம். (சொல்லுவாம்)

உயிர், நாதம், விந்து, கலை, கலாதி என்பன முறையே தொடர்பாகக் கூறப்படுதலின், "அகர முதலாய் ஔகான் ஈருய் வருந்தொடர் என்று கூறுகின்ருர்கள்.

மேற்கூறிய தொடர்நிலைப் பொருள்களுக்கு ஆன்ருேர் வகுத்தமைத்த உருவத்தினை (வடிவத்தினை) வரன்முறை நெறியான் காண்பாம் என்று கூறுவது, எழுத்துக்கு வரிவடிவம், பூத, பூதியம் உணர் தத்துவச் சான்ருேர் அமைத்ததே அன்றி, யாம் ஈண்டு அதற்கு வடிவம் கூறிற்றிலம் என்பதனையும் உணர்த்தியவாறு

## அகரம்

**நிலையின் நின்ற நெறியி னுயிரனு**
**விண்டு மனேவாய் வியையக் கீழ்மேல்**
**ஆகித் திரியுரு வமைவே அகரம் (பா௨௮)**

உரை

உயிரணுவானது, தான் இறையோடு ஒன்றியிருந்த தன்மையினின்று நீங்குதலின், அதனுடன் மனநிலையும், வளியின் சலனமும் பொருந்துவதால் கீழ்மேலாகித் திரியும் உருவ அமைவினைக் காட்டுவதே அகரத்தின் வடிவமாகும்.

உயிர், பரம்பொருளை விட்டு அணுவளவு நீங்கினுலும், உயிருடன் மனே நிலையும், வளியின் சலனமும் பொருந்துவதால், அது நிலைபேருன நிலையின் நீங்கிக் கீழ்மேலாகத் திரிகின்ற தாழ்வான நிலையினை எய்துகிறது என்பதனை இந்த நூற்பா விளக்குகிறது.

உயிர், பரத்தொடு ஒன்றியிருந்த காலத்து அதற்கு இருந்த உயர்வும், அதனின் விண்டு (விடுபட்டு) நீங்கிய காலத்து அஃது அடையும் அலைவுறுதல் நமக்கு புலனுகும் வண்ணம் அகர வடிவத்தால் நமக்கு உணர்த்துகின்ருர்கள். இதனல்

பெருந்தகையாரின் தத்துவ நூல் தெளிவும் யோகநெறியின் பாங்கும் நமக்குப் புலப்படா நிற்கும்.

நிலையின் நீங்கியவரின் தன்மையினை நமக்குத் திருவள்ளுவப் பெருந்தகையார் தெளிவாகக் கூறியிருக்கிறார்கள். ஆண்டுக் காண்க.

**இதில்.**

**நிலையின் நின்ற நெறியே புள்ளி**
**உயிரணு விண்டு வொன்றிம னேவாய்**
**வியையக் கீழ் மேல் எய்துவ புள்ளடி** (சூ ௰௯)

**உரை**

அகரத்தின் வடிவினை இளஞ்சிறுர்கள் முதன்முதலாக ℧ இவ்வாறே எழுதுவர். இந்நெறியினின்றும் அவர்கள் மாறுதற்குச் சில நாள் செல்லும்.

அகரத்தின் உண்மை வடிவம் இவ்வாறே அமைந்துள்ளது என்பதனையோக சாதன நெறியாளர்கள் உணர்வர். '℧' இதுவே அகரத்தின் வடிவம் என்பதனை நினைவிற் கொள்ளுதல் வேண்டும்.

உயிர் பரத்தொடு ஒன்றி நிற்கும் நிலையின் நெறியினை ○ இந்தப் புள்ளியுணர்த்தும் (அதாவது அகரத்தின் தொடக்கநிலை சுழியுணர்த்தும்)

அதனைவிட்டு உயிரணு நீங்கியவிடத்து மனோநிலையும் வளியின் சலனமும் பொருந்துவதால் உண்டாகும் நிலையினை பறவை அடியினை போன்று விளங்கும் '℧' இந்த வடிவம் உணர்த்தும்.

புள்ளடி - பறவையின் அடி

**புள்ளி யடியிற் பொருந்தா தொருபுறம்**
**கோழத் திரிபு கொள்வது கோடு** (சூ ௨௰)

**உரை**

உயிரானது புள்ளின் அடியிலும் பொருந்தாமல் ஒருபுறம் கோணலாகத் திரிவதே கோடாகும். ℧ இந்நிலை யோக சாதனநெறியிற் கண்டு கூறிய ஒன்றும்.

கோடு என்பது ——— இவ்வடிவைக் குறிக்கும்.





**கோடா திவ்வுருக் கொள்ளு யிரினத்தை**
**ஆந்தை என்று ஆஅந்தம் இயை**
**காரண வுருப்பெயர் காணக் காட்டலால்**
**இதுதிர் புற்றில தென்பது தெளிவாம்** (சூ ௨௰௧)

**உரை**

மேற்காட்டிய அகரவுருவத்தினை மாறுபடாமல் கொண்டிருக்கின்ற உயிரினத்தை, ஆந்தை என அகரத்தின் அந்தம் பொருந்திய காரணவுருவப் பெயரினை நாம் உணரும் வண்ணம் காட்டுகின்ற காரணத்தால், அகரத்தின் உருவம் திரிபடையாமல் இருக்கின்றது என்பது நமக்குத் தெளிவாகிறது.

அகரத்தின் வடிவத்தைப் பெற்றிருப்பதால் ஆந்தை என்று கூறப்படுகிறது.

## அகரநெடில்

**முறையே.**

**நெடிலை வொருகால் நீளும் நெறிபோல்**
**அகர நெடிலுக் கமையும் ஒருகால்** (சூ ௨௰௨)

**உரை**

நெடிலின் அளவானது ஒருகால் நீளுந் தன்மை போல் அகர நெடிலுக்கு ஒரு கால் நீண்டு அமையும்.

ஆ இதனை ஆ என்று எழுதுகின்றோம்.

## இகரம்

**அமைய வுயிரை யணைந்து நிற்கும்**
**இயற்கையாம் நாதத் தியலின் இகரமும்**
**அகரமாம் உயிரை அணைந்து வளைந்து**
**தழுவி நிற்கும் தன்மை யுருவாம்** (சூ ௨௰௩)

**உரை**

உயிரானது விந்துடன் பொருந்தும் வண்ணம் உயிரினை அணைந்து நிற்கும் நாதத்தின் இயல்பினைப் போல இகரமாகிய நாத எழுத்தும் அகரமாகிய உயிரை அணைந்து, வளைந்து தழுவி நிற்கும் தன்மையுடைய உருவமாகிறது.

ஆ இது இகரமானது அகரமாகிய உயிரை அணைந்திருக்கும் தன்மையைக் காட்டுவது.

இ இது அகரமாகிய ீ இது அகரமாகிய உயிரை வளைந்து தழுவி நிற்கும் தன்மையைப் புலப்படுத்துவது.

**உருவிற் செயலில் ஒலியில் ஒன்றுய்**
**உள்ளமை குறித்தே யோரெழுத் துச்சொல்**
**லியைத்தனர் காண்க, ஈயின் உருவம்** (சூ உ௱௪)

**உரை**

உருவத்திலும், சுழலும் செயலிலும், ஒலிக்கும் ஒலியிலும் ஒற்றுமையாக இருப்பதைக் குறித்தே ஓரெழுத்துச் சொல்லாக ஈ என்பதனை வகுத்து எழுதினர்.

ஈயின் உருவத்தினையும், சுழலும் செயலினையும் ஒலியினையும் கண்டும் கேட்டும் உணர்தல் வேண்டும்.

**ஈயின் உருவம் எய்தும் சுழற்சியும்**
**கூடும் வடிவக் குறிப்பே இகரம்** (சூ உ௱௫)

**உரை**

ஈ என்னும் பிராணியின் உருவமும், அது எய்தும் வடிவமும் கூடிய வடிவத்தின் அமைப்பே இகரமாகும்.

ஃ இது ஈயின் வடிவம். ீ இது அது எய்தும் சுழற்சி இரண்டையும் இணைத்துப் பார்க்கும் போது இகர வடிவம் புலப்படும்.

**இகர நெடில் கால்எய்தும் ஏற்கும் உருவில்**
**மயங்கியும் தெளிந்தும் வழங்குவ காண்க** (சூ உ௱௬)

**உரை**

இகரத்தின் நெடிலானது கால் கொள்ளும் உருவத்தில், மயங்கியும், தெளிந்தும் வழங்கும் முறையினை உணர்தல் வேண்டும்.

இ ஈ இவ்வாறு இரண்டு வடிவங்கள் முன்னும் பின்னும் வழங்கப்பட்டு வருதலின் வழங்குவ காண்க என்று குறிப்பிடுகின்ருர்கள்.





# உகரம்

**உயிரது நாதத் தொன்றி விந்தினை**
**அணுகி யுட்சுழித் தமைந்துருக் கொள்ளும்**
**இயற்கை வடிவத் தியையே உகரம்** (சூ உ௱௭)

**உரை**

உயிரானது நாதத்துடன் உறவு கொண்டு, விந்தினை அணுகி, உள்ளே சுழித்து அமைந்து உருவங் கொள்ளும் இயற்கையின் வடிவுத்தோற்றமே உகரம் ஆகும்.

உயிராம் அணுவானது தன் தகுதியை ஒத்த ஒருவன் தன் சுவாச நாதத்தின் பொருந்தி, அவன் சிரசின்கண் அமைந்திருக்கும் விந்தினை நெருங்கி, அதன்கண் சுழித்து, தான் ஒரு உருவங் கொள்ள மேற்கொள்ளும் நிலையை உணர்த்துவதே உகர வடிவமாகும்.

உயிரது - அதுசொல்லளவாய் நின்றது.

**உயிரது நாதத் தொன்றி விந்தினை**
**அணுகி நிற்ற லதுசுழி புள்ளி** (சூ உ௱௮)

**உரை**

உயிர் நாதத்தின் ஒன்றி, விந்தினை அணுகி நிற்கும் நிலையை உணர்த்துவதே சுழியும் புள்ளியும் ஆகும்.

ʅ - இது சுழி நாதத்தினையுணர்த்தும்

o - இது புள்ளி விந்துவினையுணர்த்தும்

இரண்டும் சேர்ந்த வடிவம் 'ℓ' இவ்வாறும்.

**புள்ளியாய் நின்றது பொருந்தும் வடிவே**
**சுழியின் நீட்சி துலங்கும் கோடு** (சூ உ௱௯)

**உரை**

புள்ளியாகப் பொருந்தக் கூடிய வடிவமே சுழியின் நீட்சியானது விளங்கும் கோடாகும்.

நீட்சி - நீளம்

உ - இது உகரத்தின் வடிவம்

o - இது புள்ளி

ʅ - இது சுழி

உ - இது சுழியின் நீட்சி

இவற்றை ஒன்றுக இணைப்பின் உ என அமையும். இதுவே உகரத்தின் முழு வடிவமாகும். புள்ளி பொருந்தும் சுழியின் நீட்சியாகவே உகரத்தின் வடிவத்தை எழுதுதல்வேண்டும். புள்ளியில்லாமல் உகரத்தின் வடிவத்தை எழுதுதல் கூடாது.

**இவ்வாறே**
**சுழித்தல் நீட்டல் துலங்கும் உருவம்**
**அமைநில வட்டை யதனை உ. உருவென**
**வழங்கலால் உருவழு வலலெனல் தெளிவாம்** (ஈடிம)

**உரை**

இம்முறைப்படி சுழித்தலும், நீட்டலும் விளங்கும் உருவம் அமைந்த நில அட்டையை உகரத்தின் உருவம் என உலக மக்கள் வழங்குதலால் உகரத்தின் உருவம் திரிபடையவில்லையென்பது தெளிவாகின்றது.

உ உரு என்பது உரு என்று ஆகியது

**உகரச் சுழியோ பொருகால் கூட்டி**
**உகர நெடிலுக் குருவகுத் ததனில்**
**அயிர்ப்பற உகரம் அதன்கீழிட்டனர்** (ஈடிக)

**உரை**

உகரத்தின் புள்ளிச் சுழியோடு ஒருகால் கூடுதலாக வைத்து, உகரத்தின் நெட்டெழுத்திற்கு உருவம் வகுக்கும் போது மக்களுக்கு சந்தேகமின்றி இருக்கும் பொருட்டு 'ள' இந்தச் சுழி கொண்ட காலின் கீழ் உ என்னும் வடிவத்தினை அமைத்து எழுதினர்கள்.

'ள' இது புள்ளிச் சுழி காலோடு சேர்ந்த உருவம்.

'உ' இது உகர வடிவம். இரண்டும் சேர்ந்த ஊ என்னும் இந்த வடிவமே உகர நெடிலின் வடிவமாகும்.

## எகரம்

**கலைநின் றிலங்கும் நிலைய வுருவே**
**யுருவா யமைய வருவது எகரம்** (ஈடிஉ)

கலை (வாசியானது) நிலைபெற்று விளங்கும் நிலையத்தின் உருவமே உருவமாக அமையும்படி வருவது எகரம் ஆகும்.





ஆவளியாம் வாசியானது போக்குவரவு புரிய இடமாக விளங்குவது மூக்கேயாகும். அந்த மூக்கின் இடத்தே இயங்கு வாசி அதன் வடிவத்தையே பெறுகிறது. குடத்தின் நிறைந்தநீர் குடத்தின் வடிவத்தைப் பெற்றுற் போல.

ℓ - இதுவே மூக்கின் ஒருபுற வடிவமாகும்.

ʖ - இது மறுபுற வடிவமாகும். இந்த வடிவமே எழுதும் வரிவடிவிற்கேற்ப எ என்று எழுதப்பட்டுள்ளது.

**எகர வுருவ மியைந்த கையுடை**
**யினத்தை எகையினம் என்று கூறலால்**
**இதுவுந் திரிபுற் றிலதெனல் தெளிவாம்** (ஈடிங)

**உரை**

எகரத்தின் உருவம் அமைந்த கையினை (சிறகினை) யுடைய பறவை இனத்தை எகையினம் என்று ஆன்றேர் கூறுவதால் எகரத்தின் வடிவமும் திரிபு அடையவில்லையென்று இதனுல் தெளிவுறுகின்றது.

இதுவே அன்னச் சிறகின் வடிவமாகும். எகரத்தின் வடிவமும் இஃதே என்பது காண்பார்க்கு நன்கு விளங்கும்.

**தெளிவாய்க் கலையெழுத் தெய்தும் உருவில்**
**காற்குறி கூட்டக் காண்பதே காரம்** (ஈடிச)

**உரை**

எகரம் கலை எழுத்து என்பது தெளிவதாகத் தெரிந்ததாகும். அதனுடன் காலின் அடையாளத்தைச் சேர்த்துக் காண்பதே ஏகாரம் ஆகும்.

எகரத்தோடு கால் குறியாகிய 'ா' இதனை நேரிடையாக இயைத்து எழுதாமல் அதன்கீழ் வாட்டத்தில் ஏ என காலின் ஒரு கோடினை மட்டும் இயைத்து ஏகாரம் அமைக்கப்பட்டுள்ளது. 'ள' இவ்வாறு அமைப்பின் அது எகரத்தின் வடிவமாகும் என்பதைக் கருதியே கீழ் வசமாகக் கோடிட்டு ஏகாரம் அமைக்கப்பட்டுள்ளது.

அதாவது எகரத்தின் அடியில் ⁄ இவ்வாறு காலின் ஒரு கோடிட்டு ஏகாரம் அமைக்கப்பட்டுள்ளது.

## ஐகான்

**எகர மான இரவி கலையின்**
**சார்பாம் பின்கலை நேர்புரு வாக**

**இடம்வலம் மாறி இயக்கம் காட்டும்**
**வடிவே தனது வடிவாம் ஐகான்** (பாட்௰௫)

**உரை**

எகரமாகிய சூரியகலையின் சார்பாகிய பின்கலை நாடி இடம் வலமாக மாறிச் செல்வதைப் போன்று இடம் வலம் ஆகிய இரண்டு இடங்களிலும் மாறி மாறி இயக்கங் கொள்ளும் உருவமே ஐ கான் என்பதன் வடிவமாகும்.

வாசி நிலை பெற்று விளங்கும் இடம் எகர வடிவமாகத் திகழ்கிறது. இந்த எகரத்திற்குச் சார்பாம் எழுத்து ஐகாரம் ஆகும்.

சூரிய கலைக்குச் சார்பாகிய பின்கலை நாடி இடம் வலமாக இயக்கங் கொள்ளுதல் போல எகரத்திற்குச் சார்பாகிய ஐகாரமும் இடம் வலமாகத் தோன்றும் உருவ நிலையைப் பெற்றுள்ளது.

ற - இது இடமிருந்து வலமாகச் செல்வது

ே - இது வலமிருந்து இடமாகச் செல்வது

ரு - இது மேற்புறத் தோற்றம்

ய - இது அடிப்புறத் தோற்றம் ஆகும். கீழ் மேல் வடிவங் கொள்ளும் நிலையிலும் மாற்றம் இருப்பதனை உணர்தல் வேண்டும்.

**ஐகான் வரன்முறை யஞ்சே யாகலான்**
**அவ்வுருப் பறவையை யஞ்சம் என்றும்**
**கூட்டெழுத் தாகையால் கூட்டுடை யஞ்ச**
**வுருவாய் மதுத்துளி பருகு மியற்கையிற்**
**றனியஞ் சத்துரு சாரும் வடிவாய்**
**மதுத்துளி தலைப்பட வருமெல் லினனன**
**அதனின் இடத்தி லமைஇடை இன ளள**
**வாய எழுத்தி லமைந்தும் வரலால்**
**அறிஞ ரிடைத்திரி புற்றி லதைகான்** (பாட்௰௬)

**உரை**

உயிர் வருக்க முறையில் ஐகாரம் ஐந்தாவதாக வருதலான் ஐகாரத்தின் உருவம் அமைந்த பறவையை அஞ்சம் என்றும், அ இ எ எழுத்துக்களின் கூட்டொத்தாகையால் கூட்டாக அமைந்துள்ள இரண்டு அஞ்சம் என்றும் சொல்லும்படி ஐகான் உருவம் அமைக்கப்பட்டுள்ளது. அஞ்சம் என்னும் அன்னம் மதுத்துளியாம் அமிர்தமழைத்துளி பருகும் இயற்கையினல். தனியாக அஞ்சத்தின் மதுத்துளி





அமைந்த உருவாக மெல்லின எழுத்துக்களில் ண ன என்னும் எழுத்துக்களும் அவற்றின் இடங்களில் அமையும் இடையின எழுத்தில் ல ள என்னும் எழுத்துக்களும் அமைதலால் ஐகாரத்தின் வடிவமானது மாற்றம் அடையவில்லை என்பது தெளிவாகும்.

அ, இ, உ, எ, ஐ என ஐந்தாவது இடத்தில் ஐகான் வருவதால் ஐகான் வரன்முறை அஞ்சே என்று கூறுகிறார்கள்.

அஞ்சம் என்பது அன்னத்தின் பெயராகும். அன்னம் மதுத்துளி தலைப்பினைக் கொண்ட உருவமாக ஐகாரம் ஆக்கப்பட்டிருக்கின்றது.

இ, அ, எ ஆகிய எழுத்துக்களின் கூட்டொலியைத் தரும் எழுத்தாக ஐகான் இருப்பதால் ൭൭ என இணையாக இயைந்திருக்கும் அன்னங்களின் உருவம் ஆக ஐகானை உருவாக்கியுள்ளனர்.

இரண்டு அன்னங்கள் இயைந்து மதுத்துளி பருக இயலாதாகையான் மெல்லின எழுத்துக்களில் ண ன எழுத்துக்களில் மதுத்துளி தலைப்பட்டு வரும் தன்மையினையும், இடையின எழுத்தில், ணகரம் பெற்றுள்ள மூன்றும் இடத்தைப் பெறும் லகரத்திலும் னகரம் என்னும் மெல்லினம் பெறும் ஆறும் இடத்தைப் பெறும் 'ள'கரத்திலும் மதுத்துளி தனியே அமைந்துள்ள தன்மை காணப்படுதலின் ஐகாரம் என்றும் உள்ளது ஒரே வடிவம் என்பது தெளிவாகும்.

அஞ்சு ஐந்து என்பதன் முற்றுப்போலி. அம் - விகுதி.

ஐந்தாவதாம் ஐகான் அன்னத்தின் வடிவுடைமையின் ஐந்தின் போலி அஞ்சு அம் விகுதி பெற்று அஞ்சம் என ஆகியுள்ளது.

## ஒகரம்

**ஒகரம் மதிகலை எகரம் இரட்டித்து**
**ஒன்றுய்க் கூடிய உருவாய் நின்றது.** (பாட்௰௭)

**உரை**

ஒகரமானது சந்திரகலையை உணர்த்தும் எழுத்தாகும். எகரத்தின் உருவம் இரட்டித்து ஒன்ருகக் கூடிய உருவமாக நிலை பெற்றது.

ᘓ ᘓ இடம் வலமாகவும் வலம் இடமாகவும் எகரம் இரட்டித்துள்ள வடிவம் மேற்காட்டியதாம்.

**அதுசரம் இதுதிறம் ஆனதால் இவ்வாறு**
**இரட்டிப் பானது இன்னும் தெள்வாய்**
**விளக்கும் இதனின் மீது இணைக்கோடு** (பாட்௰௮)

உரை

சூரிய கலையானது சர ராசியாகும். சந்திரன் திர ராசியாகும். ஆகையால் சந்திர கலையினையும் உணர்த்தும் எகரம் இரட்டிப்பானது. இந்த ஓ இரட்டிப்பின் மீது இணையும் கோடு இதனை நன்ருகக் காட்டும்.

"காலையிலே எழுந்து உருவம் கதிரவன் தான் கனல் மாறிக் குளிரடைந்த ஒளிபிழம்போ" என்னும் பாவேந்தர் பாரதிதாசனின் பாடல் அடியும் இதனை வலியுறுத்தும்.

சூரிய கலையானது இரட்டித்து மதி கலையாக மாறியுள்ளமை இதனுல் புலனும்.

கோடுத லின்றி யாடும் மயிலிவ்
வொகர வடிவ முறுங்கா ரணத்தால்
ஒகரம் என்றே பகர்வது கொண்டு
இதுதிரி புற்றில தென்று தேறலாம் (பா ௩௱௯௯)

உரை

வளைவு நெளிவு இல்லாமல் ஆகும் போது மயிலானது ஒகரத்தின் வடிவத்தினைப் பெறுங் காரணத்தால் அது ஒகரம் என்றே அழைக்கப்படுதலுடன் ஒகரத்தின் வடிவம் திரிபு அடையவில்லை என்பது நமக்குத் தெளிவாகப் புலப்பட நிற்கும்.

முன்போல்.

ஒகர எழுத்திற் கொரு கால்கூட்டி
ஓகர நெடிலிற் குருவம் காண்க (பா ௪௱)

உரை

ஒகர எழுத்துடன் ஒரு கால் கூட்டினல் அது ஓகார வடிவம் ஆகும்.

ஓ இவ்வாறு அமைத்து எழுத வேண்டியதை முயற்சி எளிமை கருதி 'ஓ' இவ்வாறு அமைத்துள்ளனர்.

## ஔகான்

இரவிகலை நின்றி லங்கும் நாடி
பின்கலை யாகப் பிறைக்கலை முன்னின்று
எல்லாக் கலையும் இதனிடை தோன்றி
நடைதர இடைகலை நாடி என்னத்





துலங்கும் நெறியே விளங்கும் ஒகர
எழுத்துடன் எல்லா எழுத்தும் தன்னிடை
கொள்ளத் திகழும் கொம்பு கால்ஒன்றும்
உருவோ டிடைகலை யுருவாம் ஔகான் (பா ௪௱௧)

உரை

இரவி கலையென்னும் சூரிய கலையானது நிலைபெற்று விளங்கும் நாடி பின்கலை (பிங்கலை) ஆகிவிடுவதால், பிறைக்கலையென்னும் சந்திரகலை முன்னின்று, எல்லாக் கலைகளின் கூறுபாடும் இதன் இடத்தே தோன்றி நிகழ்வதால் இடைகலை என்று விளங்கும்படியாக ஒகர எழுத்துடன் எல்லா எழுத்தும் தன்னிடத்தே நிலைபெற்று விளங்கும் வண்ணம் கொம்பு கால் இவை பொருந்தும் உருவத்துடன் இடைகலை என்னத் திகழ்வது ஔகாரத்தின் உருவமாகும்.

எல்லா எழுத்துக்களின் வடிவக் கூறுபாடும் தன்னிடத்தே அமையும் தன்மையை உணர்த்துவதால் இடைகலை என்னும் பெயர் காரணங் கூறி விளக்கந் தருகிருர்கள்.

ெ இந்தக் கொம்பும் ா இந்தக் காலும் இணைந்த வடிவத்தைப் பெற்றதும் ஒகரம் ஔகான் ஆகி எல்லாக்கலைகளின் தன்மைகளும் நிலவும் இடைகலை நாடியாகிறது.

இடைகலை, எல்லாம் இதன் இடை (கண்) அமைந்தது என்னும் பொருள் தரும்.

உருவிற் காதியாம் உயிர்நாத விந்து
கலையிற் கலாதி நிலையுரு வான
ஔகான் வடிவமை அத்திக் கனியை
ஔ அந்தப்பரல் ஆம்எனச் சொல்லலில்
தாது மூலச் சார்பி னுருவம்
அதைநுகர் சீவ னும்அஞ் சலிகைச்
சுழற்சியும் பற்றித் தொங்கும் காலின்
ஒன்றிய வுருவாய் நின்ற சீவனும்
ஆகு ஔகான் அந்தம் தோன்றலால்
இதுவுந் திரிபுற் றிலதெனல் தெளிவாம். (பா ௪௱௨)

உரை

எல்லா உருவங்களும் தோன்றுவதற்கு முதற்பொருளாகிய உயிர்நாதம், கலை என்பவற்றுள் கலையை ஆதியாகக் கொண்டு நிலை கொள்ளும் உருவமாகிய ஔகாரத்தின் வடிவமைந்த அத்திக்கனியை "ஔ அந்தப்பால் ஆம்" என்று

சொல்லுவதால், தாது மூலம், ஆகிய பொருள்கள் சாரும் உருவமும், அதை விரும்பி உண்ணும் சீவனும் வௌவாலின் சுழற்சியும், பற்றித் தொங்கும் காலின் ஒன்றிய வுருவாய் நின்ற சீவனுமாக ஔகாரத்தின் வடிவம் (உருவம்) தோன்றுதலால் ஔகாரமும் உருவத்தில் திரிபில்லையென்பது விளங்கும்.

அஞ்சலிகை - வௌவால்

ஔகான் அத்திப் பழத்தின் வடிவைப் பெறும்.

அத்திப்பழம் இந்த வடிவத்தில் அத்திமரத்தின் கிளைகளிலும் சிறுகொம்புகளிலும் பதிந்திருக்கும். அத்திப் பழத்தின் மேற்புறத்தசை அமைப்பினுல் தாதுப்பொருளின் தன்மையினையும், அதன் உள்ளே இருக்கும் நுண்ணணுக்கள் போன்ற வித்துக்களின் செறிவினுல் தாதுப் பொருள்கள் உண்டாகும் மூலமும் பெறப்படும்.

ஔகாரத்தின் முன்னே தோன்றும் 'எ' என்னும் கொம்பும் காலும் அமைந்தவுருவமானது, அத்திப் பழத்தினை உண்ணும் அஞ்சலிகையென்னும் வௌவாலின் சுழற்சியையும் அதுபற்றித் தொங்கும் கால்களையும் காட்டும்.

இவற்றையெல்லாம் நோக்கும் போது ஔகாரத்தின் வடிவம் திரிபடையவில்லை என்பது விளங்குகின்றது.

## தனிநிலை

**உயர்நாத விந்து கலைக லாதி**
**ஒன்று யமைந்த வுருவம் அஃகும்**
**அகமாய் ஆண்பெண் அலியென வமையும்**
**மூன்றுய் மூன்றின் முதன்மை யான**
**விச்சுரு வாக விளங்கும் இயலைக்**
**கொண்டு நின்ற குண்டலியுரு வொடு**
**குண்டலி யதனைக் கூடியும் நின்ற**
**சுழிமுனை வடிவுமாய்த் துலங்கு மஃகேனம்** (௱௪௩)

**உரை**

உயிர், நாதம், விந்து, கலை, கலாதி ஆகிய அனைத்தும் ஒன்றுக அமைந்த உருவமாகிய ஆக்கை சாரியக் கூடிய நிலையினைப் பெறும். இந்த ஆக்கை ஆண், பெண், அலி என்னும் மூவகை வடிவத்தினைக் கொண்டு விளங்கும்.





இந்த மூன்றின் இயல்பைக் காட்டக்கூடியதே குண்டலி என்னும் முப்புள்ளியாகும். குண்டலி சக்தி மூலத்தின்கண் அமைந்ததாகும். அந்தக் குண்டலி சக்தியைச் சுழிமுனை நாடி, கூடி நிற்கும். அந்தச் சுழிமுனை நாடியின் உருவத்தினையும் அஃகேனம் பெறும்.

'ஃ' இந்த முப்புள்ளியே அஃகேனத்தின் வடிவம். இது ஆண், பெண், அலி ஆகிய வடிவத்தையும், குண்டலி சக்தியின் வடிவத்தினையும் அதனைச் சாரும் சுழிமுனை வடிவத்தினையும் காட்டும்.

**இவ்வா றுருத்திரள் என்னும் அக்க**
**மணியாம் தனிநிலை வடிவைக் கொண்ட**
**தாது மூலமாம் தாவர மணியை**
**உருத்திர அக்கமென் றேதுவ தோடு**
**சீவனிவ் வுருக்கொடு திகழ்வதை ஏனம்**
**என்று கூறும் இயல்பைக் கொண்டும்**
**இவ்வுருத் திரிபற்றிலதென றெளிவாம்** (௱௪௪)

**உரை**

தனிநிலையென்றும் ஆய்தஎழுத்தின் வடிவத்தினை தாது மூலமாகிய தாவர மணியாம் உருத்திராக்கம் என்பது விளக்கிக் காட்டும்.

திரண்ட உருவங் கொண்டமையால் இது உருத்திரள் அக்கம் உருத்திராக்கம் என்று சொல்லப்படுகிறது. இவ்வாறு உருத்திரள் என்னுந் தன்மையோடு சீவனுகிய உயிர் இந்த வடிவத்துடன் திகழ்வதை ஏனம் என்று கூறுவதைக் கொண்டும் அஃகேனத்தின் உருவம் திரியவில்லையென்பது தெளிவாகும்.

ஏனம் என்பது தனிநிலையாம் ஆய்த எழுத்தினைக் குறிப்பதாகும். உயிர்புள்ளி வடிவைக் கொண்ட அதிநுண்மம் ஆகும். அது அஃகேனத்தின் புள்ளி வடிவைக் கொண்டு திகழ்தலின் ஏனம் என்று அழைக்கப்படுகின்றது எனவே அஃகேனம் தொன்றுதொட்டு புள்ளி வடிவாய் இருந்துள்ளது என்பது தெரிகின்றது.

**தெளி வோ டிதனிற் சிறப்பை நோக்கின்**
**வரியின் வடிவ வமைதியைக் கோடும்**
**கோடாய்ப் பொறித்தலைக் குறிக்கப் பொறியும்**
**பொறிக்கும் எழுத்தாற் பொலிசெய் பொருட்குத்**
**தொளையும் இவற்றின் றெடரை இணைத்து**
**யாத்தலை நூலும் ஆய்அணி செய்யலைக்**

**கண்டிகை நெடிதாம் காண்டிகை காட்டலால்**
**ஐந்திலக் கணம்இதில் அமைவ தோன்றும்** (௱சஉரு)

**உரை**

உருத்திராக்க மணியின் சிறப்பினைத் தெளிவுடன் சிந்தித்துப் பார்த்தால், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணமும் இதில் அமைவது தோன்றும். எழுத்துக்கள் அமையும் வரிவடிவத்தினை மணியின் கண் அமைந்துள்ள ஒவ்வொரு கோடும் காட்டும். கோடுகளில் பொறித்துள்ள பொறி எழுத்தினை உணர்த்தும். எழுத்துக்கள் ஆர்த்து ஒலி செய்து காட்டும் பொருள்களின் இயல்பினை மணியின் கண் அமைந்துள்ள தொளையுணர்த்தும். ஒவ்வொரு மணியை இயைக்கும் நூல், யாப்பினையுணர்த்தும். இம்மணிகளை அழகு பொருந்தும்படி செய்யும் கண்டிகை நெடிதாய்க் காண்டிகை காட்டலால் ஐந்து இலக்கணமும் இதில் அமைந்துள்ளமை புலப்படும். இங்ஙனம் உருத்திராக்க மணியினுல் ஐந்து இலக்கணமும் விளங்குதல் தெளிவாகும்.

**அமையும் சொருபவா தாரமூலம்**
**அதனில்விச் சுயிர்ஆழ் தொளை நாதம்**
**பொரியுரு விந்து வரியுரு வம்கலை**
**ஆய சார்பா யமையுங் கலாதி**
**யொருவடி வாகி யுருத்தி ராக்கம்**
**அஃகேனத்தியல் அனைத்தையுங் காட்டும்.** (௱சஉசா)

**உரை**

உருவம் அமைதற்கு ஆதாரமாகிய மூலத்தின் தன்மையினையும், புள்ளி, உயிரின் இயல்பினையும், ஆழ்ந்த தொளை நாதத்தின் கூறுபாட்டினையும், மணியின் கண் உள்ள பொறி விந்தின் தன்மையினையும் அமைந்துள்ள கோடுகள் கலையின் வடிவத்தையும் காட்டும் வடிவமாகிய கலாதி ஒரு வடிவம் ஆகியுள்ளதை மணியின் உருவாய் அமைந்த அஃகேனம் காட்டும்.

**உயிர்க்கலை பன்னிரண் டொன்றின் உருவ**
**வமைவு கண்டபோன் றவற்றெலி யமைதி**
**விளக்கம் திட்பமாய் விளங்க விளக்குவாம்** (௱சஉஎ)

**உரை**

உயிர்க்கலை பன்னிரண்டினுல் ஒன்றின் உருவ அமைவு கண்டது போல, அவற்றின் ஒலியமைதியினையும் விளக்கும்படி திட்பமாக விளக்குவோம்.





**உயிரெழுத் தொலியை யொலிப்பதே ஆவாம்**
**நாத வெழுத்தொலி நவில்வதே ஈயாம்**
**விந்தெழுத் தொலியை விளம்புவதூ உளன்**
**இனன்கலை யெழுத்தை இயம்புவ தேறு**
**இனன்கலைச் சார்பெழுத் திசைப்பது சில் ஐ**
**இடைகலை எழுத்தொலி எழுப்புவ தோநாய்**
**இடைகலைச் சார்பெழுத் திசைப்பது ஔவா**
**எழுத்தனைத் திற்கும் இடமாய் வெளிவளி.**
**ஒலியாய்ச் சுழிமுனையுருவங் கொண்டு**
**அஃகென வொலிக்கும் அரவாம் அஃகி** (௱சஉஅ)

**உரை**

உயிரெழுத்தாகிய அகரத்தினை ஒலிப்பது பசுவாகும். நாத எழுத்தாகிய இகரத்தினைஒலிப்பது ஈயாகும். விந்தெழுத்தாகிய உகரத்தினை விளம்புவது நரியாகும். இனன் என்னும் சூரியகலை எழுத்தாகிய எகரத்தினை ஒலிப்பது காளையாகும். சூரியகலையின் சார்பெழுத்தாகிய ஐகார ஒலியை இசைப்பது சில்வண்டாகும். இடைகலையென்னும் சந்திரகலையின் எழுத்தாகிய ஒகரத்தினை ஒலிப்பது ஓநாய் ஆகும். இடைகலையின் சார்பெழுத்தாகிய ஔகாரத்தின் ஒலியை ஒலிப்பது வௌவால் ஆகும்.

எல்லா எழுத்திற்கும் இடமாகிய வெளியில் ஒலிக்கின்ற வளியின் ஒலியாய் சுழிமுனையாகிய முக்கோணத்தைக் கொண்டு அஃகென ஒலிப்பது அரவமாகும்.

**எழுத்தொலி காண்டற் கிலக்கிய மாக**
**வகுத்த தற்கப்பெயர் வழங்குவ காண்க** (௱சஉகூ)

**உரை**

எழுத்துக்களின் ஒலியைக் காண்பதற்கு இலக்கியமாக வகுத்து அதற்கு அப்பெயரினை வழங்குவதனைத் தெளிதல் வேண்டும்.

**காணும் வண்ணம் காட்டிய விதற்கு**
**முதலாய் நின்ற வதுகலை யாதலால்**
**கலையி னிடத்து நிலைபெறக் காணும்**
**வாயு மனம்உயிர் ஆய மூன்றென**
**அகத்திய எழுத்தும் அதனுருப் பிராணியும்**
**அதன்ஒலிப் பிராணியும் ஆயது கலாந்தம்** (௱ரு௰)

உரை

எல்லா எழுத்துக்களின் இயல்பினை எல்லாம் காணுமாறு காட்டிய இதற்கு முதலாக நின்றது கலையாகும். ஆகையால் அதனிடத்து நிலைபெறக் காணும் வாயு, மனம், உயிர் ஆகிய மூன்று என்று சொல்லும் வண்ணம் அகத்திய எழுத்தும், அதன் உருப்பிராணியும், அதன் ஒலிப்பிராணியும் ஆகியது கலாந்தம் ஆகும்.

கலை + அந்தம் கலாந்தம் என ஆகியது.

**அஞ்சா லுருப்பெற் றடவி யடைவது வாய்த்துலங்க**
**எஞ்சும் புறப்புற மென்னும் புற(அ) வமைதீர் கடந்து**
**மிஞ்ச லைலாம்விந் தியலய மாக வியன்பொதிகை**
**தஞ்சார் குறுகும் அகத்தியம் தேர்பவர் தக்கவரே** (பா ௫௰௧)

உரை

உயிர், நாத, விந்து, கலை, கலாதி ஆகிய அஞ்சால் உருப்பெற்று அடவி அடைவதாக விளங்க, எஞ்சி நிற்கும் புறம் புறப்புறமென்னும் அவமாகிய இடத்தைச் சார்ந்து விடாமல், எதிர்முகமாக சிரசிடம் சென்று, விந்தின் வடிவமாக விளங்கும் ஒளிவட்டத்தில் லயமாகி, சிறந்த பொதிகை என்னும் மூலத்தைக் குறுகும் அகத்தியம் தேர்பவரே தக்கவராவர்.

## கலாந்த விளக்கப்படலம்

**கலாந்த விளக்கம் கணிக்க வுயிர்மெய்**
**எழுத்தின் முதன்மை யெய்துங் ககரம்**
**முட்டை யுருவாம் மூல வடிவும்**
**சுவாதிட் டானத் தோற்றச் சதுரமும்**
**ஒன்றுய்க் கீழ்மே லுருவாய்க் காணும்** (பா ௫௰௨)

உரை

கலையின் உருவத்தினைத் தெளிவாகக் கணித்துக் கூற, உயிர்மெய் எழுத்தின் முதன்மை எய்தும் ககரமானது, மூலாதாரத்தின் வடிவமாகத் தோன்றும் முட்டை வடிவம், சுகவதிட்டானத்தின் வடிவமாகிய சதுர வடிவும் பெற்று இரண்டும் ஒன்றுய்க் கீழ்மேல் உருவமாகக் காணும்.

◯ - இது முட்டை வடிவம். இது மூலாதார வடிவைக் காட்டுவது.





□ - இது சதுர வடிவம். இது சுகவதிட்டானத்தின் வடிவத்தினைக் காட்டும்.

இரண்டும் சேர்ந்த வடிவமே 'க' என்னும் உயிர்மெய் எழுத்தாகும்.

இதில் முட்டை வடிவம் கீழும், சதுர வடிவம் மேலும் அமைந்து, மூலாதாரம் சுகவதிட்டானம் ஆகிய இரண்டு ஆதாரங்களின் வடிவமாக இது திகழ்கிறது.

மூலம் தனித்து நில்லாது, பிறிதொன்றினைச் சார்ந்து நிற்கும் இயல்பினது; ஆதலின் இரண்டின் வடிவமாகக் ககரம் அமைகிறது.

**சுகவதிட் டானத் தகமாம் ஙகரம்**
**சதுரமாம்த் தலகுறி யுடனே**
**மணிபூரகப் பிறை வடிவந் தழுவி**
**மெல்லினமாகையால் மெலிந்த துவட்சி**
**வடிவ மாக வமைந்து காணும்** (பா ௫௰௩)

உரை

இரண்டாவது ஆதாரமாகிய சுகவதிட்டானத்தின் அகம் 'ங' கரம் ஆகும். அது சதுரமாம் தலக்குறியுடன் மூன்ருவது ஆதாரமாகிய மணிபூரகத்தின் பிறை வடிவம் தழுவி மெல்லினம் ஆகையால் மெலிந்த துவட்சி கொண்ட வடிவமாக 'ங' அமைந்து காணும்.

**இத்த லத்துவல் லினமாம் சகாரம்**
**சகவதிட்ட டானத் தோற்றம் ஆன**
**சதுரம் தலைப்படத் தழுவிய மூலம்**
**ஒருபுறங் கோடும் உருவாய் நிற்கும்** (பா ௫௰௪)

உரை

சுகவதிட்டானத் தோன்றும் வல்லினமாகிய சகரம், சுகவதிட்டானத் தோற்றமாகிய சதுரத்தையும் மூலாதாரத்தின் தோற்றமாகிய முட்டை வடிவத்தையும் பெறுவதோடு ஒருபுறம் அமையும் கோட்டினையும் பெற்றுத் திகழும்.

□ - இது சுகவதிட்டான வடிவமாம் சதுரம்.

◯ - இது மூலாதார வடிவமாம் முட்டை.

— - இது ஒருபுறங்கோடு. இவற்றை ஒன்றுகச் சேர்க்கும் போது 'ச' ஆகிய இந்த வடிவத்தைப் பெறுகிறது. இதுவே சகரம் ஆகும்.

**இந்த வெழுத்தின் மெல்லினமாம் ஞகரம்**
**இருபுறந் துவளுரு வெய்துஞ் சதுர**
**வடிவ மாக வமைந்து நிற்கும்** (பா௫௫)

**உரை**

இந்தச் சகரவல்லினத்தின் இனமாகிய மெல்லின ஞகரம் என்னும் எழுத்து இரண்டு புறமும் துவளும் உருவம் அடையும் சதுர வடிவமாக அமைந்து நிற்கும்.

- இது இடம் வலமாகத் துவளும் நிலை.

- இது வலம் இடமாகத் துவளும் நிலை

ஞ - இது துவட்சி இரண்டையுங் கொண்டு சுகவதிட்டானச் சதுரத்தையும் பெற்றநிலை

ஏ - இதன்கீழ் ஒரு கோடிட்டால் □ சதுரத்தின் நிலை தோன்றும்.

**வாசி நடங்கொள் மணிபூ ரகத்தின்**
**எழுத்தாம் டகரம் இரவி மதியென**
**வலமிடம் நெடில்குறில் வடிவாய்க் காணும்** (பா௫௬)

**உரை**

வாசியென்னும் வளியானது இயக்கங்கொள்ளுகின்ற மணிபூரகத்தின்கண் தோன்றும் எழுத்தாகிய டகரம், சூரியன், சந்திரன் என்று சொல்லும் வண்ணம் வலமாகவும் இடமாகவும், நெடில் வடிவமாகவும். குறில் வடிவமாகவும் காணப் பெறும்.

| - டகரத்தின் இந்தக் கோடு குறிலாகும்.

—— - இந்தக் கோடு நெடிலாகும்.

| இது வலமாகும் —— இது இடமாகும்
இது சூரியன் இது சந்திரன்

**டகரம் தழுவும் ணகார எழுத்து**
**சூரியன் சந்திரன் சுடரென மூன்று**
**கலையுந் தோன்று நிலையக் குறியாய்**
**பிறைமுச் சுடர்ச்சுழி பெற்றுத் துவண்ட**
**மெல்லின வுருவம் விளங்க நிற்கும்** (பா௫௭)

**உரை**

டகரமானது தழுவும் மெல்லினமாகிய ணகாரம் என்னும் எழுத்து. சூரியன், சந்திரன், அக்கினி என்னும் மூன்று கலையும் தோன்றும் நிலையத்தின் அடையாளமாய்





மூன்று சுடர்களின் குறியாய் மூன்று சுழிகளைப் பெற்று. துவண்ட மெல்லினத்தின் உருவம் விளங்கும்படியாக நிற்கும்.

○○○ இவை முச்சுடர்ச் சுழி. ⌒ இது சுழிக்கு மேலே வரும் துவண்ட கோடு.

இதுவே பிறையாகும் துவட்சியும் ஆகும்.

துவளுதல் மெல்லினத்தின் இயல்பு.

**மணிபூ ரகவல் லெழுத்தாம் தகாரம்**
**மூல முதலவாம் மூன்று தலக்குறி.**
**ஒன்று சேர்ந்த வுருவாய்க் காணும்** (பா௫௮)

**உரை**

மணிபூரக தானத்தில் அமையும் மற்றொரு வல்லின எழுத்தாகிய தகரமானது மூலம் முதலாகிய மூன்று தானங்களின் அடையாளங்களைப் பெற்று மூன்றும் ஒன்று சேர்ந்த வடிவமாகத் திகழும்

மூலத்தின் வடிவம் ⬭ முட்டையாகும்

சுகவதிட்டான வடிவம் □ சதுரமாகும்

மணிபூரக வடிவம் ◡ பிறையாகும்

த இவை மூன்று தலத்தின் வடிவமாகும்.

**தகர வல்லினந் தழுவு நகாரம்**
**மணிபூ ரகப்பிறை வடிவந் தழுவு**
**சுவாதிட் டானத் தோற்றங் கொள்ளும்** (பா௫௯)

**உரை**

மணிபூரகத்தான தோன்றும் தகரமானது தழுவுகின்ற நகாரம் ஆனது. மணிபூரகத்தானத் தோற்றமாகிய பிறைவடிவம் தழுவுகின்ற சுகவதிட்டானத் தோற்றமாகிய சதுரத்தைப் பெறும்.

□ இது சதுரம். சுகவதிட்டான வடிவம்

) இது பிறை. மணிபூரகத்தான வடிவம்

இரண்டும் ஒன்று சேர்ந்து 'ந' இவ்வாறு நகார வடிவமாகத் தோன்றும்.

**த்அ. ச்அ இரண்டுந் தானத் தொடர்பொன்**
**றுன போல வவற்றி னுருவமும்**
**துவட்சி நீட்சித் தோற்றம் தவிர**
**ஒன்றுய் ஒலியும் ஒன்றித் தசசத**
**சாதா வாதல் தனிப்பெருஞ் சிறப்பாம்** (பாசு௰)

**உரை**

தகரமும், சகரமும் மணிபூரகத்தானத்தில் தோன்றும் தொடர்பால் ஒன்றுகும் தன்மையன. 'த' என்னும் எழுத்தின் ⌒ இந்த துவட்சியும், 'ச' என்னும் எழுத்தின் ⎯ இந்த நீட்சியுமே இரண்டுக்கும் உள்ள வேறுபாடு ஆகும். இவ்வாறு வரிவடிவம் ஒத்துக் காணப்படுதல் போல ஒலி வடிவமும் ஒன்றுகப் பொருந்தி தச சத என்று சாதாவாதல் இவற்றின் தனிப்பெருஞ் சிறப்பாகும்.

சாதா என்பது ஆன்மாவின் தூயநிலையை உணர்த்தக் கூடியவொன்றுகும்.

**அநாகதத் தானத் தமையும் பகாரம்**
**சிதைந்து நிமிர்ந்த திரிகோணத்தின்**
**வடிவ மாக வமைந்து காணும்** (பாசு௰௧)

**உரை**

நான்காவது ஆதாரமாகிய அநாகதத்தானத்து அமையும் பகாரமானது, சிதைந்து நிமிர்ந்த திரிகோணத்தின் வடிவமாக அமையும்.

△ இது முக்கோணம். ⏢ இது முக்கோணச் சிதைவு.

⊔ - இது அந்தச் சிதைவு நிமிர்ந்த பகரத்தின் வடிவம்.

**அமைந்து காணும் அநாகத் தான**
**முக்கோணத்தின் முந்நான் கான**
**உயிர்க் கலை மெய்யுட னென்றி வலமிட**
**மாறித் தோன்றும் வல்லின மெல்லினம்**
**என்னும் இருஅச்சு இடையின எழுத்தின்**
**உருவ விளக்கம் வருமுறை காட்டுதும்.** (பாசு௰௨)

**உரை**

நிலைபெற்று காணும் அநாகதத்தானமாகிய முக்கோணத்தினை பன்னிரண்டாக அமையும் உயிர்க்கலையானது, மெய்யுடன் ஒன்றி வலமாகவும், இடமாகவும் மாறித்





தோன்றுகின்ற வல்லினம் மெல்லினம் என்னும் இருவகை இனத்தின் இடையே அமையும் இடையின எழுத்தின் உருவ அமைப்பு நிலையின் விளக்கத்தினை ஈண்டுக் கூறுவோம்.

அநாகதத்தானமாகிய நெஞ்சினின்று தோன்றும ஆவளி (மூச்சு) நாசியின் வலப்பக்கம் ஓடுவது வல்லினமாகிறது. இடப்பக்கம் ஓடுவது மெல்லினமாகிறது. இரண்டுக்கும் நடுவே நிமிர்ந்து மேல்நோக்கிச் செல்வது இடையினமாகிறது. இது சுழிமுனை என்று சொல்லப்படும். அந்த இடையின் எழுத்தின் உருவநிலையின் வரன்முறையைக் கூறத் தொடங்குகின்றார்கள்.

**காட்டும் அகத்தியக் காட்சியிற் சுழினை**
**இருகலை பூரகம் ரேசக கும்பகம்**
**தம்பனம் ஆறுய்ச் சமைந்த வாறே**
**சுழிமுனை வழிவச் சூலம் யகரமாம்.** (பாசு௰௩)

**உரை**

அகத்தியம் காட்டும் காட்சியில், சுழிமுனை, இருகலை, பூரகம், ரேசகம், கும்பகம், தம்பனம் என்னும் ஆறுவகைச் செயற்பாட்டைக் கொண்டு விளங்குவது இடையினமாகும். அவற்றுள்ளே சுழிமுனை வடிவமாகத் தோன்றும் சூலத்தின் வடிவமே யகாரம் ஆகும்.

ψ இதுவே சுழிமுனை வடிவமாக 'ய' தோன்றும் சூலத்தின் வடிவமாகிய யகாரம்.

**இடைகலை பின்கலை எனுமிரு காலின்**
**அமைவு வடிவம் அஃதாம் ரகரம்** (பாசு௰௪)

**உரை**

இடைகலை, பின்கலை என்னும் இரண்டு காலின் அமைப்பின் வடிவமே ரகரம் ஆகும்.

ா இதுவே இருகாலின் வடிவமாகும்.

**வாயு பூரக வடிவாம் லகரம்**
**இதனைக் கண்பா டெய்து நிலையின்**
**உட்சுவா சத்தின் உருவத்துணரலாம்.** (பாசு௰௫)

**உரை**

வாயுவானது, உடலின் உள்ளே புகும் வடிவம் லகரம் ஆகும். இதனை உறக்கம் கொள்ளும் நிலையில் உள்ளே வாங்கும் சுவாசத்தின் உருவத்தால் உணரலாம்.

ெ - இந்த வடிவம் வாயு மூக்கில் சுழித்து சரீரத்தில் உள்ளே புகுதலையுணர்த்தும்.

◡ - இந்த வடிவம் உடலின் உள்புகுந்த வாயு வயிறு உப்பும் நிலையைக் காட்டி மீளுந்தன்மையை உணர்த்தும்.

'ல' இந்த லகரத்தின் முழு வடிவம் மேற்கூறிய நிலைகளை வடிவத்தால் உணர்த்தா நிற்கும்.

**ரகரந் திரிந்து லகர மாவபோ**
**லுருவ இயலினும் ஒத்து நின்றது** (/IT சூ௰௫)

**உரை**

ரகரமானது திரிந்து லகரம் ஆவது போல உட்புகும் போது தோன்றும் உருவ நிலையிலும் ஒத்து நின்றது.

**ரேசக மென்னும் நீள்சுவா சத்தின்**
**உருவத் தியற்கை யொன்றும் வகரம்** (/IT சூ௰௬)

**உரை**

ரேசகம் என்னும் நிலையானது வாயு உடம்பினின்றும் வெளியேறும் நிலையைக் குறிப்பதாகும். வெளியே வரும் சுவாசம் நீளும் தன்மையதாகும்.

இது வகரத்தின் உருவத்தினைப் பெறும்.

உ ரு சி ய நாட்டார் உடற்கூற்றின் இயல்பினைக் கூறும் நூலில், சுவாசம் உடலினின்று வெளியேறும் போது வகர வடிவத்தைப் பெறும் நிலையைப் படத்தின் மூலமாக விளக்கியிருக்கிறார்கள். ஆண்குக் காண்க.

**வாயுகும் பிக்கும் வடிவே ழகரம்**
**பேச்சும் மூச்சும் பெயரா தொன்றும்**
**கும்பத் தன்மைக் குறியீ் டெழுத்து.** (/IT சூ௰௭)

**உரை**

வாயுவானது சலனமின்றி நிலைபேறு கொள்ளும் வடிவத்தின் நிலையே ழகாரம் ஆகும். இது பேச்சும் மூச்சும் இன்றி ஒன்றும் (ஒடுங்கும்) கும்பகத்தன்மையைக் குறிக்கும் எழுத்தாகும்.

கும்பகம் என்பது வாசியானது மூலாதாரத்தில் ஒன்றும் நிலையைக் குறிப்பதாகும்.

"ஈராறு கால்கொண் டெழுந்த புரவியைப்
பேராமல் கட்டி பெரிதுண்ண வல்லிரேல்





நீரா யிரமும் நிலமா யிரத் தாண்டும்
பேராது காயம் பிராணந்தி ஆணையே".

என்னும் திருமந்திரப் பாடலால் திருமூலர் விளக்கந் தருகிறார்கள்.

பேராமல் கட்டியென்பது தான் கும்பகத் தன்மையைக் குறிப்பதாகும்.

**பேசும் அகரமும் பேசா மகரமும்**
**மேல் கீழாக வியைந்துருக் கொண்டு**
**கும்பகத் தன்மைக் குறிப்பை யுணர்த்தும்** (/IT சூ௰௧)

**உரை**

பேசும் நிலையையுணர்த்தும் அகரமும், பேசாத நிலையையுணர்த்தும் மகரமும் ஒன்றுகப் பொருந்தி, மேல் கீழ் ஆகும் தன்மையைப் பெற்று, கும்பத்தின் இயல்பு இத்தகையது என்பதனை உணர்த்தா நிற்கும்.

பேசா எழுத்து மகரம்
பேசும் எழுத்து அகரம்

பேசா எழுத்தாகிய மகர வடிவம் மேல் நிற்கின்றது. பேசும் எழுத்தாகிய அகரத்தின் வடிவம் மகரத்தின் கீழ் முழு உருவம் புலப்படாமல் ஆழ்ந்து கிடக்கின்றது.

ம - இது பேசா எழுத்தின் தோற்றம்

ழ - இது பேசும் எழுத்தாகிய அகரம் பேசா எழுத்துடன் ஒன்றி கும்பகத் தன்மை அடையும் தோற்றம்.

இரண்டு எழுத்தும் ஒன்றிய உருவம் ழ

அகரம் உருத்தெரியாமல் ஒன்றுவதே கும்பகநிலை என்று விளங்குகின்றது.

**மூலச் சுழியிற் கால்நிலை கொள்ளும்**
**தம்பன வடிவாய்ச் சமைந்தது ளகரம்** (/IT௰௨)

**உரை**

மூலமாகிய சுழியில் வாசியானது நிலை கொள்ளும் தம்பன வடிவமாக அமைந்தது ளகரம் ஆகும்.

ெ - இது மூலச் சுழி

ா - இது வாசியாகிய கால். இது அந்தச் சுழியில் தம்பனமாகும் செயல் வடிவ எழுத்தே ளகரம் ஆகும்.

தம்பித்தல் - ஒன்றில் ஒன்று ஒன்றி ஒடுங்குதல்.

**ஈண்டு கூறிய இடையினம் ஆறும்**
**சார்ந்து செயல்படு தன்மை எழுத்து** (௲௭௰௧)

**உரை**

இவ்விடத்துக் கூறிய இடையின எழுத்துக்கள் ஆறும் யாக்கையினிடத்து வாசி சார்ந்து செயல்படும் தன்மையை உணர்த்தும் எழுத்துகளாகும்.

**அகர முதல வாய வுயிர்க்கலை**
**ஒற்றிற் கொள்ளும் உடம்படுக் கையினிற்**
**பெயர்வு கொள்ளும் பெயர்எழுத் தென்ப** (௲௭௰௨)

**உரை**

அகரத்தை முதலாகக் கொண்ட உயிர்க்கலையெழுத்தாகிய பன்னிரண்டும், ஒற்றெழுத்துக்களோடு பொருந்தி அவற்றின் வடிவத்தைத் தாம் கொண்டு நிற்கும் தம் நிலை பெயர்வு கொள்ளும் பெயர் எழுத்து என்று சொல்லுவர்.

க ங ச பெயர் எழுத்து

உயிர்க்கலை எழுத்து பன்னிரண்டும் மெய்யெழுத்துடன் உடன்பட்டு உயிர்மெய்யென்று வரும்போது தம் வரி வடிவம் நீங்கி, ஒலி வடிவம் மெய்யொடு சூக்குமாய் நின்று இயக்கலின் பெயரும் எழுத்தாகிறது.

பெயர்வு கொள்ளும் எழுத்து பெயர் எழுத்து என்று கூறப்படுகிறது. பெயர் எழுத்தென்பது வினைத் தொகைநிலை தொடராய்ச் செயற்பாட்டைக் குறித்து நின்றது.

**பெயர்ந்தெழுந் தேகப் பெறுது நடைகொள்**
**ளுயிர்மெய் யான வுருக்கொண் டுறைந்து**
**மறையத் தோன்றுப வடிவ எழுத்தாம்** (௲௭௰௩)

**உரை**

உயிர்க்கலை எழுத்துக்கள் மெய்யுடன் ஒன்றி உயிர்மெய்யாகும் போது தம் நிலை முற்றிலும் பெயர்ந்து நீங்கி விடாமல் மெய்வடிவத்தைக் கொண்டு அதன்கண் உறைந்து தம் வரிவடிவம் மறையத் தோன்றும் மெய்வடிவ எழுத்தாகும்.

இவையே உயிர்மெய் எழுத்தாகும்.

உயிர் வருக்கத்தால் இயக்கப்படும் எழுத்தாகும்.

**எழுத்தின் உருவத் தியற்கை பண்டுபோல்**
**இன்றுளதாவெனு மிசைவுங் காண்போம்.** (௲௭௰௪)





**உரை**

உயிர்மெய்யெழுத்தின் உருவத்தன்மையையானது பண்டுள்ளது போல் இன்றும் உள்ளதா ? என்னும் பெற்றியை ஈண்டுக் காண்போம்.

## கலாந்தவடி வெழுத்தியற்படலம்

**ககர வுருவத் திலயமாம் பொருள்**
**கலயம் என்றே கழறப் பெறலால்**
**ககர வுருவந் திரிபில தெளிவாம்** (௲௭௰௫)

**உரை**

ககரவுருவத்தோடு ஒன்றி (லயப்பட்டு) நிற்கும் பொருள் கலயம் என்றே எல்லோராலும் கூறப்படுதலால் ககரவுருவம் திரிபடையவில்லை என்பது தெளிவாகத் தெரியும்.


இது கலயத்தின் உருவம். ககரத்தின் உருவத்தினைத் தெளிவாகக் காட்டுகிறது.

**ககரந் தழுவும் ஙகரம் மூக்கிற்**
**றேன்று முருவந் துலங்கும் பொருட்பேர்**
**ஙஅண்டி க்அண்டிக் கெண்டி எனலால்**
**இதனுருத் திரிபில என்பது தெளிவாம்** (௲௭௰௬)

**உரை**

ககரமானது தழுவும் ஙகரம் என்னும் எழுத்தின் மூக்கில் தோன்றும் உருவம் விளங்கும் பொருளின் பெயர் ஙகரத்தினை அண்டி வருதலால் ங் அண்டி என்றும் க்அண்டி என்றும், கெண்டி என்றும் சொல்லப்படுவதால் ஙகரம் பண்டுபோல் இன்றும் உருவந் திரியாதிருக்கின்றது என்பது தெளிவாகும்.


இது ஙகரத்தை அண்டிய கெண்டியாகும். வன்மைமென்மையைத் தழுவுதல் முறை ஆதலின் ககரம் தழுவும் ஙகரம் என்று கூறப்பெறுகிறது.

**சகர அகத்தைத் தழுவி யடுக்கும்**
**பொருளைச் சகடைனப் புலப்படக் காட்டி**
**யுரைத்தலாற் சகர வுருவந் திரிபில** (௲௭௰௭)

உ
சிவமயம்
உரை

சகரத்தின் வடிவினை ஒத்து நிற்கும் வண்டியை சகடு என எல்லோருக்கும் தெளிவுறும் படிக்காட்டிச் சொல்லுதலால் சகரத்தின் உருவமும் திரியவில்லை என்பது தெளிவாகிறது.

ச இது வண்டியின் ஒருபுறத் தோற்றம். சகரத்தையடுத்து நிற்பது.

**ஞகர வுருவ நிகருயிர்ப் பொருளை**
**ஞகரம் அண்டு ஞண்டெனக் கூறலால்**
**அவ்வுருத் திரிபில வாத தெளிவாம்.** (பா எ௰அ)

உரை

ஞகர எழுத்தினை ஒத்து நிற்கும் உயிர்ப் பொருளை ஞகரம் அண்டிய ஞண்டு என்று கூறுவதால் ஞகரம் பண்டுபோல் இன்றும் திரியாது இருக்கின்றது என்பது தெளிவாகும்.

**நீரின் மட்டமும் நிமிர்ந்த வாகும்**
**உடைய டகரம் ஒத்த வுருக்கொண்**
**டிலங்கும் பிராணியை இடங்கர் என்னலால்**
**இவ்வுருத் திரிபில வென்ன தெளிவாம்** (பா எ௰கூ)

உரை

நீரின் மட்டத்தில் உடலைக் கிடத்தி தலை நிமிர்ந்த வாகினையும் கொண்டதால் டகரத்தை ஒத்தவுருவங் கொண்ட பிராணியை இடங்கர் என்னலால் டகரவுருவம் என்றும் போல் உள்ளது என்பது தெளிவாகிறது.

இடங்கர் - முதலை. டகரத்தின்; அந்தத்தைப் பெறுவது. இது முதலைத்தலை நிமிர்ந்து நிற்கும் நிலை - இது உடலைத் தண்ணீரில் கிடத்தியிருக்கும் நிலை.

**நீரில் நிலத்தில் நீர்நிலை யகத்துள்**
**அழுந்திச் சுழித்தும் அடுக்காய் முச்சுழி**
**ணகரம் படுசெயல் நடப்பிற் கொண்டு**
**நுண்ணிதின் அலைதலால் நுண்ணலை என்னத்**
**தவளைக் குப்பெயர் சாற்றலின் ணகரத்**
**துருவந் தோன்றலால் ணகரந் திரிபில.** (பா அ௰)

உரை

நீரிலும், நிலத்திலும், நீர்நிலை அகத்திலும் நன்குக அழுந்திச் சுழித்து அடுக்காகிய ம்ச்சுழிணகரத்தை நடை முறையில் செயல் மூலங்காட்டி, சுருங்கிய வட்டத்துள்

உ
சிவமயம்

நுண்ணிதின் அலைதலால், தவளைக்கு நுண்ணலை (நுணலை) என்று பெயர் கூறப்படுதலால் ணகர உருவமும் என்றும் போல் உள்ளது என்பது தெரிகின்றது.

**வித்தும் முளையும் வேருங் கொண்ட**
**உருவில் தாவரும் உரிமைப் பாடுகொள்**
**மூலமா கியமூலிகை இனத்தைக்**
**தாவரம்எனவே சாற்றப் பெறலால்**
**தகர வுருவந் திரிபில தெளிவாம்** (பா அ௰க)

உரை

வித்தும், முளையும், வேருங்கொண்ட உருவத்தில் த என்னும் எழுத்துத் தோற்ற உரிமையைக் கொண்ட மூலமாகிய மூலிகை இனம் தாவரம் என்றே சாற்றப்படுதலால் தகர எழுத்தின் உருவம் என்றும் போல உள்ளது தெளிவாகிறது.

○ - இது வித்து ㅁ இது முளை தோன்றும் நிலை. ↄ - இது வேர். இதுவே தாவரத்தின் தோற்றநிலை.

**நீட்டு நாவும் கூட்டுடல் வாகும்**
**ஆக நகரத் தமைவு கொண்ட**
**பிராணியை நந்தெனப் பேர் செப்பிடலால்**
**நகர வுருவந் திரிபில தெளிவாம்** (பா அ௰உ)

உரை

நீட்டும் நாவினையும், கூடான உடல் வாகுமாகி நகரத்தின் வடிவமைதி கொண்ட பிராணியை நந்து என, பெயர் செப்பும் காரணத்தினால் நகாரவுருவம் திரிபடையவில்லையென்பது தெளிவாம்.

**நெடிதாய்க் குறுக்கில் நிமிர்ந்த இரண்டு**
**தலைப்புக் கொண்டுள தான வடிவப்**
**பொருளைப் பாவெனப் புகலப் பெறலால்**
**பகர வுருவந் திரிபில தெளிவாம்.** (பா அ௰ங)

உரை

நீண்டு செல்லும் நிலையில் குறுக்காக நிமிர்ந்து இரண்டு தலைப்புக் கொண்டுள்ள பொருளைப் பா என்று சொல்லுதலால் பகரவுருவம் திரிபடையவில்லை என்பது தெளிவாகிறது.

நெசவுத் தொழில் செய்வோர் நூல்தொகுதியை விரித்துப் பாவோடும் நிலையில் பகரத்தின் உருவநிலையை உணரலாம்.

**குண்டை வடிவங் கொண்ட தலைப்பும்**
**சிறகின் சலனச் செயற்கையின் மறைந்து**
**முதுகின் கீழ்ப்புறமுற்ற பகுதித்**
**தோற்றமும் கொண்டு துலங்கும் மகர**
**வடிவ முடைய வண்டின மதனை**
**மாஎனச் சொல்லும் வழக்குள தாகையால்**
**மகர வடிவந்த திரிபில ெறள்வாம்** (பா அ௰௪)

**உரை**

குண்டை வடிவத்தினைக் கொண்ட தலைப்பகுதியையும் சிறகினுடைய சலனத்தினுல் மறைந்த முதுகின் கீழ்ப்பகுதியில் உள்ள அமைப்பையும் கொணடு விளங்குகின்ற மகர வடிவங் கொண்ட வண்டினை 'மா' எனச் சொல்லுதலால் மகர எழுத்தின் வடிவமும் திரிபடையவில்லை என்பது தெளிவாகிறது.

வண்டினைப் பார்த்து மகரவுருவத்தினைத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

**இரண்டு தலைப்பொத் தியையு நடுநிலை**
**யொன்று கொண்டவுருவப் பொருளையும்**
**மந்திரம் என்ன வரையுங் கோணத்**
**தகத்தின் எழுத்தை யமைக்குஞ் சக்கரத்**
**தலைப்பிற் சூலந் தாங்கு முருவையும்**
**யகரத் திரங்கொள் யந்திரம் என்னலால்**
**சூல வடிவந்துலங்கு யகரமே**
**உண்மையில் யகர வுருவென ெறள்வாம்** (பா அ௰௫)

**உரை**

இரண்டு தலைப்புகளும் ஒத்து நடுநிலைக் கோடு சற்று நீண்டு இருக்கும் உருவப் பொருளையும் மந்திரங்களை வரையுங் கோணத்தின் அகத்தில் எழுத்தினை அமைக்குஞ் சக்கரத் தலைப்பில் சூலந் தாங்கும் உருவையும், யகரத்தின் வடிவினைக் கொண்ட யந்திரம் என்று சொல்லுதலால் சூலம் வடிவம் துலங்கும் வடிவமே உண்மையில் யகரம் என்று கொள்ளுதல் தெளிவுடையதாம்.

ய இது சூல வடிவம். இது யகரத்தினையுணர்த்தும்.





| | | | | |
|---|---|---|---|---|
| ந | ம | சி | வ | ய |
| ம | சி | வ | ய | ந |
| சி | வ | ய | ந | ம |
| வ | ய | ந | ம | சி |
| ய | ந | ம | சி | வ |

யகரந்திரன் திறம் பெற்றுள்ளதால் இது யந்திரம் ஆகிறது.

**வாசிக் காலின் வடிவத் தன்மையும்**
**உடைத்தாய் வலமிடம் ஒன்று புனைந்த**
**உருவமுங் கூடி யொன்று பட்டலில்**
**வலிமையுங் கொண்டு பொலியும் பிராணியை**
**இறாற்பொடி மீனஃ தென்றுங் குவிந்து**
**திரண்டதை இராலின் சீர் எனும்ராசி**
**என்றும் ரகரத்தியற்கை விளங்கச்**
**செப்பலால் ர்அ. வுருத் திரிபில ெறள்வாம்** (பா அ௰௬)

**உரை**

வாசியாகிய காலின் வடிவமும் அமைப்பும் உடையதாய் வலம் இடம் ஆகிய இரண்டும் ஒன்று சேர்ந்தவுருவமும் இயைந்து ஒன்றுபடுதலால் வலிமையுங் கொண்டு விளங்கும் பிராணியை இறாற்பொடி மீன் என்றும் அவை குவிந்து திரண்டதை இராலின்சீர் (ராசி) என்றும் ரகரத்தின் இயற்கை விளங்கும்படி கூறுதலால், ரகரத்தின் வடிவமும் என்றும் போல் உள்ளது என்பது விளங்கும்.

வாசிக்காலின் வடிவம் ா இஃதேயாகும்.

இரால்மீன்களின் கால்களின் தோற்றமும் இஃதேயாம்.

இதன் குவியலை இரால்சீர் (ராசி) என்று கூறுவர். இஃது மரூஉ மொழியாம்.

இதனல் ரகரக் காலின் இயக்கக் கூட்டே எல்லா எழுத்துக்களும் என்பது விளங்கும்.

இராலின் சீரே ராசி என்று கூறியுள்ளமை எண்ணி மகிழ்தற்குரியதாம்.

**இங்கிலாப் பேருரு வெய்தும் லகர**
**வடிவில கிடுமீன் மாற்றம் திமிங்கிலம்**
**என்றே வழங்கலால் இவ்வுருத் திரிபில** (/TT அ௭எ)

**உரை**

நிலவுலகில் காண இயலாத பெரிய உருவத்தினைப் பெறும் மீன் லகரத்தின் வடிவத்தினைப் பெறுதலோடு, திமிங்கிலம் என்றே வழங்கப்படுதலால் லகர எழுத்தின் வடிவமும் திரிபு அடையவில்லையென்பது பெறப்படும்.

இங்கு இலாப்பேருரு என்பதன் சுருக்கமே திமிங்கிலம் என்பதாகும்.

**நீர்ற் றிளைத்து நீந்தும் நிலையில்**
**வகர அத்தின் வடிவம் காட்டும்**
**ஈத்தையை வாத்தென் றியம்பப் பெறலால்**
**வகர எழுத்தின் வடிவம் திரிபில** (/TT அ௭அ)

**உரை**

நீரில் மகிழ்ச்சியால் திளைத்து நீந்தும் போது வகர எழுத்தின் வடிவ எல்லையைக் காட்டும் ஈத்தை என்னும் பிராணியை வாத்து என்று இயம்புதலால் வகர எழுத்தின் வடிவமும் திரிபு அடையவில்லை என்பது விளங்கும்.

**திறந்த வாயுள சிப்பியின் வடிவமும்**
**அதனிடை முத்தும் அமைந்து காணும்**
**எழுத்தை முற்றெழுத் தென்றும் மகாரம்**
**அகரந் தழுவ வமைந்து வழங்கலால்**
**சிறப்பு. ழ. உருத்திரிபில றெளிவாம்.** (/TT அ௭௯)

**உரை**

திறந்த வாயினைக் கொண்டுள்ள சிப்பியின் வடிவமும், அதனிடத்து முத்தும் அமைந்து இருப்பது போன்ற வடிவமும் உள்ள எழுத்தை முற்றெழுத்தென்றும், மகரத்தை அகரம் தழுவும் நிலையும் அமைதலால் சிறப்பு ழ என்று கூறப்படும் ழகர எழுத்தின் உருவமும் திரிபடையவில்லை என்பது தெளிவாகின்றது.

ப - இது சிப்பியின் திறந்த வாய். ம இது அதனிடை தோன்றும் முத்துடன் விளங்குதலின் முற்றெழுத்தென்று வழங்கப் படுகிறது.

இவற்றால் ழகரத்தின் உருவம் என்றும் உள்ளதாகவே விளங்குகின்றது.





**சுருண்ட பாம்பின் தோற்றமும் படத்தை**
**எடுத்த வுருவமும் ஏக பாதமும்**
**விளங்க ழகர வியலும் ளகர**
**உருவங் கொண்ட வரக மதனை**
**வியாளம் என்றே விளம்பப் பெறலால்**
**இவ்வுருத் திரிபில வென்பது தெளிவாம்** (/TT ௯0)

**உரை**

சுருண்டு கிடக்கும் பாம்பின் தோற்றமும், அது படத்தை எடுத்து மேனோக்கும் நிலையும், ஏக பாதமும் அதனிடத்து விளங்குதலால் ழகரத்தின் மேலும் மற்றும் ஓர் உருவங் கொண்ட பாம்பு வியாளம் என்றே பலராலும் பேசப்படுதலால் ளகரத்தின் உருவமும் திரிபடையவில்லை என்பது தெளிவாகின்றது.

ஞ - இது சுருண்ட பாம்பின் தோற்றம்.

ஒ - இது மேற்கூறிய தோற்றம் சற்று நிமிர்ந்து பாம்பு படம் எடுத்து நிற்கும் நிலை.

/ - இது ஏகபாதம். இவையெல்லாம் ஒன்று கூடிய 'ள' என்னும் வடிவமே ழகரத்தின் வியனுக விளங்கும் ளகாரம் ஆகும்.

**இரண்டு ரகரம் இணைந்தோ ருருவாம்**
**வல்லின றகர வடிவம் பொருந்தும்**
**உயிரின மதனை ஊரல் என்றும்**
**உரைத்தலால் றகர வுருவந் திரிபில** (/TT ௯0௧)

**உரை**

இரண்டு ரகமானது இணைந்து ஓர் உருவமாய் பொருந்துவது வல்லினறகரம் ஆகும். அந்த வல்லின வடிவம் பொருந்தும் கிளிஞ்சலை ஊரல் என்றும் சொல்லுதலால் றகரத்தின் உருவம் திரிபடையவில்லையென்பது தெளிவாகிறது.

ஒட்டி இருக்கும் கிளிஞ்சலைப் பிரித்தால் அது வல்லினறகரத்தைக் காட்டும்.

ஊரல் என்னும் சொல் ரகரம் உ என்னும் இரண்டாக அமைந்தது என்பதனைக் காட்டும். இரண்டு ரகரம் ஒன்றுக இணைந்து றகரமாக ஆகியுள்ளது.

**அருவம் உருவம் அணுத்திரள் அசனி**
**எடுத்துக்காட்டும் இயல்நிலைக் கீற்றும்**
**உடைய னகாரம் ஒத்துள பொருளாம்**

**எழிலியைக் கனம் என்றியம்பப் பெறலால்**
**நகர வடிவந் திரிபில தெளிவாம்** (பா கூ௰உ)

**உரை**

அருவம், உருவம், நீர்த்துளிச் செறிவு, வெடிபடும் இடியோசை, எடுத்துக்காட்டாக அமையும் நீர்மை ஆகிய தன்மைகள் அனைத்தும் அமைந்த, நகாரத்தினை ஒத்த பொருளாகிய மேகத்தினைக் கனம் என்று சொல்லுதலால் நகர வடிவம் திரிபடையவில்லை என்பது தெளிவாகும்.

நகரத்தின் ஓசை ஏனைய எழுத்துக்களின் ஓசையில் விரவிக் கலந்து உருவம் வெளிப்படாது நிற்றலின் அருவம் என்று சொல்லப்படுகிறது.

"னஃகான் ஒற்றே ஆடூஉ வறிசொல்" என்று கூறும் நிலையில் உருவந் தோன்றுதலின் உருவம் உடையதாகிறது.

○○ ஆகிய இரண்டு புள்ளிகள் நீர்த்துளிச் செறிவைக் காட்டும்.

டனு, டாவன்னு, டினு, என்னும் போது இடியொலி அமைதலின் அசனி என்று கூறப் பெறுகிறது.

நகாரம் எல்லாவற்றிலும் விரவியும் எல்லாம் விரவி நிற்றற்கு இடமாகவும் நிற்றலின் னகாரம் எடுத்துக்காட்டாக அமையும் நீர்மையுடையதாகிறது.

இத்தகைய சிறப்புக்கள் அமைந்த மேகம் கனம் என்று சொல்லப் பெறுதலால் னகரத்தின் உருவம் திரிபடையவில்லை என்பது விளங்கும்.

**திரிபறு சிறப்பியல் சேருங் ககரமும்**
**அம்எனும் விகுதியும் அமைந்த னகாரமே**
**கனம்எனும் சொல்லிற் காட்டப் பெறுவது** (பா கூ௰௩)

**உரை**

திரிபற்ற சிறப்புத் தன்மை பொருந்திய ககர முதலும், அழகினை, நீரினை உணர்த்தும் அம்மெனும் விகுதியும் கொண்ட னகாரமே கனம் எனும் சொல்லிற் காட்டப் பெறுவதாகும்.

**எழுத்தின துருவ வியலோர்ந் தனபோல்**
**அவ்வொலி மெய்ப் பொருளாவதுங் காண்போம்** (பா கூ௰௪)





**உரை**

எழுத்தின் உருவத் தன்மையைத் தெரிந்து கொண்டது போல அவ்வொலியை யெழுப்பும் பிராணியையும் காண்போம்.

## பெயரெழுத்தியற்படலம்

**க்அ. என இரைந்து கரையும் புட்பெயர்**
**காகம் என்றே கழறல் தெளிவாம்** (பா கூ௰ரு)

**உரை**

கா என்று இரைந்து கரையும் பறவையின் பெயரினை காகம்என்றே மக்கள் கூறுவது தெளிவாகும்.

**மீறிய ஙகர மெய்யுடன் நாத**
**எழுத்துங் கூடுங்மிறு ஞிமிறென**
**மருவு மொழியது வண்டைக் குறித்தலால்**
**ஙகர வொலியின் நாதந் திரிபில** (பா கூ௰௬)

**உரை**

ககரத்திற்கு மிகுதியான ஓசையைத் தரும் ஙகர மெய்யுடன் நாத எழுத்தாகிய இகரமும் கூடுதலால் ஙிமிறு, ஞிமிறு என வரும் மருவு மொழியானது வண்டைக் குறித்தலால் ஙகர ஒலியின் நாதம் திரிடையவில்லை என்பது தெளிவாகிறது.

**உருப்பங் கொள்ளும் ஒலியிற் சகார**
**ஓசைத் தோற்றம் உடையது சருப்பம்** (பா கூ௰எ)

**உரை**

ச என்னும் ஒலிமிகும் வண்ணம் மூச்சை நீள இழுத்து உள்வாங்கினல் யாக்கை உப்பும் நிலையைப் பெறும். அந்தச் சகார ஒலியை இயல்பாக உணர்த்தும் பிராணி பாம்பாகிய சருப்பம்.

சருப்பம் - ச என்னும் ஒலியால் உடல் உப்பும் தன்மையைக் காட்டும் பிராணி.

**மெய்மை விளங்கும் வேதைப் பாட்டில்**
**ஞகரவொலி தரும் ஞமலி ஞாளி** (பா கூ௰அ)

**உரை**

ஒருவனின் உண்மைத் தன்மை விளங்கும் வேதைப்பாடு உறக்கமாகும். அந்நிலையில் ஞகர ஒலியை ஓசையால் வெளிப்படுத்திக்காட்டுவது ஞமலி என்னும் ஞாளியாகும்.

ஞமலி ஞ என்னும் ஓசை மலிந்தது என்னும் பொருள் தருவதாகும்.

ஞாளி ஞகர ஒலியை ஆளும் பிராணி.

ஞமலி - நாய்.

**சீற்றங் காட்டுஞ் செயற்பாட்டியலில்**
**இட்ஆ ஒலியை எழுப்பு மிடபம்** (௱௯௯)

**உரை**

சினத்தைக் காட்டும் செயலில் ட் அ ஒலியை அதாவது டகர ஒலியை எழுப்புவது இடபம் என்னும் காளையாகும்.

**நுண்மை ணகாரம் நுவல்வ நுணலெ** (௨௱)

**உரை**

நுண்மையான ணகார ஒலியினை ஒலிப்பது நுணலெ என்னுந் தவளையாகும்.

நொண நொண என்று பேசாதே, உலக வழக்குத் தொடர்.

**தத்த காரச் சந்தம் அனைத்தாம்**
**ஒலியையும் அகப்படுத் தோதும் அச்செயல்**
**ஒன்றிய நடைமுறை யுடையது தித்திரி** (௨௱௧)

**உரை**

தத்த காரச் சந்தம் அனைத்து வகையான ஒலியையும் தம் அகப்படுத்தி ஓதும் செயலை நடைமுறையில் இயல்பாகவே கொண்டது தித்திரி என்னும் பறவையாகும்.

**சுவைக்க வாயிற் சுகுவா யாகவும்**
**உணவுப் பொருளை யறிஞ்ச வுதவும்**
**தாரை யாகவும் தள்ளி யுள்ளிட்**
**டடைக்குந் தாலு வாகவும் நிற்கும்**
**சுவைவிழை பொறியின் நவையறு சிறப்பாய்**





**வசனித் தொலித்திரள் வழங்கு முறுப்பை**
**ந்அ என மொழிதலும் நாவுடையோரை**
**நரர்எனக் கூறலும் நகாரச் சிறப்பியல்** (௨௱௨)

**உரை**

சுவைக்க வாயினில் அமுத இடமாகவும், உணவுப் பொருளை உறிஞ்சுதற்கு உதவும் தாரையாகவும், உணவுப் பொருளை உள்ளே தள்ளி அடைக்கும் தாழ்ப்பாளாகவும், சுவையினை விரும்பும் பொறியின் (நாவின்) குற்றமில்லாது, சிறப்பாக இனிதே ஒலித்திரளை வழங்கும் உறுப்பை ந்அ எனச் சொல்லுதலும், நாவுடையோரை நரர் எனக் கூறுதலும் நகாரத்தின் சிறப்பாகும்.

ந்கர நெடிலே நா ஆதலால் நகாரமே நா எனக் கொள்ளப்படுகிறது

**பகர வொலிதரு பாலிகை வலிமை**
**யுடைய தாகி யுறிஞ்சுவ பல்லம்** (௨௱௩)

**உரை**

பகர ஒலியைத் தரும் உறுப்பு உதடு ஆகும். அது பாலிகை என்ற பெயர் பெறும். அந்தப் பாலிகை யென்னும் உதட்டில் வலிமையுடையதாகி, பிற உயிரினங்களின் இரத்தத்தை உறிஞ்சுவது கரடியாகும். அது பல்லம் என்னும் பெயரினையும் பெறும்.

பல் ஒன்றுமில்லாத பிராணிக்குப் பல்லம் என்னும் பெயர் பொருந்துமோ ? என்னின் பொருந்தும். பல் + அ அம் என்பதில் அகரம் எதிர்மறை இடைநிலையாகும். இது புணர்ந்து கெட்டு பல்லம் என்று ஆகிறது. இது பல் இல்லாப் பிராணியே கரடி என்பதனை உணர்த்துதலின் பல்லம் என்பது கரடிக்குப் பொருந்தும் என்க.

**வாய்திறந் தொலிக்க வாரா மகார**
**வொலிதன தாய்ப்பெற வுற்றது பெற்றம்** (௨௱௪)

**உரை**

வாய் திறந்து ஒலிக்க வாராதமகார ஒலியைத் தனக்கு உரிய ஒலியாகப் பெற்றது பசுவாகும்.

பெற்றம் - மகார ஒலியைத் தனக்கு உரியதாகப் பெறவுற்றது என்னும் பொருள் தருவதாகும்.

பசு மா எனும் ஒலியைச் சிறப்பாக ஒலிக்கும்.

ய்அ. எனும் ஓசை இனிதாய்க் கொள்ளும்
இயல்புடை யுயிரினப் பெயரே ஈயியல் (௨௱௫)

உரை

யகர ஓசையினை இனியதாகக் கொள்ளும் இயல்பினையுடைய உயிரினப் பொருள் ஈயாகும்.

இ ஈ யகர ஒலியினின்றும் பிறந்தவை என்பதனை முன்னமே விளக்கியிருக்கின்றார்கள்.

ஈ என்னும் பிராணியை ஈயியல் என்றார் இகரம் யகரத்தின் தோன்றுதலின்.

கோடம் ரகரமாய்க் கொள்வ கோடரம் (௨௱௬)

உரை

ரகர ஒலியைத் தனக்குரியதாகக் கொள்ளும் பிராணி. கோடரம் என்னும் குரங்காகும்.

அணியாய் லகார அடுக்கொலி தரும் அணில் (௨௱௭)

உரை

லகர ஒலியினை அடுக்காக அழகுடன் தருவது அணில் ஆகும். லகரத்தை அடுக்கி அழகாகத்தருதலின் அணில் என்னும் பெயர் பெற்றது.

வௌவ அல்லில் வழிச்செல் இயலினும்
செயலினும் வவ்வொலி செய்வது வௌவால் (௨௱௮)

உரை

கனிகளை வௌவுதற்கு இரவில் செல்லும் இயல்பினும், ஒன்றையுண்ணும் செயலினும் வகர ஒலியினைத் தருவது வௌவாலாகும்.

இயம் ஆழ் ஒலியை இசைக்குங் குயிலுதல்
உடைய ழகாரம் ஒலிக்கும் புள்குயில் (௨௱௯)

உரை

இயம் ஆழ்ந்து ஒலி செய்யும் இசையை யாழினிடத்து அழுத்தி எழுப்பும் போது உண்டாகும் இனிய ஓசையாகிய ழகாரத்தை ஒலிக்கும் பறவை குயிலாகும்.





உள்ளம் ஒலிக்கும் ஒலியாம் எப்பப்
என்னும் ஒலியை இயலினும் செயலினும்
உளதாய்க் காட்டும் வுயிரினும் உள்ளல் (௨௱௰)

உரை

இதயம் ஒலிக்கும் ஒலியாகிய எப்பப் என்பவற்றை தன்னியல்பினுலும் செயலினுலும் ஒலித்துக் காட்டும் உயிரினம் உள்ளான்பட்சியாகும்.

வல்லின எழுத்தின் வரிசையின் முற்பட்
டிலங்கும் றகார எழுத்தொலி தோன்றச்
சீற லுடைத்தாய்த் திகழ்வ வல்லியம் (௨௱௰௧)

உரை

வல்லின எழுத்தின் வரிசையின் முற்பட்டுத் தோன்றும் றகரத்தின் ஒலியினைத் தன் சீறல் ஒலியினுல் புலப்படுத்துவது வல்லியம் என்னும் புலியாகும்.

வல்லின றகரத்தினைப் புலப்படுத்துவதாலேயே புலிக்கு வல்லியம் என்ற பெயர் வழங்கி வருகின்றது.

அனைத்தொலி களையும்அகத்திய மாய்க்கொள்
நரன்போல் அனைத்தையும் நாரம் நரம்பு
புக்கொலி இயலிற் புகல்வ கின்னரம் (௨௱௰௨)

உரை

அனைத்து ஒலிகளையும் தன்னகத்தே கொள்ளும் மனிதன் போல எல்லா ஒலிகளையும் தன் நரம்பில் புகுந்து ஒலிக்கும் இயல்பியல் புகல்வது கின்னரம் என்னும் வாத்திய கருவி.

னகர ஓசையினை ஒலிக்கும் இயல்பு பற்றி அதற்குக் கின்னரம் என்னும் பெயர் அமைத்தனர் போலும்.

தென்றிசைப் போக்கின் வடதிசை நோக்கிச் சிவமணங்கண்
டென்றும் உலரா வருமலர் விள்ளும்பே ரேற்குமுகை
நின்றரும்புந்தன்மைத் தெய்வ மலர்நான்கிவைக ளென்று
மென்று முளதென் றறிஞர்க் ககத்ய மிசைத்திடுமே (௨௱௰௩)

**உரை**

தென்றிசை மொழியின் (தமிழின்) இயல்பியல் வடக்குத் திசைநோக்கி சிவமணத்தினைக் கண்டு என்றும் வாடாமலராய் அழகுடன் விள்ளும் பேரினை ஏற்கும் முகையான தின்று அரும்பி மலரும் தெய்வமலர் நான்கு என்றும் உளதென்று அறிஞர்களுக்கு அகத்தியம் ஆனது இசைத்து நிற்கும்.

நான்கு மலர் - குறிஞ்சி, முல்லை, மருதும், நெய்தல்

# உத்தர காண்டம்

## தமிழ் நெடுங்கணக்கு - (சித்தாந்தம்)

**நானிலம் கடந்த ஆனிலை திருந்தி**
**அகத்தமை வுற்ற அந்நிலை யாக**
**ஆதார பூத அடுக்கில் ஏற்றி**
**நிரல் நிறையாக நிறைய நடத்தி**
**மலையின் ஏற்றும் மறைநெறி முறையின்**
**ஐந்தில் ஆறிரண்டான வாறு**
**தமிழ்செம் மையதாம் தன்மை காட்டுதும்** (௨௱௪)

**உரை**

அகம், அகப்புறம், புறம், புறப்புறம் ஆகிய நான்கு நிலங்களையும் கடந்து நின்ற உயிரின் நிலையானது திருந்தி அகம் என்னும் மூலத்தில் அமைந்த அம்முறைப்படியே, பூதங்களின் தன்மையை விளக்கும் ஆதார அடுக்கில் ஏற்றி, வரிசை ஒழுங்கின் வண்ணம் நிறையும்படி இயக்கி, மலையின் ஏற்றும் மறைநெறி நியதியின் (வேதமுறைப்படி) தோன்றுவது திருவைந்தெழுத்தாகும். அந்த ஐந்தெழுத்தில் ஆறிரண்டு பன்னிரண்டு எழுத்துக்கள் ஆகிய தமிழ்மொழி செந்நெறியாம் தன்மையுடையதனைக் காட்டுவோம்.

முன்பே திருவைந்தெழுத்தாம் நமசிவய என்பவற்றில் பன்னிரண்டு உயிர்க்கலை எழுத்துக்கள் தோன்றிய தன்மையினைக் கூறியிருக்கின்றார்கள். ஈண்டும் ஐந்தில் ஆறிரண்டானவாறு தமிழ் செம்மையதாம் தன்மை காட்டுதும் என்றது ஆண்டு ஐந்தில் ஆறிரண்டு எழுத்துக்கள் ஆயின முறையினைக் கூறி ஈண்டு அவை சிவமாம் செம்மைநிலையை அடையும் பெற்றியினைக் கூறுகின்றார்கள்.





இந்நிலை, முன்பே ஒன்றை விளக்கி மேலும் விளக்கம் தந்து உரைக்கும் தந்திரவுத்தியாகும்.

**நானிலம் கடந்த ஆனிலை திருந்தல்**
**விசுத்தி யின்று விரியக ராதிய**
**புறம் அக மாகப் பொருந்தி யமைதல்** (௨௱௫)

**உரை**

நானிலம் கடந்த ஆனிலை திருந்தலாவது ஐந்தாவது ஆதாரமாகிய விசுத்தியினின்று விரிவாகும் அகர முதலாகிய உயிர்க்கலை பன்னிரண்டின் ஈட்டம் புறமாய் நின்ற தன்மை நீங்கி அகமாகிய மூலத்தில் பொருந்தியமைதலாகும்.

**அகத்தமை வுற்ற அம்முறை யாக**
**ஆதார பூத அடுக்கில் ஏற்றல்** (௨௱௬)

**உரை**

அகமாகிய மூலத்தில், அகர முதலாகிய உயிர்க்கலை அமைவுற்ற அமமுறைப்படியே ஏனைய ஆதாரங்களிலும் (அநாகதம் வரையிலும்) ஏற்றி அமையும் படி செய்தலாம்.

**மூல முதலஃ தான எழுத்தாம்**
**க்அ.முத லாய்விரி காவிரி யாகக்**
**கசட தபனைக் காணும் ஐந்தில்**
**ஏற்ற மாக இயைவு காணல்** (௨௱௭)

**உரை**

மூல முதலான எழுத்தாம் 'க' என்னும் எழுத்து முதலாக விரியும், காவிரியாக க ச ட த ப எனக் காணும் ஐந்தில், மூலமுதலாக, அநாகதம் வரையில் உள்ள நான்கு ஆதாரங்களில் ஒவ்வொன்றும் ஏற்றமாக அமைந்திருக்கும் இயல்பினைக் காணுதல் ஆம்.

**நிரல்நிரை யாக நிறைய நடத்தல்**
**உயிர்க்கலை வரிசையின் ஒன்ற நடத்துதல்** (௨௱௮)

**உரை**

க ச ட த ப என்பவற்றை நிரல்நிரையாக நடத்துதல் என்பது, உயிர்க்கலை வரிசையின் முறைப்படி நடத்துதல் ஆகும்.

(எ.கா.) க கா கி கீ என்ற முறையில் நடத்துதல் ஆகும்.

மஉலயி லேற்று மறைநெறி முறைமை
அடுக்கல் உச்சியின் அத்தாம் ஒகர
நிஉலவரை முன்முறை நெறியி னேக்குதல் (உ/ΠΤ௰௬)

உரை

மஉலயில் ஏற்றம் மறைநெறி முறைமையாவது ஆறு ஆதார அடுக்கலின் உச்சியின் அத்தாக அமைந்துள்ள அக்க இஉணய நிஉலயம் என்னும் ஆக்கையில் தோன்றும் ஒகரத்தை, முன்முறை நெறியென்றும் மூலம் முதலாகத் தோன்றும் 'க்' முதல் ஆக்கையில் (ஒ) நிறைவாகத் தோன்றும் முறைப்படி நோக்குதல் ஆகும்.

ஐந்தில் ஆறிரண் டான வாறு
தமிழ்செம் மையதாம் தன்மையை விளக்குவாம் (உ/ΠΤ௨௰)

உரை

ஐந்தில் பன்னிரண்டு எழுத்தாகிய தமிழ் மொழியின் செம்மையாம் தன்மையைக் காட்டுவோம்.

## சிவயசித்தாந்தப் பொதிகைப்படலம்

திருவைந் தெழுத்தாற் றிரிபற் றுயிர்க்கஉல
பன்னி ரண்டும் பதிந்து மூல
முதலாம் நாலில் முழுதுமாய் நின்ற
வளியும் வானும் மருவி யமையலால்
நாலு ஆறுகும் ஞாயமது போல்
ஆன அடுக்கில் அரிவரி வரியாய்
வரிசையாகி வரும் வரி நீளாது
அமைந்து சித்தாம் அரியாய் நிற்றலில்
நீளிய தமைந்து நெடுங்கணக் காகும் (உ/ΠΤ௨௰௧)

உரை

திருவைந்தெழுத்தால், திரியும் தன்மை நீங்கி உயிர்க்கஉல பன்னிரண்டும், மூலத்தில் பதிந்து விடுதலால் மூலமுதலாக அநாகதம் வரையிலுள்ள நான்கு ஆதாரங்களில் வளியும், வானும் கலந்து அமைதலால், நாலு ஆறு ஆகும் நியதியைப் போல, மூலம் முதல் அநாகதம் வரை நான்கான அடுக்கில், உயிரின் வரிசையானது





வரியாகி, அங்ஙனம் வரிசையாய் வரும் வரி நீளாது அமைந்து சித்தரியாக நிற்றலால், நீளச் செல்வது அவ்வழியே செல்லாமல் நெடுங்கணக்காக அமையும்.

திருவைந்தெழுத்தாகிய நமசிவய என்பவற்றுல் உயிர் மலமாசு நீங்கி உயர் ஞானத்தைப் பெறும் என்பது திருமுறைகளும், சித்தாந்தப் பெருநூல்களும் உரைக்கும் உண்மையாகும்.

உயிர் திரிபற்று நிஉல பெறுதல் போல, உயிர்க்கஉலயும் நீளாது நெடுங்கணக்காக அமைகிறது.

நெடியது கணக்காய் நிற்கும் இயலில்
அரிசித் தரியாய் ஐந்தில் இரண்டாம்
நமவீ ருக அமைமுந் நான்காய்
ஆன நமோத்து ஆக்ச் சிகாரத்து
அந்த மாக அமைந்து சிந்தம்ஆய்
அரிசித் தரிந மோத்து சிந்தம்
என்று அரிவரி எனும்நெடுங் கணக்கிற்கு
இலக்கண வரம்பை இயம்பி நின்றது (உ/ΠΤ௨௰௨)

உரை

அரிநமோத்து சிந்தம் என்பது தமிழ் நெடுங்கணக்கின் வரையறையிஉன உணர்த்தும் நூற்பா ஆகும்.

நீண்டு செல்லும் எழுத்துக்களின் தன்மை அளவுபட்டுக் கணக்காய் அமையும் போது திருவைந்தெழுத்தில் நமஈருக அமை முந்நான்காக ஆன நமோத்து ஆகி சிகாரத்தில் அந்தமாக அமைந்து சிகரத்தின். அரிநமோத்துசிந்தம் என்று, அரிவரியாகிய நெடுங்கணக்கிற்கு இலக்கண வரம்பைக் கூறி நிஉல பெற்றது.

அதுவே.

அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ ஃ

க கா கி கீ கு கூ கெ கே கை கொ கோ கௌ க்

---

---

---

இதுமேன் முகமா ஏறுங் காஉல

ஆதார பூத அடுக்கின் வடிவாய்
கசட தபனற் கதிரோன் நிற்கத்
தூலம் அதனிற் சூக்கம் அடங்கல்போல்
ஆக்கை ஆக்கை. ஆக்ஞை ஙஞமதி
மெல்லின மாய்அதில் ஒல்கி நிற்க
கதிர்மதி யுரிமை கண்டவீ ராரும்
வல்லின மெல்லின மாமித னிடையில்
வாசி சிவய மாய்வய முற்ற
யரல வழள ஆய ரலழள
அமித மாக அமைந்து நிற்கும். (உ/ா உ௰௲)

உரை

மேற்கூறியவற்றின் இலக்கண வரம்பினை நுட்பமாக இயம்பிய அரிநமோத்து சிந்தமானது அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ ஃ - க கா கி கீ கு கூ கெ கே கை கொ கோ கௌ க் என நிரல்நிரை வரிசையுற்று முறையாக வரும்.

இங்ஙனம் வரும் வரிசை மூலாதாரம், சுகவதிட்டானம் மணிபூரகம், அநாகதம் ஆகிய ஆதாரங்களில் ஏறி அமைந்து செல்லும் போது க ச ட த ப என சூரிய கலையை உணர்த்தும் எழுத்துக்கள் மேன்முகமாக நிலைபெற்று நிற்க, தூலத்தில் சூக்குமம் அடங்குதல் போல ங ஞ ண ந ம என்னும் மெல்லினம், இனவல்லினத்தோடு ஒடுங்கி நிற்க, சூரியனின் தன்மைபெற்ற வல்லினமும், சந்திரனின் தன்மைபெற்ற மெல்லினமும் ஆகிய இவற்றின் இடையில் வாசியானது சிவயமாகி நிற்பதால் அதன்வயமுற்ற ய ர ல வ ழ ள என்னும் இடையின எழுத்துக்களில் ர ல ழ ள என்னும் நான்கும் அமுதமாக நிற்கும்.

சூரிய கலையும் சந்திரகலையும் இணைந்து சுழிமுனையாகும் போது வாசி நான்கு அங்குல நிலையில் மிதந்து நிற்கும். இதனை அமிதம் என்று கூறுவர் யோக நெறிவல்லார். இந்த அமித நிலையினை ர, ல, ழ, ள என்னும் நான்கு எழுத்துக்களும் உணர்த்துகின்றன.

அமித மாக வமையும் நலத்தால்
தீயின் விச்சாய்த் திகழும் விசுத்தியில்
எண்ணிரண் டு ஏ.ஓ. என்ன வடங்க
வேதை மிகவாய் விளைந்து வல்லியம்





கைவல் லியமாய்க் காண ஆன்மா
தத்துவம் பெற்றுச் சகலமாய் நின்ற
தமையத் தீவிச் சனற்கத வேதை
யந்தமாய் நகாரம் அண்டும் நிலைக்கீழ்
ஆக்ஞை மேற்கொண் டடங்க வல்லியம்
சீற லாலயம் திகழ முறையே
ழறஃண ஏஒ என்ற ஆறும்
ஐந்தில் அடங்கும் அரிவரி எழுத்தஃ
தனைத்தையும் அடக்கும் அடங்க லான
சித்தின் அந்தம் திகழ விளங்கும்
அருந்தமி ழாக அகத்தியம் தோன்றும் (உ/ா உ௰௩)

உரை

இடையின எழுத்துக்களில் ர ல ழ ள ஆகிய நான்கும் அமிதமாக அமைகின்ற நன்மையால், தீயின் வித்தாகத் தோன்றும் விசுத்தித் தானத்தில் (ஆதாரத்தில்) தோன்றும் பதினாறு எழுத்துக்களும், ஏ ஓ என்னும் இரண்டு எழுத்துக்களில் அடங்க, அதனால் வேறுபாடுகள் மிகவும் ஏற்பட்டு வன்மையான அரிய நிலை, கைக்கு எட்டும்படியான கைவல்லினமாகக் காணக் கிடைத்தலால், ஆன்மாவானது தத்துவம் பெற்று (ஆற்றலடைந்து) பல்வகை எழுத்துக்களால் விளங்கியது அமையும் வண்ணம் ஆக்ஞை என்னும் ஆதாரத்தை அடைந்து அடங்க வல்லியமாகிய வாசியானது சீறுதலால், ஆன்மா லயம் பெற்றுத் திகழ, முறையே ழ ற ஃ ண ஏ ஓ என்ற ஆறு எழுத்துக்களும், திருவைந்தெழுத்தில் அடங்கும் அரிவரியெழுத்தாகிய அனைத்தையும் அடக்கும் அடங்கலான சித்துப்பொருளின் அந்தமாகத் திகழ விளங்கும் அருமைத்தமிழாக அகத்தியம் விளங்கும்.

ஈண்டு கூறிய எழுத்தாம் அரிவரி.

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ, ஃ
க், ங், ச், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்
க, ங, ச, ஞ, ட, ண, த, ந, ப, ம, ய, ர, ல, வ, ழ, ள, ற, ன
இதில்.

அம்முதற் பன்னிரண் டாய துயிர்க்கணம்
விந்து தலைக்கொள விளங்குவ மெய்க்கணம்
இவற்றி லமைபதி னெட்டுயிர் மெய்க்கணம்

ஆய பெருக்கம் ஆறுமுப் பத்தாறு
இவையெலாம் ச்இன இசைகொண் டெழும்வளி
அந்த மாக அமையும் சிந்தத்
திலய மாகும் இலயமாம் வரியில்
வருபனி ரெண்டை வரிசைப் படுத்தி
அ.று.ஆவன்று.இறு.ஈயன்று.உ.று.
ஊவன்று.எ.று.ஏ.யன்று.ஐ.யன்று.ஒ.று.ஓவன்று.ஔ.வன்று.ஃகன்று
என்று. ஒல்க வித்செய் துள்ளுற நிற்கும் !
சிவய நமஎனச் செப்பும் ஐந்து. (உ/TT உ௰௫)

உரை

இவ்விடத்தில் கூறிய எழுத்தாம் உயிரின் சுவடாகிய வரியில், அ முதல் பன்னிரண்டாகியது உயிர்க் கணம். புள்ளியைத் தலையில் கொண்டு விளங்குவது மெய்க்கணமாகும். இவ்விரண்டினாலும் அமையும் பதினெட்டு உயிர்மெய்க் கணமாகும். இவற்றால் ஆகிய பெருக்கம் ஆறுமுப் பத்தாறு இருநூற்றுப் பதினாறும். இவையனைத்தும் ச்இ 'சி' யென ஒலிக்கும் இசை கொண்டு எழும் ஆவளியின் அந்தமாக (உருவமாக) அமைகின்ற சி என்னும் அமையும் அந்தத்தில் ஒன்றும் ஒன்றிப் பின்வரும் வரியில் உயிர்வருக்கம் பன்னிரண்டையும் வரிசையாக முறைப்படுத்தி அறு, ஆவன்று, இறு, ஈயன்று, உறு, ஊவன்று, எறு, ஏயன்று, ஐயன்று, ஒறு, ஓவன்று, ஔன்று, ஃன்று என இயங்குமாறு விதி செய்து இவற்றின் உள்ளே அமைந்து நிற்கும் சிவயநம என்னும் ஐந்தும் ஆகும்.

இதுவே.

வரிசையின் நோக்க வயனமாய்க் காணும்
வயனமுட் கண்ட வாறது போல
வான்கால் சலன வளிதரும் நாதம்
தோன்ற விரிந்து சுருங்கக் குவிந்து
அடங்க வமைந்து அனைத்தினும் ஒட்டி
முரிந்தெடுத் தெழுத்தென மூன்றும். இ.அ.உ
இயாவும் அசபையுள் எய்த நிற்கும். (உ/TT உ௰௬)

உரை

இதனை வரிசையாக நோக்கிப் பார்க்கும் போது வயனமாகக் காணும் நுட்பத்தை உள்ளே கண்டது போல, ஆகாயம், காற்று இவற்றின் சலனத்தால் உண்டாகிய வளியின் நாதம், தோன்றுதற்கு விரிந்து, சுருங்குதற்குக் குவிந்து அடங்க அமைந்துள்ள





எல்லா எழுத்தினும் ஒன்றியிருக்கும்படியான எழுத்துக்கள் இ, அ, உ என்னும் மூன்று எழுத்துக்களாகும். இவை, வரி முரியும் வண்ணம் தனியே எடுத்த எழுத்துக்களாம். ஆகவே முரிந்தெடுத்த எழுத்தெனப் பெயர் பெறும். இம்மூன்றும் அசபை என்னும் எழுதாக் கிளவியில் பொருந்தி நிற்கும்.

வகரம், விந்தெழுத்தாம் உகரம் தோன்ற நிலைக்களனாக நின்ற எழுத்தாகும். உகரம் அகரத்தோடு பொருந்த உண்டாகிய உயிர் வருக்கம் உ ஊ ஒ ஓ ஔ என்பனவாம்.

யகரம் நாதமாம் இகரம் தோன்றுதற்கு நிலைக்களனாக உள்ள எழுத்தாம். இதன் வருக்கம் இ ஈ எ ஏ ஐ என்பனவாம். னகரம் எல்லா எழுத்தினும் விரவி நின்று ஒலி வரையறை செய்யும் எழுத்தாம். இவை மெய்யுடன் ஒன்ற உயிர்மெய்யெழுத்து ஈட்டம் பெருகியதாம். இங்ஙனம் விரிந்த எழுத்துக்களினின்று, காரணமாய் உள்ள இ அ உ என்னும் மூன்றையும் வரிசை முரியும்படி எடுத்து உணர்த்தலின் முரிந்தெடுத் தெழுத்தன மூன்றையும் குறிப்பிடுகின்றனர்கள். இம்மூன்றும் அசபை என்னும் எழுதாக்கிளவியில் அடங்கும்.

அ இ உ ஆகிய உயிர்நாத விந்து எழுத்துக்களே எல்லா எழுத்துக்களுமே தோன்றக் காரணமாக இருத்தலின், "அ, இ, உ அம்மூன்றும் சுட்டே" என இலக்கண ஆசிரியரும், "உயிர்நாத விந்தாம் ஒருதொடர்ச் சுட்டு அ இ உ முதலெழுத் தாய மூன்றும்" என அகத்தியம் செய்த இந்நூல் ஆசிரியரும் கூறிப் போந்தனர்.

வயணம் என்பதன் விரியே எல்லா மொழியின் எழுத்துக்களும் ஆம். ஆகையினால் வயணமாய்ப் பேசுகின்றான் என்ற சொல் வழக்கும் நிலவுகிறது. உள் வயணம் என்ற தொடர் மிகுந்த பொருள் விளக்கம் உடையதாகும்.

எய்த நிற்கும் எழுத்தாம் அவையோ
உயிர்க்கணம் பன்னிரண் டோரு வகையாய்
அ உ ஊ சடு, எ. ஓ. ஔ சடு வமைய நிற்க
பவ்வுடன் றகரம் படநின் முறுய்
அத்திறம் படநின் றமைவ தாறுய்
அஃதிற் சுவஆ குவாய்அமை வதாறுய்
ஆம்பதி னெட்டி ரண்டாரே டுறழ்தர
இரண்டு நூற்றெட் டெழுத்தாய் விரிந்து
செவ்வைய தாய்இதைச் செப்பும் ஐந்தும்
ஓம்அகம் என்ன வுரைக்க நின்ற

அசபை யாய அடங்கல் மூன்றும்
எல்லாம் இருநூற் றிருபா னன்காம் (௨௱௨௰௭)

உரை

அசபையுள் பொருந்த நிற்கும் இ அ உ என்னும் மூன்றும் உயிர்க்கணம் பன்னிரண்டாக விளங்கும். அக்கணம் அ முதல் ஊ முடிய எழுத்துக்கள் ஊ ச டு என்றும் ஆருக அமையும். எ முதல் ஔ முடிய எழுத்துக்கள் ஔ ச டு என்னும் ஆருக அமையும். பகரத்துடன் றகரம் ஒன்றுபட நின்ற வல்லினம் ஆருகும். அந்த வல்லினத்துடன் ஒன்றுபடும் மெல்லினம் ஆருகும். இங்ஙனம் வரும் இரண்டு இனத்தின் இடையே வரும் சுவ ஆகுவாய் விளங்கும் இடையினம் ஆறும். இந்த மூவினத்தையும் (பதினெட்டையும்) பன்னிரண்டோடு உறழ இரண்டு நூற்றெட்டு (216) எழுத்தாய் விரியும். இவற்றைச் செப்பஞ் செய்யும் திருவைந்தெழுத்தும், (5) ஓம் அகம் என்னும் உரைக்க நிலைபெற்ற அசபை ஆகிய அடங்கலாம் மூன்றும் (3) எல்லாம் இருநூற்று இருபத்து நான்காம்.

ஆதியிற் கோபதி யாக நின்றது
கோ. ஆ. பசுவு. குடம்கா லேயம்
காலி நிரையெனக் காணும் ஏழாய்
இலிபி இலேகை இரேகை எழுத்து
கலைவரி யாம்பொறி கணக்கு ஆய
வடிவ வியற்கை நெடிதே யமைய
கொண்டு முதலுடன் அண்டிய மூலம்
அதனுக் கயலவ் வயற்கயல் சித்திரம்
கூர்த்த கணக்காம் ஏற்றம் உரைத்தாம்
அதுதத் துவம்பெறு மியல்புங் கூறுதும் (௨௱௨௰௮)

உரை

இதுவரை கூறியவற்றின் தொகுப்பினை இந்த நூற்பாவில் கூறுகின்ருர்கள். ஆதியாம் நிலையில் பதியாக பரத்தொடு ஒன்றி நின்ற கோவானது (உயிரானது) அந்நிலையினின்றும் நீங்கி, கோவாகவும், ஆ என்னும் படியும், பசு என்று பகரும் வண்ணமும், காலேயம் என்றும், காலியென்றும், நிரையென்று காணும் ஏழாகவும், இலிபி, இலேகை, இரேகை, எழுத்து, கலை, வரி, பொறி, கணக்கு ஆய வடிவத்தின் நிலைமை நீட்சி பெறுவதைக் கொண்டு, முதலுடன் அண்டிய மூலாதாரம், அதற்கு அடுத்த சுகவதிட்டானம், அதற்கு அடுத்த மணிபூரகம் ஆகிய அழகு பொருந்திய





கணக்கினைச் சொன்னேம். இனி உயிர் தத்துவம் பெறும் தன்மையினையும் கூறுவாம்.

இயல்பாய் ஏழின் இயைபு கொண்ட
ஆன்மா மோழை யாயது நீங்கி
உச்சியிற் கொம்பும் ஓடுகால் முன்னும்
உடம்பிற் றழுவி யொட்டுஞ் சுழியும்
தழுவித் தொடர்வ தான குண்டையும்
கூடித் தொடரும் கூட்டம் பின்னும்
முன்னும் பின்னும் மூட்டும் விச்சும்
ஒத்து நடைகொள் ஒற்றும் ஆகக்
கூடுங் கூட்டங் கொண்டு பரவித்
தத்துவ சதுரியத் தன்மை யுடைத்தாய்
பஞ்சா னனம்ஒன் றெஞ்சப் பம்முதல்
காணச் சாக்கிரம் கண்டு வுபதச
வுபயத் துயிர்தத் துவம்பெற் றோங்கும் (௨௱௨௰௯)

உரை

முன்னுள்ள நூற்பாவிற் கூறுப் பெற்ற எழின் தன்மையை இயல்பாகப் பெற்ற ஆன்மாவானது, மோழையான குறைபாடு நீங்கி உச்சியிற் கொம்பும் ஓடுதற்கு அமைந்த கால் முன்னும், உடம்பிற்றழுவி ஒட்டி நிற்கின்ற சுழியும், தழுவித் தொடர்வதான குண்டையும், கூடித் தொடர்கின்ற கூட்டம் பின்னும், முன்னும் பின்னும் மூட்டும், விச்சும் ஒத்து நடை கொள்ளும் ஒற்றும் ஆகக் கூடும் கூட்டம் நிறைந்து, தத்துவத்தின் சதுரப்பாடு உடையதால், பஞ்ச கவியம் ஒன்று நீங்கலாக பகர முதல் ஏனைய எழுத்துக்கள் காணும் சாக்கிரநிலையினைக் கண்டு உபதச மான உபாயத்தினல் உயிரானது தத்துவம் பெற்று ஓங்கி நிற்கும்.

பாசத்தியைந்து பதியைக் கடந்து பகைமிகுகான்
வாசத் திடைந்த பசுவல்லியமாய் மலையேறுப
தேசந் திருவைந் தெழுத்தா லளித்துச் சிவமயமாய்
ஆசற்ற வம்புலி யாக்கிய காட்டும் அகத்தியமே. (௨௱௩௰)

உரை

உயிரானது பாசத்துடன் பொருந்தியதால், முதற்பொருளின் தொடர்பினைவிட்டு பகைமிகுந்த காட்டின் கண் வாழும் வாழ்வினைப் பெற்றது. அந்நிலையைப் பெற்ற பசுவாக உயிர் புலியாகுமாறு மலையேறு உபதசத்தினை திருவைந்தெழுத்தால் அளித்து,

சிவமயமாய் குற்றமற்ற அம்புலி ஆக்கிய சற்குருவின் நிலையினை அகத்தியம் என்னும் இந்நூல் விளக்கிக் காட்டும்.

**உயிர்த் துவம்பெற் றோங்கும் மெய்யாம்**
**அகம்படி கொண்ட அவனி புவனம்**
**கடந்து பதம்பெறு காட்சி நிலையில்**
**முதல்இடை யீறுஎன மொழியும் மூன்று**
**காலம் அச்சரத்திற் காணக் காட்டலால்**
**கால தத்துவம் ஞாலத்து அமைவாம்** (உ௱௬௰க)

**உரை**

உயிரானது தத்துவம் கொண்டு ஓங்கும் மெய்யாம் உள்நோக்கங் கொண்ட நிலையில் அவனி, புவனம் ஆகிய நிலைகளையெல்லாம் கடந்து நிறைவுபெறும் காட்சி நிலையில், முதல், இடை, ஈறு எனச் சொல்லும் மூன்று காலங்களையும் அச்சரத்தில் காணும்படி காட்டலால் கால தத்துவமானது ஞாலத்தின் கண் அமைந்து தோன்றும்.

**ஞாலத் தமைந்து காலங் காட்டும்**
**அ ஆ ஆதி யத்தாம் எல்லை**
**பன்னி ரண்டும் முன்னியல் காலமாம்** (உ௱௬௰உ)

**உரை**

ஞாலத்தின் கண்ணே காலங்காட்டும் நிலையில், அ ஆ ஆதியனவற்றை முதலாகக் கொண்டு மிளிரும் பன்னிரண்டும் முன்னியல் நின்ற காலம் அதாவது இறந்த காலமாகும்.

**முன்னியல் காலந் தன்னில் உயிர்விந்**
**தொன்ற லுறப்பின் உருத்திரள் தோன்றலால்**
**ஔவொன் றொழிய வாய கரணம்**
**பதினொன் றுருத்திர பதத்தி னின்றன** (உ௱௬௰௩)

**உரை**

முன்னிய காலத்தில் (தொடக்கத்தில்) உயிரானது நாதத்தின் தொடர்பால் விந்தினைப் பொருந்த உருத்திரன் தோன்றும் முறையால் 'ஔ' என்னும் எழுத்து நீங்கலாகிய பதினோர் எழுத்தும் உருத்திரன் பதத்தில் நிலை பெற்றன.

உயிரணு நாதத்தோடு ஒன்றி விந்தொடு இயையுந் தன்மையால் உலகின் கண் உருவங்கள் பலவாய்த் தோன்றுதல் போல் அகர உயிர் இகர நாதத்தோடு ஒன்றி உகரமாம் விந்தில் பொருந்துதலால் 'அ' முதல் ஓ நிறைவாக, பதினொரு எழுத்துக்கள்





தோன்றலாயின. ஔ அனைத்துங் கொண்ட ஓர் உரு ஆதலின் ஓகாரத்தினை இறுதியாகக் கொண்ட பதினோர் எழுத்தே உருத்திரள் பதத்தில் நின்றன.

உருத்திரள் பதமே உருத்திரர் பதமாம்.

**நின்றசை யாத நிலையுரு வான**
**மூல கரணி முற்பட நாடி**
**அமரீ யதனுல் ஆக்கம் உடைத்தாய்க்**
**காஆய சித்தி கைவரப் பெற்று**
**அங்கிங் குங்கென வாய இலக்கின்**
**இனத்தாதி யந்தம் இரண்டாய் மருத்துவ**
**ரிருவர் பதமா யியையும் ஙகரம்.** (உ௱௬௰ச)

**உரை**

நின்றசையாத நிலைத்த உருவமான மூலகரணி என்னும் மூலாதாரம் மேன்முகமாகத் தோன்றும் வண்ணம், அமரி என்னும் சுழிமுனை நாடியானது அம்மூலாதாரத்தைப் பொருந்தி நின்றலால் அதன் மேல் உள்ள சுவாதிட்டானத்தில் தோன்றும் ஙகரமானது, அங்கு இங்கு உங்கு என்று எல்லை குறிப்பிடுவனவற்றுள் முதலும் நிறைவும் ஆகிய அங் உங் எனவரும் ஆதியும் அந்தமுமாக நிற்கும் ஙகரமே மருத்தவர் பதம் இரண்டாக அமைந்தது.

அமரீ என்னும் சுழிமுனை நாடி மூலத்தினைப் பொருந்தி நிற்றலால், மூலாதாரம் மலர்வுற்று ஆக்கைக்கு மிகுந்த ஆற்றலைத் தரும். அதனல் ஆக்கை காலவரம்பின்றி நிலைத்திருக்கும். அதுவே காயசித்தியாகும். அமரீ என்பது அமுதம் என்னும் சுழிமுனை நாடியாம்.

"ஈராறு கால்கொண் டெழுகின்ற புரவியைப்
பேராமல் கட்டிப் பெரிதுண்ண வல்லிரேல்
நீரா யிரமும் நிலமா யிரத்தாண்டும்
பேராது காயம் பிரானந்தி ஆணையே".

என்னும் திருமந்திரமும் நமக்குக் காயசித்தியின் பெருமையினை விளக்கிக் காட்டுகிறது.

இம் என்னும் நிலைபெருகிய இடத்தைப் பொருந்தச் செய்பவர் மருத்துவர்.

ஙகர மெய் ஆவளியை உந்திமேல் எழும்பும்படி செய்யும் ஆற்றலுடையது. அது அகர உகரத்தோடு பொருந்தி உச்சரிக்கப் படுமாயின் அதுவே மருத்துவத் தன்மையை எய்துவிக்கும் நிலையை எய்துதலின் ஙகரம் மருத்தவர் இருவர் பதமாய் நின்றது.

**இயையுயிர்த் தரவா யெய்தும் நிரலில்**
**வரவுவ் வளித்த வாய்மை தவிராது**
**உ ஊ ஒ ஓ ஓரினம் என்று**
**உயிர்களுலக் காக்கம் உதவிமுன் கூர்த்த**
**எண்வ சுபதம் எய்தி முதலாம்.** (உ_ΛΤΓ௩௰௫)

**உரை**

நாதத்தொடும், விந்தொடும் பொருந்தி நிற்கும் உயிர், நியதி ஒழுங்கின் வரிசையால் வரும் நிலையில் வகர மெய்யானது, உகர வரிசைக்கு அளித்துள்ள உறுதியினின்றும் நீங்காமல் ஏனைய எண்வகை உயிரினங்களில் சேர்ந்து எட்டுவகையான பதங்களை எய்தி சொற்களில் முதலாக வரும்.

உ, ஊ, ஒ, ஓ ஆகிய நான்கு உயிர் வருக்கத்தோடும் சேர்ந்து மொழிக்கு முதலில் வராது.

"உ ஊ ஒ ஓ என்னும் நான்குயிர்
வ என் எழுத்தொடு வருதல் இல்லை"

என்னும் தொல்காப்பிய நூற்பாவானும்

"உ ஊ ஒ ஓ வலவொடு வம்முதல்" என்னும் நன்னூல் நூற்பாவானும் வகரம் நான்கு உயிர் வருக்கத்தொடும் சேர்ந்து மொழிக்கு முதலில் வாராது என்பது பெறப்படும்.

வகரம் உ ஊ ஒ ஓ என்னும் நான்கு உயிர் வருக்கத்திற்கும் உரிமை அளித்த வாய்மை தவருமல் நின்றது என்று பெருந்தகையார் அளித்த விளக்கம் எண்ணி எண்ணி வியந்து இன்புறத் தக்கதாகும். இலக்கண நூல்களின் கூற்றுக்கு இது புது விளக்கமாம்.

**முதலாய் நின்ற முப்பத்து மூன்றிற்கு**
**எதிர்மறை யாமீ ருயிரட் டித்ததில்**
**அஃகேனம் புணர் ஆவினம் ஈராறும்**
**நீண்டு குறுகும் நேர்மாறுயிர்த் தொடர்**
**அளவிற் பூத்த அளபீ ராறும்**
**வருஅடல் விரும்பும் வாகு டையவராம்**
**அவுணர் பதமாய் அமைந்து நின்றன.** (உ_ΛΤΓ௩௰௬)





**உரை**

முதலாக நின்ற முப்பத்து மூன்ருகிய அதாவது க ச ட த ப ஆகியவை நான்கு நான்காக வருதலின் இருபதும் ஏனைய பதின்மூன்று மெய்யெழுத்து சேர்ந்த முப்பத்து மூன்று மெய்யெழுத்துக்களும், அவற்றின் கண்ணே உயிர் இயைய புள்ளியை விட்ட, உயிர்மெய்யெழுத்துக்கள் முப்பத்து மூன்றும், அஃகேனத்துடன் ஒன்றும் பன்னிரண்டு உயிர் வருக்கமும், நீண்டு குறுகும் மாறுபாடு கொண்ட உயிர்த்தொடர் அளவிற் பூத்த அளபு பன்னிரண்டும், என்றும் வரும் போரினையே விரும்பும் தன்மையுடையவராகிய அவுணர் பதத்தில் அமைந்து நின்றன.

அவுணர் - போரினையே விரும்பும் இயல்பினர்.

வரும் அடல் விரும்பும் வாகுடையவர் என்பனவற்றின் சுருக்கமே அவுணர் என்பதாம் மரூஉ மொழி.

மெய் 33, உயிர்மெய் 33, உயிர் வருக்கம் 12, ஆய்தம் (1) உயிர் அளவிற் பூத்த உயிர்மெய் 12 ஆகிய தொண்ணூற்ரேர் எழுத்துக்களும் அவுணர் அசுரரின் தன்மையில் நின்றனவாம். இவை அகமாய் நின்ற போது இருந்த இயல்பு தெய்வத்தன்மையதாம். புறப்புறமாய் வெளிவந்த போது அசுரத்தன்மையை அடைந்துவிட்டன.

**அமைந்து நிற்பன வாய புள்ளிகொள்**
**மெல்லினம் ஆறும் மிக்க வயந்தரு**
**மூர ஒழிந்த நான்கிடை யினமும்**
**தனிநிலை யொன்றுந் தானவமித்**
**தலையிழி பெய்த்தித் தாழ்ந்து குறுகலிற்**
**சமையொற் றளவும் கமையிலா மென்மை**
**ஐந்தும் இடைமை ஆறும் ஆக**
**இருபத் திரண்டும் இறுதி நிலையின்**
**தானவ பதமாய்ச்சமைந்து நின்றன** (உ_ΛΤΓ௩௰௭)

**உரை**

புள்ளி கொண்டு அமைந்து நிற்பனவற்றுள் மெல்லினம் ஆறும், மிகுந்த வலிமையைத் தரும் ர, ழ ஆகிய இரண்டும் நீங்கிய வ, ய, ல, ள ஆகிய நான்கு இடையினமும், ஆய்த எழுத்து ஒன்றும் தானவமாகி நிலையினின்று இழிவெய்தி தாழ்ந்து குறுகுதலினல், சமையும் ஒற்றின் தன்மையும் மறைவும் எய்தா மெல்லினம்

ஐந்தும், இடையெழுத்து ஆறும் ஆகிய இருபத்திரண்டு எழுத்துக்களும் முடிவு நிலையின் தானவ பதமாய் அமைவுற்றன.

தான் அவ பதம் - தான் அவமான இழிநிலையில் நிற்பது.

நின்ற துருவம் கொண்ட வல்லினச்
சரம்விந் தெழுத்திற் சரிக்க வற்சரம்
ஆறும் உ. இனம் (ஊனம்) அடைந்து நிற்க
உவ்வளித் திட்ட ஒன்றும் நான்கும்
ம். அல்லினமாய் அது வற்சிதம் எய்த
அவ்வழி. ந. இலி. வு. ஐந்தும் எய்த
பதினுருய்த் தைத்தியர் பதத்திலுற்றன (௨௱௩௰௮)

உரை

அசையாது நின்ற துருவநிலையைப் பெற்ற வல்லினச் சரமாகிய வல்லெழுத்துக்கள் விந்தெழுத்தாகிய உகரத்தின் சரிந்து இயைதலான் வலிமை மிக்க சரமாகிய வல்லினம் ஆறும் உ இனமாம் ஊனம் அடைந்து தன்னிலையின் இழிந்து நிற்க, உவ்வளித்த உ ஊ ஒ ஓ ஔ ஆகிய ஐந்தும் மகரத்தோடு பொருந்தாது நீங்க, அவ்விடத்து நகரம் இயையாத் தன்மையை உகர வரிசையாகிய உ ஊ ஒ ஓ ஔ ஐந்தும் எய்துதலால் பதினுருகத் தைத்தியர் நின்றன.

தைத்தியர் பதம் - தள்ளப்பட்ட அசுரநிலை.

உற்ற தனைத்தும் ஒலியிய லாலுள்
ளாண்டு நால்வகை யாக நகாரம்
மாயா சுரபத மாகி நின்றன (௨௱௩௰௯)

உரை

நகாரமானது, எல்லா எழுத்துக்களிலும் விரவி, அவற்றையெல்லாம் வரையறை செய்து ஆண்டு மாயை என்னும் விரிவமைந்த நிலையுடையதாகி, உயிர் நாதம், விந்து, கலை ஆகிய நான்கு இயல்புகளாய் நின்றது.

அசுரர்கள், தேவர்களையும் சால்பமை மேலோர்களையும் அடக்கி ஆண்டு தம் விறலுடைத் திறனை நிலைநிறுத்தல் போல் ஏனைய எழுத்துக்களையெல்லாம் ஆட்சி செய்தலின் நகாரம் அசுரர் பதம் பெறுகின்றது.

எழுத்துக்கள் புறப்புறத்தே அமைவின்றி விரிதலின் மாயையின் இயல்பையும் பெறுகின்றது.





ஆகி நின்ற தனைத்தின் தொகுதியுள்
இராசி கரணம் லக்கினம் முகூர்த்தம்
வருடம் சமையுடன் வற்சரம் ஆண்டென
ஆதி ஔ வொன்று ஆதிபின்ன ஆதியாய்க்
காண நிற்பன கால தத்துவம் (௨௱௪௰)

உரை

மேற்கூறிய எல்லாம் ஆகி நின்ற தொகுதிகள் அனைத்திலும் இராசி, கரணம், லக்கினம், முகூர்த்தம், வருடம் ஆம் சமைவுடன் வற்சரம், ஆண்டு அகரமுதல் ஔன்னு நிறைவாகவும் ஔன்னு முதல் அகரம் நிறைவாகவும் ஒன்றற்கொன்று ஆதியாகவும் நிறைவாகவும் கால தத்துவம் தோன்று நிற்கும்.

கால தத்துவக் கணக்கிற் றேன்றும்
நிலையிற் பிறழா நியதியாக
வகரம் தரும் உ. வரிசையில் ம.ந.அடு
பவ.உ.வ. ஐந்திறம் பகைதர வரினும்
மீத்திரமாக விருசீர்ப் பதம் பெறும் (௨௱௪௰௧)

உரை

காலதத்துவக் கணக்கில் தோன்றும் முறையில் ஒழுங்கு பிறழாத தன்மையாக, வகரமானது தருகின்ற உ ஊ ஒ ஓ ஔ என்னும் உகரத்தின் தோற்ற விரிவில் ம, ந, அடுபவ், உ, வ ஆகிய ஐந்தின் கூறுகளும் பகைதரும் வண்ணம் வந்தாலும் அவை மீத்திரமாக இருசிகளின் பதத்தினைப் பெறும்.

பதமாம் உயிரினம் பன்னி ரண்டில்
நாத எழுத்தினம் நாலும் ஒன்றும்
பெற. ய. இசையிற் பெற்ற இழிவால்
யி யீ யெ யே யை முன்னியைந்து
நில்லா மற்ற ஏழ் இருசீர் ஆம்முன் (௨௱௪௰௨)

உரை

பதமாகும் இயல்பினை உடைய உயிரினம் பன்னிரண்டில் நாத எழுத்து உயிருடன் கூடியதால் தோன்றிய நாத எழுத்தினமாகிய இ, ஈ, எ, ஏ, ஐ ஆகிய ஐந்தும் யகரத்தின் இசையினின்றும் தோன்றிய இழிவினல் (யகரம்) இ ஈ எ ஏ ஐ ஆகிய ஐந்திற்கும் முதலாகவும் சார்பாகவும் நிற்கும் நிலையினையளித்து விட்டபடியால், ஏனைய ய யா யு

யூ யொ யோ யென என்ற ஏழும் மொழிக்கு முன்னிற்பன போன்று, யி யீ யெ யே யை ஆகியவை ஐந்தும் சொல்லிற்கு முன் வாரா.

யகரம் நாத இனமாகிய இ ஈ எ ஏ ஐ ஐந்திற்கும் தன் பூரண உரிமை நல்கி இயங்கச் செய்தமையால் மேற்கூறிய ஐந்தும் யகரத்தொடு இயைந்து மொழிக்கு முன் வாரா.

ஆவோ டல்லது யகரம் முதலாது. (தொல்காப்பியம்) ௬௰௨

அ ஆ உ ஊ ஓ ஔ.

ஆரோ டல்லது யகரம் முதலாது.

பா. வே. மாணிக்க நாய்க்கர் பதிப்பு. தொல்காப்பியம்.

அ ஆ உ ஊ ஓ ஔ யம் முதல் நன்னூல் (104)

ஆகிய இவற்றல் யகரத்துடன் இ ஈ எ ஏ ஐ ஐந்தும் இசைந்து மொழிக்கு முதலில் வாரா என்பது பெற்றும்.

**இரு சீர்ப்பதமா யியையா யதிகள்**
**திரிபுற ஆண்டும் உயிரியல் நாதம்**
**கண்ட. ய். அது. எயினத்து அண்டியாக்கம்**
**கண்ட யதியினத் தண்டியாக்கம்....................**
**தந்தைந் தாய்முன் தனித்தும்மற்ற ஏழ்**
**கன்னித்திர் யாய்க் காணும் வண்ணம்**
**சத்தி எழுத்தாய்ச் சகரம் நிற்கும்** (உ/ΙΤ௬௪)

**உரை**

யகர வரிசை இருவகையாக இயங்கும். ஒன்று மொழிக்கு முதலில் வாரா யி யீ யெ யே யை ஆகிய ஐந்தும் ஒரு வரிசையாகும். மற்றொன்று மொழிக்கு முதலில் வரும் ய, யா, யு, யூ, யொ, யோ, யௌ ஆகிய ஏழும் மொழிக்கு முதலில் வரும் வரிசையாகும். உயிரின் தன்மை நாதத்தை அண்டி நிற்பதாகும். அந்த நாத எழுத்தாகிய இகரத்தைத் தோற்றுவித்த யகரம் இகரத்தை அண்டி அவ்வரிசைக்கு ஆக்கம் தந்த தன்மையால் அவை யகரத்தோடு இயைந்து மொழிக்கு முதலில் வாரா நிலையெய்தின. ஏனைய ஏழும் (ய யா யு யூ யொ யோ யௌ) கன்னித்திரியாம் சப்த கன்னியர் என்று சொல்லும் வண்ணம் சத்தியெழுத்தாக சகரம் நிற்கும்.

**சகர அத்தே தனதாய் (ஞ) ஆயம்**
**சத்திய நியதி யொத்து நிற்கும்** (உ/ΙΤ௬௫)





**உரை**

சகரம் தோன்றும் சுகவதிட்டானத்தையே தன் நிலைக்களமாகக் கொள்ளும் ஞகர நிரை சகரத்திற்குரிய அத்தின் இய நியதியை ஒத்து நிற்கும்.

ச + அத்து + இயம் + நியதி - சத்திய நியதி.

**சத்திய நியதி தவிரா விருசிகள்**
**எதிகன் னித்திர் இவர்க ளொழுகும்**
**நெறியை வகையாம் நியதி தத்துவம்** (உ/ΙΤ௬௬)

**உரை**

சத்திய முறையினின்றும் நீங்காத இருசிகளும், சத்த கன்னியராம் இவர்களும் ஒழுகும் முறையே நியதித் தத்துவமாகும்.

**நியதி யொழுக்கம் நிலை பெறுமாறு**
**இயாவு மாஅம் இலிங்கம் தோன்ற**
**நால்வகை ஊஇழி நலிவுற்றிழிய**
**உயிர்க்கலை ஈரெட் டுபதெச மாக**
**அறு மூன்றுயிர் மெய்யாவு டையதனில்**
**மதிகலை யமித மடங்கல் ஒடுங்க**
**அடக்கிக் குறுகு சித்தரியாய் வடகலை**
**தென்கலை யுள்ளாய்த் திகழ்வ தாக**
**நாதம் விந்தினை நணுகி நிற்கக்**
**கதிர்தரத் தோன்றுவ கலையின் தத்துவம்** (உ/ΙΤ௬௭)

**உரை**

இந்நூற்பா கலையின் தத்துவத்தை உணர்த்துகின்றது.

நியதிமுறை ஒழுக்கம் நிலைபெறுமாறு இயாஉமாம் செவி, கண், நாசி, வாய் ஆகிய நான்கிடத்தும் பொருந்தி ஆன்மாவுக்குக் கீழ்மையாம் இழிவினைத் தரும் தாழ்வு ஆனது துன்புற்று நீங்க, ஈரெட்டுப் பதினாறுகிய உயிர்க்கலை, பன்னிரண்டாம் உபதசத்தில் ஒன்றி நிற்க (உபதசமாக) பதினெட்டு உயிர்மெய்யாகிய ஆவுடை தன்னில் மதிகலை பதினாறில் அமிதமாக மிஞ்சி நிற்கும் நான்கும் அடங்கி ஒடுங்கும்படி அடக்கிக் குறுகும் சித்தரியாய் வடகலை தென்கலையாம் தமிழின்கண் திகழும் வண்ணம் நாதமானது விந்தினை நண்ணி நிறைபெறுமாறு கதிராகிய ஞாயிறு தருதலால் கலையின் தத்துவம் தோன்று நிற்கும்.

இதில்

ஊழியொடுக்கம் ஒடுங்கு மிலிங்கம்
உபதசம் அ. உ. உடைய பீடம்
நாத விந்து ஞாயிறு திங்கள்
ஆதி யனவாய் அறுவகை தோன்றின. (உ௱சஎ)

உரை

மேற்கூறியவற்றுள் ஊ ஆக இழியுந் தன்மை எய்தும் ஆவளி ஒடுங்கும் இலிங்கம், உபதசம் அகரமாகிய உயிரும் உகரமாகிய விந்தும் கூடிய பீடம், நாதம், விந்து ஞாயிறு, திங்கள் ஆகிய ஆறும் தோன்றின. அதாவது இலிங்கமும், உபதசமும், நாதம், விந்து, ஞாயிறு, திங்கள் ஆகியவை தோன்றினவாம்.

தோன்றி நின்ற தொகுதி யான
எல் ஆ மா ஆய இயல்பீ ரேழ்
லியைந் தீரேழா யெழுநிலை கொண்டு
கோசம் பீசம் கூருரு வுடனே
அடர்திரம் நூற் றெட்டாகி இசைக்க
உயிர்க்கலை ஈரெட்டும் தெச மாக
இசைவாம் ஆக்ஞையில் ஏறி யுயிர்க்கலை
ச அக்கரமாய் சார அவித்தியை
பாய்விளை வைத்தர வமையும் வித்தை (உ௱சஅ)

உரை

வேதம் ஒலியை உடம்பாகக் கொண்டது. அவ்வொலியானது வளியால் வெளியில் உலவும் தன்மையைப் பெற்று உடம்பை உடையதாகியது. அந்த ஒலியும் வளியும் செயல்படும் நிலையம் கொண்ட பெரும் நாடி சிரம், அத்தம், தோள், தொடை, பாதம் இவை பொருந்திய உடலாக அமைந்திருக்கிறது. இவ்வாறு தோன்றி நின்ற தொகுதியான எல்லாமாய அண்டம் பிண்டம் ஆகிய ஈரேழு உலகங்களையும் அடக்கிய நாதம் இயல் நடனத்தொலித்த டமருக ஒலியாம் அடர்திரம் நூற்றிஎட்டாக சிட்செய் (12) சூக்கம். வியாகரணம் என்னும் மேற்கணக்கு 9 ஆகிய அத்தமும், சந்தசு மூன்று (3) ஒடுக்கம் 5 கீழ்கணக்கு 9, கற்பம் என்னும் மெய்வளம் 72 கூட உரு 108 ஆகும். இந்த இசை உரு இசைக்கும் கால் உயிர்க்கலை 16ம் தசவித நாடியில் இயங்கி இசைவாம் ஆக்ஞையில் உயிர்கலை 12 ஆய் சக்கரமாய்ச் சார கீழ்மூலாதாரம் மேல்மூலாதாரம் சார அதாவது கீழ் உலகம் மேலுலகம் சார மூலத்தில் "ஐ" என்னும்





வித்து சார அதாவது மோனத்திற்கு வித்தை விதைக்க. அது அவித்தையாகி விளைவைத் தர அமையும் (வித்து+ஐ) அவித்தை (ரு). சாக்கிரம், சொப்பனம், சமுத்தி, துரியம், துரியாதீதம்.

வித்தியை ஆதார விளைவைத் தருஞ்சொற்
பண்ண வமைசொற் பணத்தில் வித்தின்
இயைவு தோன்ற இயற்கை கொண்டு
ஆதன் தாதுமூ லத்திடை மாழ்க்க்
கூறு பாடு கொள்நடு நிலையாம்
தீயென விச்சற் றிகழும் விசுத்தி
யானது நாம்எனும் அவ்வித் தான
தமையும் நாம ஆவளி நமனக்
குறுகிச் சித்தாய்க் கொள்ளக அங்குரம்
இரண்டாய் அ இ உ ஏ ஐ ஓ ஔ
இனமாய் விளங்குவ திராக தத்துவம் (உ௱சகூ)

உரை

இந்த நூற்பாவில் இராக தத்துவத்தின் இயல்பினை விளக்குகின்றார்கள். இராக தத்துவம் ஆரோசை அமரோசை என்னும் விரிவுகளையுடையது.

ஆரோசை ஆரோகணம் என்றும் அமரோசை அவரோகணம் என்றும் வழங்கிப் பெறும்.

இராக தத்துவமாக அ, இ, உ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழு எழுத்துக்களும் அமைகின்றன.

அ இ உ குறுகி நிற்கும் அமரோசையைக் குறிப்பன. ஏ ஐ ஓ ஔ என்பன நீண்டு செல்லும் ஆரோசையைக் குறிப்பனவாம்.

உயிரானது வித்தாம் எழுத்தின் இயைந்து அதன் விளைவாகிய சொற்கள் என்னும் படத்தில் சொற்பணமாம் அவத்தையில், வித்தின் இயைபு தோன்றுமல் செய்யும் செயற்பாட்டால் ஆதன் என்னும் உயிரானது, சொல்லாகிய தாதுப் பொருளிலும், எழுத்தாகிய வித்திலும் ஆழ்ந்து கிடக்கும் நிலையை நீக்கும் வண்ணம், தீயின் வித்தாகத் திகழும் விசுத்தியானது நாம் எனும் அந்த வித்து அமையும். நாம ஆவளியாக வும், அது குறுகிச் சித்தாக அமைவு கொள்ள, அகத்தின் கண்ணே தோன்றும், அது அங்குரம் (அகத்தின் கண்ணே தோன்றும் முளை) இரண்டாக அ இ உ எ ஐ ஓ ஔ ஆக விளங்குவது இராச தத்துவம் ஆகும்.

இகரம் நாதம், அகரம் உயிர், இகரமாம் நாதம் அகரமாம் உயிருடன் கூட எகரமாம் நாத உயிர்மெய் தோன்றும். எகரத்தின் நெடிலே ஏகாரம் ஆகும். அதன் ஓசை நீண்டு செல்லாமல் சார்ந்து அமைவுறுத்தும் சார்பெழுத்தே ஐகாரம் ஆகும்.

உகரம் விந்து, அகரம் உயிர், உகரமாம் விந்து அகரமாம் உயிருடன் கூட ஒகரமாம் விந்துயிர்மெய் தோன்றும். ஒகரத்தின் நெடிலே ஓகாரம் ஆகும். ஓகாரத்தின் ஓசை நீண்டு செல்லாது அதனைச் சார்ந்து அமைவுறுத்தும் சார்பெழுத்தே ஔகாரமாகும்.

அ இ உ என்னும் அமரோசையாகவும், ஏ ஐ ஓ ஔ என்னும் ஆரோசையாகவும் இராக தத்துவம் விளங்கும்.

இராக தத்துவத் தியைந்து காணும்
கருவுடனிலையிற் கலந்து சுழித்துக்
கோசம் பீசம் கூடிய வுருவம்
தாது மூலம் ஆதன் ஆய
சடமாய் விளங்குந் தன்மை நிலையில்
வேற்றுமை மிக்க விழைபொறி கோட்டு
தலையும் கோளியல் சார்தரு பூதம்
வாழ்சகம் ஆகிய வாசகக் கூட்டத்
தொகுதி ஆறுய்த் துலங்கு சடமும்
சடத்திற் புணரியல் சந்துகொள் மூட்டுக்
கூடும் யோகக் கூட்டம் முப்பதும்
இவற்றிடைச் சொற்சார் பெய்தும் உறுப்பு
உடைமைத் தகுதி யொருபதி னெட்டும்
கோள் சார்நிலையைக் கூறும் மறைத்தசொற்
பாந்தாம் இடைக்குழிப் பதைப்போர் ஒன்பதும்
பந்திப் புடைய பார்வை ஆகிக்
கட்டு வரிசையாய்க் காணல் கொண்ட
பந்தி யொருபதி னைந்தும் ஆகிக்
கூடும் உடம்பு கொண்டு தேசம்
சாதி மொழியஃ தாதி கொண்ட
உருவாகு அக்கரம் புருட தத்துவம் (உ/ ா(நிம)





## உரை

இந்த நூற்பாவில் புருட தத்துவத்தின் பாங்கினை விளக்குகின்றுர்கள்.

அருகு நுனிப் பனியனைய சிறியதுளி பெருகியொரு ஆகமாகியோர் வாலருபமாய் அவர் ஒருபெரியோராய் என அருணகிரிநாதப் பெருமான் கூறியருளிய புருட தத்துவத்தை இருபதின் மேல் ஒருவரி கொண்ட நூற்பாவால் விளக்குகின்றுர்கள்.

மேற்கூறிய இராக தத்துவத்தில் பொருந்திக் காணும் கருவானது உடல்நிலையில் கலந்து சுழித்து கோசம் பீசம் கூடியவுருவுடன் தாது, மூலம், சீவன் ஆகிய சடமாய் விளங்கும் நிலையில், வேற்றுமை மிகுந்த விருப்பத்தினைத் தரும் பொறிகளைக் கொண்ட தலையும், கோள்களின் தன்மை அமைந்த பூதங்கள் வாழ்கின்ற சகமாகிய தொகுதிகள் ஆருகத் துலங்குகின்ற சடமும் (உடம்பும்) உடம்பிற் புணரும் சந்து கொண்ட மூட்டுகள் கூடும்யோகக் கூட்டம் முப்பதும். இவற்றின் இடையே சொல்லின் இயல்பினைத் தழுவும் தகுதியுடைய பதினெட்டும், கோள்கள் சார்கின்ற நிலையைக் கூறும் வரிசை ஒன்பதும் வரிசையாகிக் காணும் நிலைகொண்ட பார்வை பதினைந்தும், கூடும் உடம்பினைக் கொண்ட தேசம், சாதி மொழி முதலியவற்றை முதலாகக் கொண்ட அக்கரமே புருட தத்துவம்.

சடம் - உடலைத் தாங்கும் ஆதாரம் ஆறு, தாதுப் பொருள் ஆறு என்ற கூறினுலும் சாலும். பொறிகள் ஐந்தும் வேறுபாடு உடையன ஆதலினுலும் அவற்ருல் உணரப்படும் புலன்களும் வேறுபாடு கொண்ட விழைவினைத் தருதலானும் வேற்றுமை மிக்க விழை பொறி ஐந்து என்று கூறுகின்றுர்கள்.

புருட தத்துவம் பொருந்தி வாய்செப்பு
இயைவில் இயாகம் எய்திக் காண்தரு
உருவன்அன் அந்தல் உற்ற நிலையில்
உள்ளது நீங்கள் இல்லது தோன்றல்
நெடியது குறுகல் குறிஇயது நீளல்
வேறுய்த் திரிதல் விகாரம் எய்துதல்
வலிது மெலிதாய் மாறிக் காணல்
மெலிது வலிதாய் மிரட்டி நிற்றல்
ஆகக் காணும் ஆ அட்டவர்க்க
மாய்இயை வாச்செயம் வழங்கும் ஐந்தும்
வாழ்சக அதீதம் ஆன இரண்டும்
அச்செயம் ஒன்றும் ஆய ஐந்துமாம்

**யரலழள றனஹ நமசிவய எனும்**

**திருவைந் தெழுத்துத் தெரிசன இயலில்**

**உரிய துரியமாய் ஒன்றும் அற்று**

**விளைவற நிற்கும் வித்தியா தத்துவம்** (உ_ЛТ ருமக)

**உரை**

புருடனுக்குரிய தத்துவம் அனைத்தும் பொருந்தி வாய்ப் பேச்சு அற்று, இயாகம் என்னும் வேத சரீரம் வாய்க்கப் பெற்ற மறையுருவாளன், அனந்தல் என்னும் சுழுத்தி நிலையினை அடைந்த காலை, உள்ள எழுத்து நீங்குதல் இல்லாத எழுத்து தோன்றுதல்; நெட்டெழுத்து குறுகுதல்; குற்றெழுத்து நீளுதல்; வேருகத் திரிதல், விகாரம் எய்துதல், வலிது மெலிதாய் மாறிக் காணுதல், மெலிது வலிதாய் மிரட்டி நிற்றல், ஆகக் காண்கின்ற உயிரின் எண்வகை நிலையாய் (அட்டவர்க்கமாய்) பொருந்தும் ஆவிற்கு (உயிருக்கு) செயம் வழங்கும் திருவைந்தெழுத்தும், வாழ்கின்ற சகமம், அதன் எல்லை கடந்த அதீத நிலையும் ஆகிய இரண்டும் அச்செயம் என்னும் ஒன்றும் ஆகிய ஐந்தும் ஆகும் ய ர ல ழ ள ற ன ஹ நமசிவய என்னும் திருவைந்தெழுத்துத் தெரிசன இயலிற்கு உரிய துருவமாகிய ஒன்றும் அற்று விளைவும் அறும் வண்ணம் வித்தியா தத்துவம் நிலைத்து நிற்கும்.

**வித்தி யைபாகி விளைவு தராஅ**

**வித்தற அணைவுறு சித்துரு வாகி**

**அவ்வித்தை சதுரியம் அனைத்தும் அஃதிஃ**

**தான தூர்இயய் ஆம்துரி யாதித்து**

**ஐந்து முத்திரை யாக்க் காண்பதில்**

**தாவனல் பற்றித் தகிநெருப் பாறி**

**வெந்து விளைந்து விளங்கும் நீற்றின்**

**ஒளிதரு மிரவி யொத்து அரசாய்**

**விளங்கும் சுத்த வித்தியை சுன்னம்** (உ_ЛТ ருமஉ)

**உரை**

சுத்த வித்தையில் விளைந்த சுண்ணத்தின் தன்மையினை இந்த நூற்பாவில் விளக்குகின்றுர்கள்.

வித்தின் இயல்பாகிய விளைவினைத் தாராமல், வித்தின் தன்மை அற்றுப் போதலால் இறையொடு பொருந்தும் தன்மையுடையதாகி, அவித்தை என்று கூறுப்படும், சாக்கிரம் (நினைவு) சொற்பனம் (கனவு) சுழுத்தி (உறக்கம்) துரியம் ஆகிய அனைத்தும் அது இது





என்று சொல்லப்படும் எல்லாம் இயையும் தூர் ஆகிய மூல நிலையத்தில் வாசி பொருந்தும் துரிய அதீதத்து ஐந்து முத்திரையாகும் வண்ணம் காணும் தோற்றத்தில், தாவும் அனல் பற்றித் தகிக்கும் நெருப்பாறில் வெந்து விளைந்து ஆறி விளங்கும் நீற்றின் ஒளிதரு ஞாயிற்றைப் போல அரசாம் தன்மை பெற்று விளங்கும் நிலையே சுத்த வித்தையாகிய சுண்ணம் ஆகும்.

வித்தில் காவும், தாரும், தளிரும், பூவும், பிஞ்சும், காயும், கனியும் ஆகத் தழைத்து நின்ற நிலை சுத்த வித்தையில் தாவும் தணலால் வெந்து விளைந்து ஆறிய சுண்ணமாக நிலை பெறுகிறது. அந்தச் சுண்ணமாம் நீறு மந்திரமாகவும், வானவர் மேலதாகவும் புண்ணியம் தருவதாகவும் விளங்குகின்றது.

வேதங்கள் திருநீருய் ஆனவாறும், என்ற சித்தர் குழுச் செம்மல்களில் ஒருவர் கூறி இருக்கின்ருர்.

வித்தியை பாகி விளைவு தாரா

வித்தற அனைவுறு சித்துரு வாகி

என்ற அடிகளின் பொருள் நுட்பத்தை

வித்தினைத் தேடி முளையைக் கைவிட்டவர்

பித்தேறி னார்களென் றுந்தீ பற

பெறுவதங் கென்பெணே யுந்தீபற

என்ற திருவுந்தியார் பாடலும்

அவ்வித்தைச் சதுரியம் அனைத்தும் அஃதிஃதான தூர் இயய் ஆம் துரியா தீதத்து,

என்ற அடியின் பொருளை

"துரியங் கடந்த தொண்டர்க்குச் சாக்கிரம்

துரியமாய் நின்றதென் றுந்தீபற

துறந்தார் அவர்களென் றுந்தீபற"

என்ற பாடலிலும் கண்டு மகிழ்க.

சுத்த வித்தையின் தெளிவாய் விளங்குவது சுண்ணமாம் திருநீறு ஆனபடியால், பதம் அனைத்தையும் கடந்த முனிவராம் காழிவேந்தர், திருநீறே சிவமாந் தன்மையுடையதென சிவபரத்துவத்தை திருநீற்றின் மீது ஏற்றிப் பாடுகின்ருர்கள்.

**ஆவாகனமாய் அமைய மயிர்ப் பால்**

**அம்எனுந் தீர்த்தம் அமையத் துருவ**

**வுருவ மதியஃ தொன்ற நடைகொண்**

**டீசத்துவமாய் ஆயைவ திலிங்கம்** (உ_ЛТ ருமா)

உரை

தாவும் அனல் பற்றித் தகிக்கும் ஞானக் கனலாம் நெருப்பாற்றில் அனைத்து எழுத்துக்களும் ஒடுக்கம் பெற்று அமைய, உரோமக்கால் தொறும் அம் என்று சொல்லக் கூடிய அமுதமாம் நீர்த்துளி அருகின் நுனியில் அமைந்து நிற்பது போல் நிலைபெற, அசையா நிலையாம் துருவம் என்னும் உருவ நிலை, சந்திர சாந்தத்தால் நிலைபெறும் வண்ணம் வாசி நடைகொள்வதால் ஈசத்துவமாய்ப் பொருந்தி அமைவது இலிங்காகாரத் தோற்றம் ஆகும்.

பசுவின் மலமாம் சாணம் நெருப்பாம் தீயினுல் நீரும் சுண்ணம் ஆதல் போல, உயிரின் மலமாகிய எழுத்துக்கள் மூலத்தெழும் ஞானத்தீயினுல் வெந்து நீரும் சுண்ணம் ஆகும் நிலையில் ; யாக்கையின் புறத்தே அமைந்துள்ள ரோமக்கால் தோறும் அமுதமாம் நீர்த்துளி நிலையத்து நிற்றலால் ஆன்மா வெப்பமாம் துயர் நீங்கி சிவமாந் தன்மையினையெய்தும் அந்த நிலையே சிவன் சிவமாம் இலிங்காகாரமாய் அமைந்து நிற்கும். இதனை,

வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்றழை
குரம்பை தோறு நாயுட லகத்தே
குரம்பை கொண்டின் தேன்பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
ஏற்புத் துளைதொறும் ஏற்றினன்

என்னும் திருவாசக திருஅண்டப் பகுதியின் அடிகளால் அமுதம் மயிர்க்கால் தோறும் நிலை பெறும் நிலையை நுண்ணதின் உணரலாம்.

**சந்நி தானத் தன்மை என்ன**
**அகலா தணுகா தமைசம நிலையில்**
**வெம்மை மிகுதியின் வேகத் தலைகொடு**
**அக்சதம் என்ன வழற்பொறி யுருவில்**
**அஞ்சல் இல்லாத் துஞ்சல் பொருந்து**
**சாதாக் கியமாம் தத்துவம் புலிங்கம்** (உ௲௫௱௪)

உரை

சந்நிதானமாம் அண்மையில், அகலாமலும், நெருங்காமலும் அமையும் சமநிலையில் தாவும் அனல் பற்றித் தகிக்கும் வெப்பத்தில் வேகாத தலையைக் கொண்டு அக்சதம் என்னும் கண்ணில் தோன்றிய அழலின் பொறி உருவத்தில் அஞ்சாத்துஞ்





சலாம் இறப்பினை அடையும் சாதாக்கியம் ஆம் தத்துவம் புலிங்கம் ஆகும்.

இறவா முன்னர் இறப்பது சாதாக்கியம் என்னும் தத்துவம் ஆகும். அஃது புருவ இடையில் அமைந்த ஞானக்கண்ணில் தோன்றும் தீப்பொறியன்ன ஒளியால் அமைதலின் புலிங்கம் என்று கூறப் பெறுகிறது.

தீப்பொறி பிறவற்றின் மாசுகளை எரித்துத் தூய்மையாய் விளங்குதல் போல், அக்சதம் என்னும் தீப்பொறியும் மலமாசுகளை நீக்கி யான் எனது என்னும் உணர்வினை யொழித்து, அச்சமில்லாத யோக உறக்கத்தினை நல்கலின் அது சாதாக்கியம் ஆகிறது.

புலிங்கமாம் தீப்பொறி சாதாக்கியத்தைத் தருதலின் சாதாக்கியம் ஆம் தத்துவம் புலிங்கம் என்று கூறப் பெறுகிறது.

**ஓத அனம்நீர் ஓதனம் ஆகிச்**
**சார்தரு கின்ற சந்தி ரோதனச்**
**சாவிற் சாகாக் கால்வினந் துரமாய்ச்**
**சிந்துர வமிதந் தந்தூண் அருந்துந்**
**தன்மைச் சத்தி தத்துவம் இக்கு** (உ௲௫௱௫)

உரை

தமிழ் மொழியின் நெடுங்கணக்கு யோகசாதன நிலையில் அமைந்துள்ளது என்பதனை தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

மாமன்னர்கள் தம்முள் பகைத்துப் போராடும் போராட்டங்களைக் காட்டிலும் கொடிய போர் யோக சாதனப் பெரும் போர்.

ஐம்பூதங்கள், பொறிகள், புலன்கள் ஏனைய தத்துவக் கூட்டங்களுடன்; யோக சாதனஞ் செய்வோர் தனித்துப் போராடும் நிலை மிகவும் பரிதாபத்திற்குரியது.

"கூற்றம் போல் ஐவர் வந்து குலைத்திட்டு கோகு
செய்ய ஆற்றவுங் கில்லேன் நாயேன் !"

"முற்றினல் ஐவர் வந்து முறைமுறை துயரஞ் செய்ய
அற்று நான் அலந்து போனேன்"

ஒரு முழம் உள்ள குட்டம் ஒன்பது துறையுடைத்தாய் அரை முழம் அதன் அகலம் அதனில் வாழ் முதலை ஐந்து. பெருமழை வாய்தல் பற்றிக் கிடந்து நான் பிதற்றுகின்றேன். கருமுகில் தவழும் மாடக் கச்சியே கம்பனீரே என யோகசாதனப் போரின் நிலையினை அப்பர் சுவாமிகள் விளக்கமாகப் பாடியிருக்கின்றார்கள்.

இத்தகைய கொடிய போர்களையெல்லாம் புரிந்து ஆய்ந்து அடங்கும்படி செய்யும் சந்நிரோதனப் போரில் சாகுமுன் சாகும் சாவில், அழியாத கால் உரத்துடன் பெற்று நிலை பெற செம்மையைச் செய்யும் செவ்விய அமுதந் தந்து அருந்தும்படி செய்யும் சக்தி தத்துவம் கரும்பின் இனியதாகும்.

**தேனுபு காப்புனற் செழுமைச் சாந்தந்**
**தருநஞ் சடக்கிச் சாதல் பொருந்தச்**
**செய்சிவ தத்துவம் திகழ்வ தொற்று** (உ/ரு௰௬)

**உரை**

இந்த நுற்பாவில் ஒற்றுகிய முற்றுப்புள்ளி - O சிவதத்துவமாக விளங்கின்றது என்பதனைக் கூறுகின்ருர்கள்.

சிவ தத்துவமானது செழுமை மிக்க கடலானது தந்த நஞ்சினை அடக்கி சாவினை நீக்குந் தன்மையது. சாதனம் புரிந்து நிறைவு பெற்ரோர்க்குச் சந்திர பிரபையாம் ஒளி வட்டத்தினை தெய்வப் பசுவும் புக முடியாத மேரு என்னும் சிரசிற் காட்டி சா முன்னமே சாகச் செய்யும் தன்மையதாகும். அந்தத் தன்மையை வடிவிற் கொண்டதே ஒற்று என்னும் புள்ளியாகும்.

ஒளிப் பிரபையாம் வட்டம் சாதனம் செய்வாரின் செயலடக்கி நிலையில் நிலைபெறச் செய்தல் போல, மெய்யின் செயற்பாடு ஒற்றுகிய புள்ளி மேல் நின்று நிலை பெறச் செய்தலால் அது சிவதத்துவமாக விளங்குகின்றது.

**ஐந்தா றுக ஆனனங் கொண்ட**
**வொன்ருய்க் காண நின்று அனைத்தும்**
**ஆருறுக வேறு பாடின்றிப்**
**பெயராச் சதமாம் உயர்வுறு மெய்பொருள்**
**திகழக் காண்ப திதுசிவ தத்துவம்** (உ/ரு௰௭)

**உரை**

அகர முதல் னகரம் ஈருக முப்பதாக முற்பட்டுத் தோன்றியவை ஒன்ருகக் காணும்படி நின்றும், அனைத்தும் முப்பத்தாறு தத்துவங்களை உணர்த்துவதோடு நீங்காத சதமாகவும் காண்பது சிவ தத்துவமாகும்.

"ஒன்ருய் முளைத் தெழுந்து எத்தனையோ கவடுவிட்டு"

என்னும் திருவாசக அடி நமக்குச் சிவதத்துவத்தையுணர்த்தும்.





**சிவதத் துவத்திற் செம் பொருளாக**
**எழுவாய் வயணம் எல்லை செயல்படு**
**பொருளிவை யாறும் புணர்புற நிற்கும்** (உ/ரு௰௮)

**உரை**

இந்நூற்பாவில் சிவதத்துவத்தின் செம்பொருளாக ஆறு அமையும் எனக் கூறுகின்ருர்கள்.

அவை,

முதற்பொருள் வயணமாக விளங்கும் மூவகையாம் மூன்றும், இவைகளின் அத்தாம் எல்லையும் செயல்படு பொருள் ஆகிய இவையாறும் பொருந்தும்படி நிற்கும்.

| | | |
|---|---|---|
| எழு வாய் | ——— | உயிர் |
| வ | ——— | வகரத்திற்ரேன்றும் விந்தாம் உகரம் |
| ய | ——— | யகரத்திற்ரேன்றும் நாதமாம் இகரம் |
| ண | ——— | ணகர முச்சுழியுணர்த்தும் சூரியகலை சந்திரகலை, அக்கினியாம் சுழிமுனை |
| எல்லை | ——— | எழுத்துக்களின் அத்தாகிய எல்லை |
| செயல்படும் பொருள் | ——— | அனைத்தாலும் செயல்படும் பொருள் - மொழி |

மேற்கூறிய அனைத்தும் சிவ தத்துவமாம்.

**புணர்ப்புற நின்று பொருந்து நிலையில்**
**ஏழ் அமைவாய எழுத்தாய்ச் சமைந்து**
**புத்த சமஇயப் போக்கை ஐந்தெழுத்துச்**
**சார்வாற் றீர்க்குஞ் சமய தீர்க்கையில்**
**வேத வேதாந்தம் விளங்கிக் காணும்** (உ/ரு௰௯)

**உரை**

இந்த நூற்பாவில் சமய தீர்க்கையை விளக்கி அதன்கண் வேத வேதாந்தம் அமையும் தன்மையைக் கூறுகின்ருர்கள்.

ஒன்ரேடு ஒன்று சேரும் நிலையில் மூலாதாரம் முதலாகிய ஆறு ஆதாரம், நாதாந்தம் ஆகிய ஏழ்வகை நிலயத்தின் வடிவையுணர்த்தும் எழுத்தாய் உருப்பெற்றுப் பொலிந்த சம இயப்பாங்கினை, திருவைந்தெழுத்தாய நமசிவய என்பதின் சார்வினல் தீர்க்கும் சமயத் தீர்க்கையில், வேதம் நான்கும், வேதாந்தம் ஒன்றும் ஆகிய ஐந்தாக விளங்கும்.

எல்லா எழுத்துக்களும் ஐந்தெழுத்தின் தோற்றமே என்பது முன்னர் விளக்கப்பட்டுள்ளது. நகாரத்தைக் கருவாகக் கொண்டு அமைவது தவளாகாரம் என்னும் இருக்கு வேதம் ஆகும். மகாரத்தைக் கருவாகக் கொண்டு விளங்குவது இயற்சீர் வேதம் என்னும் யசுர் வேதம் ஆகும். சிகரத்தைக் கருவாகக் கொண்டு பூவூடியம் என்னும சாம வேதம் தோன்றும்.

பூவூடு இயம் என்பதே சாம வேதம் ஆகும்.

வகரத்தைக் கருவாகக் கொண்டு அதர்வண வேதந் தோன்றும்.

யகரத்தைக் கருவாகக் கொண்டு வேதாந்தம் தோன்றும்.

இவற்றின் விளக்கம் எல்லாம் திருமுறைப் பெருநூல் விளக்கம் என்னும் நூலில் காண்க.

**சமயந் தீர்க்கை தருமைந் தெழுத்தால்**
**விச்சுஞ் சேடமு மாக விரிந்ததை**
**ஆறு எழுத்துள் ளமைய அடக்கும்**
**ஆவும் அறணமும் ஆய்விச் சேய்அவம்**
**விளங்கிக் காணும் விசேட தீர்க்கையில்**
**அங்கம்ஓர் ஆறின் அமைவு தோன்றும்** (உ/ITசுπ)

**உரை**

அகர முதல் னகர மீறுகச் சமைந்துள்ள எழுத்துக்களின் இயல்பினை எல்லாம் சுருக்கி அடக்கிக் கொள்ளும் தன்மையது திருவைந்தெழுத்தாகும். சமைந்துள்ள அனைத்தையும் தீர்த்தலின் சமய தீர்க்கை என்று சொல்லப் பெறுகிறது.

அந்தத் திருவைந்தெழுத்தால், வித்தும் அதன் விளைவுமாய் விரிந்தவற்றை யெல்லாம் ஆறு எழுத்துக்களுள் அமையும்படி அடக்கும் ஆவும் அறணமும் ஆய், விச்சுத் தன்மை பொருந்தி நிலை கெடுதல் உறும்படி விளங்கி நிற்கும்.

விசேட தீர்க்கையில் ஆறங்கத்தின் நிலைபேறு புலப்படும்.

எல்லா எழுத்துக்களையும் ஆறு எழுத்துக்கள் ழ ற ஃ ன எ ஒ என்பனவாகத் தோன்றும்.

றகாரம் தலைப்பட்டு வல்லெழுத்து ஐந்தையும் அடக்கித் தான் முற்பட்டுத் தோன்றும்.

ழகாரம் ——— இடையின எழுத்தாம் ஏனைய ஐந்தினையும் அடக்கி, தான் முற்பட்டுத் தோன்றும்.





னகாரம் ——— மெல்லின எழுத்தாம் ஏனைய ஐந்தினையும் அடக்கி தான் முற்பட்டுத் தோன்றும்.

எகரம் ——— இ ஈ எ ஐ ஆகிய ஒலிக்கூறுகளின் நிறைவாய் விளங்கும்.

ஒகரம் ——— உ ஊ ஒ ஔ ஆகிய எழுத்துக்களின் ஒலி நிறைவாய் விளங்கும்.

அஃகேனம் உயிர் வரிசையாகிய, உயிர், நாதவிந்து, கலை, கலாதி ஆகியவைகளை அடக்கித் தான் முற்பட்டு நிற்கும்.

அனைத்து எழுத்துக்களையும் அடக்கி இவை நிற்பதால் ஆவும், அறணமும் என்று கூறப்படுகின்றன.

இவையாறுமே ஆறு அங்கங்களாக அமையும் என்க.

**விசேடந் தீர்க்கை விளக்கும் ஆறே**
**டைந்தாம் ஏகா தசவுருத் திராங்கசம்**
**பரிய வட்டமாய்ப் பரந்து கவிக்க**
**அனைத்துந் தானே யாய்க்கூ டிலயம்**
**சுழிவு கொண்டுட் சுற்றும் உடுக்கையாய்**
**திகழ நிர்வாணம் தீர்க்கும் தீர்க்கையில்**
**சித்தாந் தத்தின் தெளிவு தோன்றும்** (உ/ITசுπகு)

**உரை**

விசேடமென்னும் தீர்க்கையானது தோற்றுவிக்கும் ற ழ ஃ ன எ ஒ என்னும் ஆவும் அறணம் என்னும் ஆறு எழுத்துக்களோடு சமய தீர்க்கையில் தோன்றிய திருவைந்தெழுத்தும் சேர்ந்து ஏகாதசம் என்னும் உருத்திராங்கசம், பெரிய வட்டமாய்ப் பரந்து கவித்தலைச் செய்ய அனைத்தும் தானேயாகி கூடி ஒன்றுந் தன்மை எய்தி, அவ்வாறு ஒன்றுந் தன்மை எய்திய லயம் உட்சுழிவு கொண்டு சுற்றும் ஆடையாகத் திகழ நிர்வாணதீர்க்கையால் ஏற்படும் ஒடுக்கத்தில் சித்துப் பொருளாம் உயிரின் தோற்றத் தெளிவு காணும்.

விசேடத் தீர்க்கையால் பெறப்பட்ட ழ ற ஃ ன எ ஒ என்னும் ஆறெழுத்தும் சமயத் தீர்க்கையில் பெறப்பட்ட சிவயநம என்னும் ஐந்தெழுத்தும் கூடி லயமுறின் அனைத்து எழுத்தும் கூடி லயமுற்றதை யொக்கும். இருவகை எழுத்துக்களுமே பரிவட்டம் என்னும் ஆடையாய் க விந்து ஒன்றுந் தன்மையெய்தி உட்சுழிவு கொண்டு சுற்றும்

ஆடையாகிய நிலை நிர்வாணம் என்னும் தீர்க்கையால் நீங்கித் தத்துவத் தன்மை யொழிந்து உயிரின் தோற்றம் தெளிவுற்று விளங்கும்.

**தீர்க்கை பெற்றுத் திகழும் நிமித்தத்**
**தவனி புவனம் பதமிவை யனைத்திற்**
**காதார மேரு வாகி ஏழேழ்**
**சத்தி சடத்தைத் தவிர்க்க வமையும்**
**கோண நாற்பத்து மூன்றுன தடங்கல்**
**அடங்கித் தன்னுள் ளமிழ ஏக**
**உருவாய் நின்றதூஉம் உட்படச் செய்யும்**
**வீடாய் மந்திரம் விளைநீ டயில்ஆய்**
**அமிழ்ந் தஃதேகம் ஆய தீர்க்கையில்**
**உப நிழலறங்கள் ஒளிபெறத் தோன்றும்** (உ/ா சா௰உ)

**( சமயம் ஐந்தங்கம், விசேடம் மும்மீன், திசாபுத்தி**
**சித்திரம். நிர்வாணம் கலைசரம். அபிசேடம். நிமித்தம்,)**

**உரை**

நிர்வாண தீர்க்கை பெற்று விளங்கும் தன்மையினல் இந்தப்பூமி, பதினன்கு உலகம், பதம் என்று சொல்லப்படுகின்ற பிரகிருதி ஆகிய இவையனைத்திற்கும் ஆதாரமாகவுள்ள மேருவாகிய சத்தியின் சடமாகிய நாற்பத்து ஒன்பது எழுத்துக்களையும் நீக்க அமையும் அடங்கலான நாற்பத்து முக்கோணத்தில் அடங்கி, தன்னுள் அமிழ்ந்து விடும்படி ஏகவுருவமாக நின்றதும், தானகத்து ட்படச் செய்யும் வீடாகவும் மந்திர விளைவைத் தரும் நீண்ட கூரிய வேலாய், மேற்கூறிய நாற்பத்தொன்பதும் ஆகிய அது அமிழ்ந்து ஏகம் ஆகிய அபிடேக தீர்க்கையில் உபநிழல் அறங்கள் என்னும் உபநிடதங்கள் ஒளிபெறத் தோன்றும்.

பார் என்னும் பூமி, புவனம், பதம் என்னும் பிரகிருதி ஆகிய அனைத்திற்கும் ஆதி மேரு என்று கூறுகின்றுர்கள்.

மந்திர சக்கரங்கள் அனைத்திற்கும் ஆதாரம் மேரு சக்கரமாகும்.

ஆதாரங்கள் அனைத்தின் கோணங்களையும் அடக்கி ஒன்ருய்த் திகழ்வது நாற்பத்து முக்கோணம் ஆகும். இதனை மந்திரக்கலை வல்லார்களை அணுகி உணர்க.





சக்தியின் சடமாகிய எழுத்து நாற்பத்தொன்பதும் அமிழ்ந்து ஏகமாகிய நிலையில் உப நிழலறங்கள் தோன்றுகின்றன. அவ்வாறு தோன்றக் காரணம் என்னை ? எனின், அது ஒடுங்கியது தோன்றும் நியதியான் என்க.

உபநிழல் அறம் ——— உபநிடதம் ஆகும்.

அறம் ——— வேதம் அதன் இயல்பினை நிழலென நீண்டு விளக்குதலின் உபநிழல் அறங்கள் என்ற பெயர் பெறுகின்றன.

வேதங்கள் அனைத்தும் அமிழ்ந்து ஏகமாம் நிலைபெற்ற பின்னரும் தம் வாரிசாக உபநிழல் அறங்கள் தோன்றுவது உலகியல் நியதி ஒத்து காணக் கிடைப்பதொன்ரும்.

**நிமித்தம்**

**ஒளிபெறத் தோன்றும் தெளிவுடைத் தீர்தமிழ்**
**உபரியாய வுரையாய் மகன்மை கொள்**
**மாதா மகிழ வருசற் புத்திர**
**மார்க்கமாய்ச் சித்தர் வழங்கு மொழியினும்**
**முதிர்விற் பழுத்த முதுபழ மொழியாய்ப்**
**பிதாவருள் கட்டளைப் பேறுடைத் தகைமை**
**பெறுதாச மார்க்கப் பெரியோர் மொழியினும்**
**உள்ளம் உடையான் உணர்த்தும் மொழியை**
**வாழ்சக மொழியாய் வழங்க வழங்கும்**
**குருவருள் பெற்றுக் குவலயத் தோர்எனச்**
**சகமார்க் கத்துறு தவச் மொழியினும்**
**அண்ட மதனி னின்றச ரீரியாய்த்**
**தெய்வந் திருவருள் செயுநல் லருள்மொழிப்**
**பேறு கொள்ளும் பெருந்தகை யாளராய்ச்**
**சன்மார்க்கம் பெறு சாது மொழியினும்**
**உலகா யதர்தம் உணர்விற் கெட்டா**
**மாறு பாடாய் வழக்கிற்கு அயலாம்**
**தன்மை யுடைதாய்ச் சரியை கிரியை**
**யோகியர் ஞானியர்க் குண்மை யுணர்த்தும்** (உ/ா சா௰௩)

உரை

இந்த நூற்பாவில் நான்கு மார்க்கங்களைப் பற்றியும், சரியை, கிரியை, யோகம் ஞானம் ஆகிய நிலைகளைப் பற்றியும், சித்தர் மொழி, பெரியோர் மொழி, தவசியர் மொழி, சாதுக்கள் மொழி ஆயனவற்றைப் பற்றிக் கூறுகின்றார்கள்.

ஆன்மாக்கள் ஞான ஒளிபெறும் பொருட்டு இயல்பாய் அமைந்த தமிழ் மொழியின் மிகுதியான விளக்கமாக அன்னை மகிழும் வண்ணம் வரும் மகன்மை முறை கொண்ட சற்புத்திர மார்க்க நெறியாய்ச் சித்தர்கள் வழங்கு மொழியினும், அறிவும் அனுபவமும் பெற்ற முதிர்ச்சியிற் பழுத்த முதுமொழியாம் பிதாவின் கட்டளைப்படி நடக்கும் பேரும் என்று பெரியோர்கள் சொல்லக் கூடிய தொண்டின் நிலையிலும் (தாச மார்க்கத்திலும்) உள்ளத்தில் நிலைபெற்று நின்ற தலைவராம் இறைவனர் குருவாக வந்து கருணை புரிந்த தன்மையை, வாழ்சக மொழியாய் வழங்கும் தவசியர் மொழியினும் அண்டமதனில் நிலைபெற்று உருத்தோன்ருமல் கூறிய அசரீரி மொழி யாகத் தெய்வம் திருவருள் பாலிக்கும் பேற்றினைப் பெறும் பெருந்தகையாளராய்ச் சன்மார்க்கத்தைக் பெற்ற சாதுக்கள் மொழியினும், உலகாயுத வாதிகளின் மனதிற்கு எட்டா உலக வழக்கிற்கு அயலாகிய தன்மையுடையதாய்ச் சரியை, கிரியை, யோகியர், ஞானியர் ஆகியோர்களுக்கு உண்மைநிலையினை யுணர்த்தும்.

சித்தர்கள் போற்றும் நெறி சற்புத்திர மார்க்கம், பெரியோர் போற்றும் நெறிதாச மார்க்கம், தவசியர் போற்றும் நெறிசக மார்க்கம், சாதுக்கள் போற்றும் நெறி சன்மார்க்கம் ஆகிய இந்த நான்கு நிலைகளையும், சரியைத் தொண்டர்க்கும், கிரியைப் பத்தர்க்கும், சாதனம் வல்ல யோகியர்க்கும், காட்சியிற் காணும் ஞானியர்க்கும் தீந்தமிழ் தெளிவாகவுணர்த்தும்.

**உணர்த்தி நல்வழி யுய்க்கும் நற்றமிழ்**
**மருட்சியின் விளைவுறு மந்த நிலையினும்**
**மந்தந் தரவரு மயக்க நிலையினும்**
**மயக்கந் தெளிய வருதீ விரத்தும்**
**தீவிரந் தரவரு தீர்க்க தெரிசன**
**நிலையினுங் காட்சி நிலைப்பெறத் தோன்றும்**
**பதம் நெடிதான பாதம் நிபாதமாய்**
**சத்திநி பாதந் தந்து விளங்கலில்**





**சென்றதும் நின்றதும் போவதும் புகுவதும்**
**ஆயபுராண ஆகம நூலுட்**
**பூர்வ உத்தரம் பொருந்தக் கொண்டு**
**பொய்யுணர் வுள்ளோர் பொய்எனப் புகல**
**ஊழியும் ஊழியின் உயரு மிலிங்கமும்**
**கண்டோர்க் குண்மை காட்டி நிற்கும்** (உ ஈசுஅ)
**(கனவு நனவு நினைவு நிகழ்வு. செல். இருப்பு. முடிவு. பிறப்பு)**

உரை

சித்தர்கள், பெரியோர்கள், தவசியர், சாதுக்கள் ஆகியோர்கள் போற்றியுரைத்த நான்கு நெறிமுறையினையும், நான்கு நிலையில் உள்ளவர்களுக்கும் உணர்த்தி நன்னெறியில் செலுத்தும் நற்றமிழானது, அறியாமையில் தோன்றும் மந்த நிலையிலும், மந்த தரம் தர வரும் உன்மத்த நிலையினும், மயக்கந் தெளியும் படி வரும் தீவிர நிலையிலும், மிகு தீவிரந்தர வருகின்ற தெரிசன நிலையினும், காட்சியானது நிலை பெறத் தோன்றும் படியான பதம் என்னும் நிலை நெடிதான பாதம்நிபாதமாய் சத்திநி பாதந் தந்து விளங்குதலினல், சென்ற காலத்தின் செயற்பாடும், நிகழ்கால நிலையும், வருங்கால வரையறையும், இனிமேற் கருவிற் புகும் நிலையும் ஆகிய புராண ஆகம நூலுட் கூறிய பூர்வ நிலையும், நிறைவு நிலையும், பொருந்துந் தன்மையை மேற் கொண்டு உண்மையுடையார் நடப்பவும், பொய்யுணர்வுடையார்பொய்யெனப் புகலவும், ஊழி ஊழியாய் உயரும் இலிங்கமானது காட்சியிற் கண்டுணர்ந்தார்க்கு உண்மையை உணர்த்தா நிற்கும்.

தமிழ் மொழி ஆன்மாவின் முந்திய நிலையினைப் புராணத்தானும், நிறைவு பெற்றச் சிவமாந் தன்மையினையொன்றும் நிலையினை ஆகமத்தாலும் உணர்த்தும்.

இந்த இருவகை நிலையினை மெய்யுணர்வுடையார் உண்மையெனக் கொள்வர் பொய்யுணர்வுடையார் மெய்யெனக் கொள்ளார்.

"அன்பர்க்கு மெய்யானை அல்லாதார்க் கல்லாத வேதியினை" என்னும் திருவாசக அடி மெய்யர் பொய்யர் இயல்பினையுணர்த்தும்.

**நிற்பன போன்று நில்லா தழியும்**
**ஐந்திற் புணர்புறும் ஆன்ம தத்துவம்**
**தீர்க்கை பெற்று மார்க்கம் என்னும்**
**வழிபா டெய்தி யழிவில் வித்தியா**

**தத்துவத் துண்மை தன்பா லுணர்ந்து**

**வசித்த நெடிதாம் வாசிப் புறுபதம்**

**சத்தி நிபாதமாம் தன்மை காட்சிப்**

**பொருட்பெறு நலத்தால் பொற் புடைத்தாகி**

**சிவதத் துவமாஞ் செம்மை பெற்றுத்**

**தமிழே சிவமாய்த் தழைவுற் றோங்கும்** (உ/TTசா௨௫)

**உரை**

இந்த நூற்பாவில் ஆன்மா தத்துவமாக விளங்கிய தமிழ் சிவ தத்துவமாக விளங்குவதனை விளக்குகின்றார்கள்.

நிலைத்து நிற்பனவற்றைப் போலத் தோன்றி நில்லாமல் அழிகின்ற ஐம்பூதக் கூறுபாட்டில் பொருத்திப் புணர்ந்து நிற்கும் ஆன்ம தத்துவமானது நான்கு வகையான தீர்க்கை பெற்று வழிபாடெய்தும் மேலாம் நிலையினை எய்தி, வித்தியா தத்துவத்தின் மெய்மை தன்பால் விளங்கி நிற்கும் தன்மையினையுணர்ந்து, வாசியின் நீங்காத இயக்கமாகிய நாத சக்தியின் ஒலி முழக்கம் எல்லாம் நிபாதமாய் அடங்கும் இயல்பினைப் பெறும் உயர்நிலையைக் காட்சிப் பொருளாகக் காணப் பெறும் பேற்றால் அழகுடையதாகி, அந்நிலையும் சிவத்துடன் கூடும் தன்மையால் சிவப்பேருகிய செம்மை பெற்று, தமிழே சிவமாகத் தழைத்தோங்கி நிற்கும்.

ஏறத்தாழ இருநூற்று அறுபதுக்கும் மேற்பட்ட நூற்பாக்களில் கூறிய பொருள்கள் அனைத்தையும் இந்த நூற்பாவினுல் நினைவு கொள்ளுமாறு செய்கின்றார்கள் பெருந்தகையார் அவர்கள்.

கலை வகையில் அணுவை அண்டமாக்கும் மகிமாவும், அண்டத்தை அணுவாக்கும் லகிமாவும், அவர்களிடம் இயல்பாய் அமைந்தனவாம்.

அந்த மாபெரும் ஆற்றலை நாமும் பெறவே இங்ஙனம் நூல்வகைகளை வகுத்தருளியிருக்கின்றார்கள். அவர்களின் தண்ணளிசார் சால்பு அத்தகையதாகிறது.

எம் ஐயன் சாத்தா மகான் அவர்கள் தமிழ் தழீஇய சாயலர் ஆவார்கள்.

ஆன்ம தத்துவம் இருபத்திநான்கின் விளக்கம் முன்னர் கூறப்பட்டுள்ளது.

ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும் ஐம்பெரும் பூதத்துள் அடங்கும்.

இந்த இருபத்து நான்கும் சமயதீர்க்கை நமசிவய என்னும் திருவைந்தெழுத்தால் பெறுகின்றது.

விசேட தீர்க்கை சிவயநம என்னும் சூக்கும பஞ்சாக்சரத்தால் பெறுகின்றது.





நிர்வாண தீர்க்கை திருவைந்தெழுத்தும். அதனுல் புடம் போட்டு எடுக்கப் பெற்ற ழ. ற. ஃ. ன. எ. ஒ என்னும் ஆறெழுத்தும் ஆடையாய் உள்ளே சுற்றப் பெறுவதால் பெறுகின்றது.

அமிழ்ந்து ஏகமாம் அபிடேக தீர்க்கை.

மயிர் பால் அம் என்று சொல்லக் கூடிய அமிழ்தத் துளி ரோமக்கால் தொறும் நிறைந்து பொலிவதால் அதன்கண் அமிழ்ந்து ஏகமாம் நிலையினைப் பெறுகிறது.

இவ்வாறு நான்கு வகை நிலையினும் தமிழ்த் தன் இயல்பு அமையப் பெற்று சிவத்துடன் ஒன்றி சிவமாந் தன்மையை யடைகின்றது.

இந்நிலையினை உணர்ந்த ஞானியர் தமிழ்சிவம் இனிமை எனுந்தனிச் சொல்லாம் என்று கூறியுள்ளனர்.

**முற்றும் ஈற்றுமாய் முற்படும் இக்கின்**

**உருவம் இக்கின் முளையிற் காண்க**

**இக்கின் ஒலியை இசைக்கும் உயிரினம்**

**க்ச். க்ச். என்னும் பல்லி**

**அதற்குப் புள்ளியென் றமையும் ஒரு பெயர் இத்துடன்**

**அருக்கனில். க்ச். ஆக விளங்க**

**அகத்தியம் முற்றிற் றுய் நிறைவுற்றது** (உ/TTசா௬௭)

**உரை**

முழுதும் நிறைவுமாய் முற்பட்டுத் தோன்றும் இக்காம் இந்தப் புள்ளி (○) உருவம் கரும்பின் கணுக்காலில் காண்க.

இக்கின் ஒலியை இசைக்கும் பிராணி பல்லியாகும். அதற்குப் புள்ளி என்னும் பெயரும் உண்டு. இத்துடன் சூரிய கலையாக விளங்கும் தமிழ் மொழியில் க்ச் என்னும் ஒலி விளங்கி நிறை அகத்தியம் முற்றிற்றுய் நிறைவுற்றது.

**அகத்தியன் வாதா வியைக்கவு அஞ்சத்தை யண்ட முட்டி**

**இகத்தி லிமிர்விந் தியத்தை யடக்கி எழிற்காவிரி**

**சகத்தின் விரிய அரிசித் தரியாய்ச் சமைந்தரனுட்**

**புகத்தன்கை யாற்பொதி கைகண்ட தின்னூற்புகன்றுளதே.**

(உ/TTசா௬௮)

**உரை**

அகத்தியர் வாதாவி என்ற அரக்கனையும், கவுஞ்சம் என்னும் இருட் குகை நிறைந்த மலையினையும், அண்டத்தை முட்டி வளர்ந்துள்ள விந்திய மலையினை ;ம்

அடக்கி, அழகுடைய காவிரி சகமாகிய தமிழகத்தில் காவும் சோலையும் விரிவுறும் வண்ணம் அடையவும், அமையாது நீண்டு செல்லும் அரியை. (திருமாலை) சித்தரியாகக் குறுகும்படி தம் கையால் பொதித்து, பொதிகை மலை கண்ட தன்மையினையும் இந்த அகத்தியம் ஆகிய நூல் புகன்றுளதாகும்.

**ஆறு முகன்அப்பா ராச னிவர்கட் ககத்தியமாய்க்**
**கூறுதெய் வத்தமிழ் சொன்னேன் பகைசூழ்வெங் கோளறுத்து**
**மாறு படாநிற்கச் சாத்தா மகான்மூல வர்க்கம்வந்த**
**வீறு புகழ்தேவ கோட்டைப் பதிவாழ் விரதியனே.** (உ/ΓΓகாமஅ)

**கலியுக ஸ்ரீ ருOஎசா ஆனந்த ஸ்ரீ வைகாசி மீ ங ௨**

**உரை**

வீரூர்ந்த புகழ் மேவும் தேவகோட்டைப் பதியில் என்றும் வாழ்கின்ற விரதியனும், திருமூலத் தேவர் மரபில் வந்துதித்த சாத்தா மகானுகிய யான் ஆறுமுகன், அப்பாராசன் ஆகிய இருவருக்கும் தெய்வத் தமிழின் கூறுபாட்டினையெல்லாம் அகத்தியம் என்னும் நூன்முறையாற் கூறினேன். இவர்கள் இருவரும் பகையை விளைவிக்கும் கோள்களின் வெம்மையை நீக்கி ஞான நிலையில் மாறுபடாமல் நிற்பார்களாக.

திருமுறைத் தொண்டும் திருப்பணித் தொண்டும் புரிகின்ற சிவபாத சேகரர்கள் நிறைந்துள்ள நாடாதலின் வீறுபுகழ் தேவகோட்டை பதி என்று கூறுகிருர்கள். அவர்கள் என்றும் இப்பதியில் வாழும் பேறு பெற்றவர்கள் ஆதலின் பதிவாழ் விரதியன் என்று கூறுகின்ருர்கள்.

குழந்தை மருத்துவத்தில் நாடறியப் புகழ் பெற்ற சாத்தாயி என்னும் அம்மையார் அவர்கள் மணி வயிற்றின் தோன்றியவர்களாதலானும், சிவ ஞானுபூதி செல்வம் பெற்றவர்களாதலானும், சாத்தா மகன் என்று கூறுகின்ருர்கள். தம்பால் அகத்தியம் பயின்ற ஆறுமுகன், அப்பாராசன் ஆகிய இருவரும் தம்மைப் போலவே கோள்களின் தீமையின் நீங்கி ஞானநிலையின் நிற்க வேண்டும் என்னும் கருணையால் மேற்கூறிய இருவரும் பகை சூழ் வெங்கோள் அறுத்து மாறுபடா நிற்க என்று கூறுகின்ருர்கள்.

தம்மையே தரூஉம் தகுதி சாத்தா மகன் அவர்களிடம் உண்டெனினும், அதனைப் பெறூஉம் தகுதி எம்மிடம் இலை ஆதல் நோக்கி மாறுபடா நிற்க என்று ககர நிறைவாகிய வியங்கோளிற் கூறுகின்ருர்கள். பெருந்தகையார் அவர்கள் எம்பாற் கொண்ட தண்ணளி நேயம் இதனாற்புலனும்.





ஈஸ்வர ஆண்டு ஆவணித்திங்கள் ஆறும் நாள் வெள்ளிக்கிழமை பகல் 1-15 மணியளவில் பஞ்சமி திதியும் ரேவதி மீனும் அமைந்த வேளையில் அகத்திய விளக்கம் என்னும் நூலின் படி எழுதி நிறைவுறுகின்றது.

திருமுறைச் செல்வர், நல்லாசிரியர்,
புலவர். க. அப்பாராசன்
அப்பர் அவைப் புலவர்
களிமேடு, தஞ்சாவூர்

## திருச்சிற்றம்பலம்



## அகத்திய மாமுனி தோத்திரப் பத்து
### திருச்சிற்றம்பலம்

அத்தனை அண்ட புவனத் தவரோ டரனுமையை
ஒத்த வொருவன்நீ சென்று சமஞ்செய்யென் றேதவந்த
முத்தமிழ் வேத முனியே சரணம் முரணரியைச்
சித்தரி யாக்கிச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (க)

வாதாபி நீசீர ணுபி யெனவயிற் றைத்தடவி
ஓதாவி போக அசுரர்செய் தீமை ஒழித்த சித்தாம்
போதா அகத்ய சரணஞ் சரணமுன் பொன்னடிக்கே
சீதா வரியைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (உ)

மாமாயை வல்ல கவுஞ்சா சுரனை மலையாகவே
யாமாறு செய்தயி லாற்பொடி யாகுநாள் அவ்வளவும்
நீமா றுதலின்றி நில்லென் றகத்திய நின்சரணம்
தேமா தவனைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (ந)

விண்டல முட்ட வளர்ந்து வழியடர் விந்தமலை
மண்டல மாக அழுந்தக் கரம் வைத்த மாதவனும்
தண்டமிழ் தந்த அகத்ய சரணம் சகடுதைத்த
திண்டிற லோனைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (ச)

அன்று கரகத் தடங்கிய கங்கை யதைச் சீண்டி
நின்று விரிகா விரியாகச் செய்தோன் நீசவுருவை
என்றும் உலகோர் வணங்க வணங்ககத் தீச்சரன்
சென்றுசேண் நீடோனைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே.(ரு)

மேலாம் அகத்திய மாமுனி யேசரண் வேதமொரு
நாலா னதையுங் கவர்ந்து செல் சோமுகனும் அசுரன்
வேலா வலயத் தொளிக்க அடல்செய்து மீட்டுதவச்
சேலா னவனைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (சா)

மிகப்பே ருருவாம் விருத்திர னைக்கொல்ல வேண்டுமதற்
ககத்திய நீயரு ளென்னக் கடலைய தாய்க்கடலைப்
புகத்தன் அகங்கையிற் கொண்ட வகத்ய புனிதசரண்
செகத்தையுண் டானைச் சிவமாய் பொதிகைசெய் தேசிகனே. (எ)





மலையைக் கடலை யுணவாம் அசுரனை மாமுனியாய்
நிலையிற் குறுக அடக்கு குறுமுனி நின்றுள் சரண்
அலைவா யமுதைச் சுரர்க் கீந்து மாற்றார்க் கமுதவுருச்
சிலையாய்நின் றனைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (அ)

நீதரன் பாக வணங்கக்கல் லாலின் நிழற்கீழிருந்
தோதரன் உள்ளங் களிகூர் அகத்திய வுன்சரணம்
மூதரன் மூன்றைச் சிரித்தெரித் தோன்வில் முகத்திலம்பாம்
சீதரன் றனைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (கூ)

கரிச தறச்செய் தமிழ்முனி யேநின் கழல் சரணம்
அரிசெயும் பூசை மலரொன்று கூடிலொ ராயிரமாம்
வரிசையிற் கண்மல ராலருச்சிக்க வரன்றருசு
தெரிசனத் தானைச் சிவமாய்ப் பொதிகைசெய் தேசிகனே. (ம)

அகத்தீச னுர்புகழ் ஆரணமாக அமைந்த பத்தும்
மிகத்தேசு பெற்றுக் கலைகளெல் லாமும் விளக்கமுறச்
சகத்தோர் களுக்குத் தமிழ்வேத நாவலன் சண்முகனை
மிகத்தோத் தரித்துத் துதித்தருள் கூடவிளம்பியதே (மக)

திருச்சிற்றம்பலம்

ஓம். பசுபதீச்சுர சமானனுயை நம.
ஓம். வாதாபி சீரணுயை நம.
ஓம். கவுஞ்சகிரி காரணுயை நம.
ஓம். விந்தியகிரி பந்தனுயை நம.
ஓம். காவிரி விரி கரத்தாயை நம.
ஓம். அகத்தியேச் சுராயை நம.
ஓம். சமுத்திர ஆசமனீ யாயை நம.
ஓம். குறுமுனீச் சுராயை நம.
ஓம். ஈச்சுரற் கினியாயை நம.
ஓம். சுத்த வித்யா கலாயை நம.

கும்ப முனீச்சுரன் மங்கல நாமம்
சிந்தனை செய்யத் திருவருள் ஓங்கும்

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

## கும்பக் குறுமுனி மந்திரச் சக்கர அமைப்பு

குத்துச் சதுரங் குறுக்குநீள் கோடுகள்
ஒத்துமுக் கோடுநான் கோர்புறம் நீளூறும்
பத்தும் இரண்டிற் பதிய வயநத்தின்
மத்தியந் தன்னின் மலயம் சிமையமே

மலயஞ் சிமையத்தின் வாழும் அகத்ய
னிலயமாஞ் சக்கரம் நீளும்ஓம் காரத்
திலயத் தடங்க விவைவய நமசி
யலசி வயநம வாக வருமே

வயந மசிசி வயநம ஓம் ஓம்
செய அகத்தீச சிவஅக என்ன
நியமமாம் மந்திரம் ஞேயங் கொளனன்
கியம்பிடச் சித்துக்கள் எல்லாம் வருமே.

## கும்பக் குறுமுனி மந்திரச் சக்கரம்





உ
சிவமயம்
அரி ஓம் நன்ருக குரு வாழ்க குருவே துணை

## திருஞான சம்பந்தர் திருஅவதாரச் சிறப்பு

| | | | | |
|---|---|---|---|---|
| திருஞான | சம்பந்தர் | திருஅவ | தாரச் | |
| சிறப்பின் | விளக்கம் | செப்புகின்றோம் | | (க) |
| ஆன்ம | நாயகன் | அமைத்த | நியதியின் | |
| இருவினை | விலங்கை | இட்டு | உடலச் | |
| சட்டையை | மாட்டி | விட்டு | உயிர்க்கணம் | |
| சிறைப்பட | வருத்தம் | செய்யும் | இயற்கையைக் | |
| கண்டு | திருவுளம் | கனிந்து | உயிர்ச்சிறை | |
| மீட்க | மானிட | மேனி | கொண்டு | |
| தேவ | தேவனின் | திருவருட் | குருவாய் | |
| விளங்கும் | முருகன் | இம்மேதினி | வந்தார் | (உ) |
| அவரைத் | | | | |
| தேவ | தேவனின் | திருக்கும | ரன்ஆம் | |
| என்பது | அறியாது | எமது | மகவுஎன | |
| மோய்சேய் | ஆக | முறைகொண் | டாடினர் | (௩) |
| அப்போது | | | | |
| இன்னிசைக் | குயிலின் | இளஞ்சிறு | குஞ்சைத் | |
| தன்குஞ்சு | என்ப | தாக | நினைத்து | |
| காக்கை | செய்யும் | காக்கைப் | பறவையை | |
| அயலது | வாக்கி | அழைத்துச் | செல்லும் | |
| கோகிலம் | போல்உமை | குளக்கரை | யதனில் | |
| தோன்றிக் | கண்ணீர் | துடைத்து | அழுகையை | |
| மாற்றிப் | பொற்சிறு | வன்னம் | அதனில் | |
| சிவஞானம் | தரும்திரு | முலைப்பால் | அமுது | |
| அளித்து | உண்பித்து | அம்மையும் | அப்பனும் | |
| குழந்தை | உரிமை | கொண்டு | காட்டினர் | (௪) |
| இந்த | உண்மையைத் | தந்தை | என்னும் | |
| அந்தணர் | அறியாது | அதட்டி | மிலாறுகொண்டு | |

உ
சிவமயம்

ஓச்சிப் பிரம புரீசா உனக்குப்
பால்யார் தந்தது அப்பாலெ யேன்உண்டாய்
அவர்களைக் காட்டென அஹஹா அஹஹா
தோளன அவர்களைச் சுட்டிக் காட்டித்
தோடுடை யசெவி யன்விடை யேறி
என்று தொடங்கும் இசையினில் இவனே
பிரம புரீசப் பெயருடைப் பெம்மான்
என்று சுட்டி யான்அன் றேஎன
மொழிந்துஅத் தந்தையின் முகத்தை நோக்கிச்
சைவம் சிவனுடன் சம்பந்தம் ஆவது
அவ்விதச் சம்பந்தம் ஆவதோர் நெறிமனம்
வைத்துணர் ஞானம் அதனல் வாய்க்கும்
அவ்விதம் ஆக அமைந்து வந்த
ஞானசம் பந்தன் நான்எனு மாறு
நனிபள் ளியினில் ஞானம் நல்கித்
தன்னுடன் காழியிற் சம்பந்தம் ஆக்க
ஞானசம் பந்தன் ஆகிப் பாலெ
நெய்தல் பாடி நின்ற பெருந்தகை
திருக்கோ லக்கா சென்றுதன் கையால்
ஒற்றறுத்து இன்னிசை ஓதுதல் கண்டு
கைவருந்தும் எனக் கருதி இரங்கிப்
பொன்னின் நற்றுளம் பொருந்த அளித்தார் (ரு)

பின்னர்,

சிற்றடி வருந்தத் திருவரத் துறைக்கு
நடத்தல் கண்டு நன்முகத் தால்ஆன
சிவிகையும் குடையும் சின்னமும் அளித்தார் (சா)

பட்டிச் சுரத்திற்குப் பகலவன் கிரணம்
படச்செல முத்துப் பந்தர் அளித்தார் (எ)

இவையெலாம்



உ
சிவமயம்

தன்னுடன் வேறலாத் தன்மை வாய்ந்த
சிவசுடர் உருவாய்த் திகழ்தரும் ஒருபொருள்
மண்ணுயிர்க் கணங்கட்கு இன்னருள் புரிய
வலிதே உலகின் மானிட உருவம்
எடுத்தது தகுதியோ இதுஅவம் ஆங்கு
தரித்திடல் அவமாய்த் தரிக்கும் அவதரம்
என்று தரியாது இறைவன் அவ்வுலகச்
சிறப்பை மண்ணுலகில் திகழச் செய்தது ஆம் (அ)

ஆகையால்,

தெய்வக் குழந்தை திருஞான சம்பந்தர் (கூ)

அவர்இங் குற்ற அதுவே அவதரம் (ய)

இருவினைப் பற்றுக்கோடு இல்லா ஒருவர்
அவமாய்த் தரித்தலே அவதாரம் ஆகும் (யக)

அவர்க்கு அவ்வுலகம் அதனில் இருந்தே
சீரும் சிறப்பும் செவ்விதின் இங்குறும் (யஉ)

முதற்பொருள் அவர்கள் முன்னே நிற்கும் (யங)

குழவி பேசும் மழலை வாய்மொழி
முத்தமிழ் வேதமாய் முழக்கம் காட்டும் (யச)

இத்தரை மீதில் இதற்கு இலக்கியமாய்
வந்தவர் ஞானசம் பந்தரே யாகும் (யரு)

ஆகையால்

சைவமுதற் குருசம் பந்தரே யென்று
வந்தித்து அவர்அடி வாழ்த்தி வணங்குவோம் (யசா)

ஓம் ஞானசம்பந்தாய நம
திருஞானசம்பந்தர் திருவடி
வாழ்க

வாழ்க வாழ்க

அரி ஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை

**திருஞான சம்பந்தப் பெருமான் அருளிச் செய்த**

**இரண்டாம் திருமுறை மூன்றும் திருமுறை பொருள் விளக்கம்.**

## பூர்வமீமாம்சை உத்தர மீமாம்சை

**நூல் ஆசிரியர் சித.வே. ஷண்முகநாதபிள்ளை அவர்கள்**

## பூர்வமீமாம்சை

**திருச்சிற்றம்பலம்**

திருநெறி யதமிழ்த் திருமுறை யொன்றே
சிகார நடுவனைத் தீயெழுந் தடரலால்
புண்ணிய சாந்தம் என்னும் இரண்டாய்
பூதியம் ஆன போலத் திருமுறை
ஒன்றே இரண்டாய் நின்று விளங்கும். (க)

விளங்கி நின்று விரிவுற் றடர்ந்த
நான்மறை முடியின் நடுவாய்த் துலங்கி
யோங்கி விளங்கு முருத்தி ராகாரம் (உ)

உருத்திரா காரத் துயர்ந்த சிகாரத்
தீயால் அனைத்துந் திருநீ ருகும் (௩)

அனைத்தும் திருநீ ருன நலத்தால்
ஆவளி மந்திர மாகித் தோன்றும் (௪)

தோன்ரு நின்ற சொன்மலர் நால்வகைத்
தாகி முதல்வர் கருத்தனை புரியும்
மந்திர புட்ப மாமல ராகும் (ரு)

ஆகும் மந்திர அருச்சனை மலரால்
வேதனம் நீங்கி நிவேதம் ஆகும் (௬)

நிவேதனம் கண்டு நிலைபெறு திட்டிப்
பானதால் திருமஞ் சனமா மமிதம் (எ)





அமிதம் துளிக்கும் அலர்மிக நெருங்கி
அலங்க லாம்அலங் காரம் சுருக்கை (அ)

சுருக்கை யாகச் சுருங்கி நிலைகொள்
மாமலர்ப் பிணையலால் மனக்கண் ரேன்றும்
தோற்றம் திரம்பெறு தோத்திரம் அமையும் (௯)

தோத்திரம் அமைவு துலங்கு நிலையில்
மெய்மணங் கமழும் குய்யென விளங்கச்
சுடரொளித் தரிசனச் சோதி காணும் (௰)

காணற் கரிய தான திருமுறை
விளக்க மதன்மிசை மீமிசை யாகப்
பூருவத்தின் நேருறத் தோன்ற லால்
பூர்வமீ மாம்சமாய்ப் புகலப் பெறூஉம்இது (௰௧)

### பண் : இந்தளம்

இந்தளம் சொன்மலர் என்னக் கட்டளை
நால்வகைத் தாகியாழ் நாலுங் கைக்கிளை
தழுவும் ஒலியாஞ் சார்பு பெற்றுத்
சதுரிய வித்யா தரார்க ளுல்வரும்
அருத்தனை நாம ஆவளித் தொகையும்
மலர்தனை கொண்ட வடிவும் பெற்று
வேத பூர்வ மீமிசை தோன்றும்
அக்கர மாக அமையும் ஓம்நம. (௰௨)

தோடியை பாகத் தொடுக்குஞ் சதுரிய
வித்யா தரராய் விளம்பு நால்வரும்
நமது வாக்கில் நவில்வன எல்லாம்
மந்திர மாக வாக்கும் கவச
மந்திரங் கொண்டு வழுத்தும் சொன்மலர்
கோட்டுப் பூவுங் கொடிப்பூ நீர்ப்பூ
புதற்பூ என்னப் புகலும் மருதம்
முல்லை நெய்தல் கல்மலர் குறிஞ்சி
என்னும் நால்வகை யிசையிந் தளமாய்
அகத்தியன் றந்த தநுமன் பயின்ற

| | | | | |
|---|---|---|---|---|
| தான | நற்றமிழ் | ஆதி | சேடன் | |
| ஆயிர | முகத்தால் | ஆரிய | மாக | |
| மொழிய | வமித | முதவு | கருடன் | |
| தீரா | விடத்தைத் | தீர்திர | விடமஃ | |
| தாய | விரண்டாம் | அருத்தம் | இணைந்த | |
| அருத்தனை | என்னும் | அருச்சனை | மலராம் | (௰௨) |
| அதுவே, | | | | |
| ஒத்த | யாழிசை | முற்பாச் | செய்யுள் | |
| முடியணி | மாலையாம் | கடிமல | ராகவும் | (௰௩) |
| ஒத்த | யாழிசை | வஞ்சி | வெண்கவி | |
| யராகம் | தொடையா | யமைமல | ராகவும் | (௰௫) |
| ஆசி | ரியவொத் | தாழிசைச் | செய்யுள் | |
| ஆர | மாக | அணிமல | ராகவும் | (௰௬) |
| நிரையசை | வஞ்சி | யராகவொத் | தாழிசை | |
| வெண்கவி | வண்ண | மலர்த்தொடை | யாகவும் | (௰௭) |
| இயற்சீர் | வஞ்சி | இயற்சீர் | விகற்பம் | |
| கூனல் | யாப்புக் | கொள்மாலை | யாகவும் | (௰௮) |
| ஒத்த | யாழிசை | யுற்ற | கவிதை | |
| கண்ணி | என்னுங் | கடிமல | ராகவும் | |
| தளைபடு | மாமலர்த் | தாமம் | ஆகும் | (௰௯) |

**பண் : சீகாமரம்**

| | | | | |
|---|---|---|---|---|
| சீகா | மரம்எனும் | சிறப்பு | மிகும்பண் | |
| காய்தல் | காய்வமர் | கதிர்மதி | என்ன | |
| கட்டளை | இரண்டு | காண | வமிதமாய்த் | |
| துத்தவொத் | தாழிசை | துலங்கு | மொலியிற் | |
| வாழ்விற் | சந்தமும் | மலர்வும் | துலங்கும் | |
| கமல | வசந்தம் | காணப் | பொலியும் | |
| உருவுடை | வேதன | தோதிமம் | கலியிக | |
| வசந்த | மாகிய | வாழ்வு | பெற்று | |
| நிவேதன | மாக | நிகழு | நிலையில் | |
| மசியெனும் | அக்கரம் | அமைந்து | நிற்கும் | (௨௰) |





| | | | | |
|---|---|---|---|---|
| வெங்கதி | ருந்த | விரியும் | உந்திக் | |
| கமலம் | அதனிற் | கண்டுயில் | கொள்ள | |
| தலைந்து | திரியும் | ஹம்ஸம் | ஸோஹம் | |
| உற்றுவத் | தானத் | தொடுங்க | ஆறு | |
| பதங்கண் | டளவு | படுமோ | தனமடை | |
| பள்ளி | யிற்கண் | பாடு | கொள்ளும் | |
| நிலையிற் | படிந்து | நின்மல | மாகி | |
| மேன்முக | முற்று | விளங்கி | யருக்கன் | |
| மண்டலத் | துள்நடு | வாகு | மருக்கயம் | |
| கொண்டு | மதிமுகங் | கண்டு | குளிர்ந்த | |
| அமிர்தம் | பாத்தய | மாக | மலர்சீர் | |
| காமர | மாய்ச்சா | காவுரம் | என்னும் | |
| சகோரம் | கலியைத் | தணந்து | வேதனம் | |
| தீர்ந்து | நிவேதனச் | செயற்பா | டுளதாம் | |
| பெறல்சதப் | பேறு | பெற்றுத் | துலங்கும் | (௨௰௧) |

**பண் : காந்தாரம்**

| | | | | |
|---|---|---|---|---|
| காவுந் | தாருமாங் | காந்தா | ரப்பண் | |
| வெம்மை | யொருபுறம் | விளங்க | பசுமை | |
| படரும் | மாது | பாதியன் | நேர்மை | |
| குறிக்கும் | செந்நிறம் | கொண்ட | கட்டளை | |
| அமையத் | துத்தம் | அஃது | இனிகொளும் | |
| ஒலியிற் | கலைநிறை | யுவாவும் | சந்திரிகை | |
| ஒளிபட | ருருவும் | ஓர்நிலை | கொள்ளும் | |
| இயல்பும் | நீர்சொரிந் | திடவுன் | னதமாய் | |
| நிலைபெறு | தொழிலும் | நிகழ | வுருத்திர | |
| சமகமாய்த் | தோன்றுந் | தாவன | முத்திரை | (௨௰௨) |
| அடியிற் | ருழ்த | லுறுமடி | யார்க்கு | |
| தண்ணிழல் | நறுநிழல் | தந்தும் | அணுகா | |
| தார்கள் | வெம்மை | யழலின் | வருந்தும் | |
| இயற்கை | யளித்தும் | என்றும் | உள்ள | |
| தருவென | வமைவுறு | தரும | தேவதையாய் | |

| | | | | |
|---|---|---|---|---|
| தீயினும் | வெம்மை | புனலினுந் | தன்மை | |
| அளிக்கும் | ஒருவ | ருகி | நாவால் | |
| ஏத்து | வார்தம் | இடர்கடிந் | தென்றும் | |
| தண்ணளி | சுரக்குஞ் | சந்திரிகை | யென | |
| அருள்பா | லித்து | அனைவருந் | தன்பா | |
| லடைய | ஒருநிலை | யாக | நின்று | |
| அஞ்ச | லகற்றி | மஞ்சன | முவந்து | |
| சக்கரா | காரம் | தானது | வாக | |
| அருள்பெறத் | திட்டிப் | பமைந்து | தோன்றும் | (௨௰௩) |

## பண் : பூயேய்ந்த காந்தாரம்

| | | | | |
|---|---|---|---|---|
| பூயேய்ந் | தழகு | பொலிகாந் | தாரம் | |
| திரநிலை | கொளுங்குறிச் | சீராற் | செவ்வழிப் | |
| பாலேய்ப் | பாகப் | பதிந்து | சங்கர | |
| நாரண | ருகிய | காரணன் | என்ன | |
| இரண்டொன் | ருக | இயைகட் | டளையும் | |
| தாரம் | விளரி | தழுவு | கைக்கிளை | |
| ஒலியும் | எழிற்கலை | யுருவலங் | காரமும் | |
| எழுந்தருள் | சந்நிதா | னமுத்தி | ரையுமாம் | (௨௰௪) |
| நிலைபெறும் | ஒன்றி | னின்று | தோன்றிப் | |
| பெயர்ந்து | பலபல | பேதம் | எய்தி | |
| பாசமாம் | நாராற் | பந்திப் | புற்ற | |
| நாரண | ருகி | நன்னிலை | யெய்தச் | |
| சுமன | ருயை | தூய்மை | பொருந்தித் | |
| தொடுத் | தியாத்தத் | தொடையல் | மாலே | |
| யலங்க | லார | மாமலங் | காரந் | |
| தானே | யவனுய்ச் | சார்ந்து | பூவள | |
| ராக | மாக | வரனிடம் | பொருந்தித் | |
| தமிழா | ராயுஞ் | சங்க | அரனுய்ச் | |
| சபையின் | இனிதெழுந் | தருளி | யிருந்து | |
| எழில்தரு | காட்சி | இயைய | நல்கும் | (௨௰௫) |





## பண் : நட்டராகம்

| | | | | |
|---|---|---|---|---|
| கட்டித் | தழுவி | கலந்துரை | யாடும் | |
| இயற்சீர் | நட்ட | இராகப் | பெயர்ப்பண் | |
| கண்ணேக் | கருத்தைக் | கவரும் | எழிலாற் | |
| பிச்ச | தேற்றும் | பிச்சா | டனனுய்க் | |
| கட்டளை | இரண்டு | காண | இதயம் | |
| தொட்டெழும் | ஓசை | துலங்க | வாழ்த்துக் | |
| கூறும் | கலைஎழில் | கொண்ட | வுருவொரு | |
| ஏற்க | இடும்சந் | திரோதன | முத்திரை | |
| ஆய | விவைகள் | அமைய | நிற்கும் | (௨௰௬) |
| மணமல | ரென்ன | மனமலர் | வுற்றுக் | |
| கட்டுட் | பட்ட | கடிமல | ராகி | |
| எழில்தரு | நிலையில் | ஏரிட் | டிடுகண் | |
| நோக்கிற் | கருத்தின் | நுழைந் | தகலாத | |
| திரம்பெறு | நற்றேத் | திரமது | தோன்றச் | |
| சுற்றிச் | சுழன்று | தொடரும் | பிச்சா | |
| டனனுய் | இல்தொறும் | அமுத | மேற்றுத் | |
| திரியத் | திரிகள் | திரிய | வெற்ரும் | |
| விளரிப் | பாலியை | வெய்தி | விளரியாய் | |
| நடைகொளத் | தோன்றும் | நாயக | னுகும் | (௨௰௭) |
| தருநிழல் | வைகுந் | தனிச் | சிறப்புடைய | |
| ஒருவ | னென்ன | வருகட் | டளையும் | |
| உழையுந் | துத்தமும் | ஒத்த | கைக்கிளை | |
| ஓசையும் | உயிர்க்கலை | உருவும் | அவர்க்கும் | |
| உண்டெனக் | காட்சி | உதவும் | தொழிலும் | |
| காண | நிற்கும் | தேனு | முத்திரை | (௨௰௮) |

## பண் : செவ்வழி

| | | | | |
|---|---|---|---|---|
| காயுங் | கனியும் | மாயிரு | மருங்கும் | |
| கவின்மிகச் | சோலை | கனிந்து | நெருங்க | |
| நடைகொளும் | நடுவி | னறும்பூ | சிந்தச் | |
| செல்வழி | யென்னச் | செவ்வழி | தோன்றலாற் | |
| செவ்வழிப் | பண்ணெனச் | செப்பப் | பெற்றது. | (௨௰௯) |

உ
சிவமயம்

காய்கனி மலரஃ தாய்செவ் வழியும்
செவ்வழிப் பாலேய் திறமும் இவ்வைந்தாம்
ஐந்திரம் இன்திரம் ஆக நுகரும்
வாசவ னென்னப் பூசனைக் குரிய
துாபம் பரவித் துலங்கக் காயும்
தழலும் அந்தத் தழலிற் கனியும்
மணமும் மணத்தின் மலரும் முளரி
யன்ன சுடரொளி யானதும் அகத்தில்
மாருத மருதம் ஆகச் சாதித்து
இரவி மதிசுடர் எனும்ஒளி கண்டு
தரிசித் துளநற் றவத்தோர் தன்னலாத
அவர்க்கும் உண்டென அருள்பா லிக்கும்
யோகச் சரியியை புற்ற கிரியையாய்த்
தேன றென்ன வானவர் தோன்றச்
சிரத்திற் கைக்கிளை சேரத் தூப
தீப தரிசனஞ் செய்யு மமைவாய்ப்
பூர்வ மீமிசைப் பொருள் நிறைவுற்றது (௩௰)

## உத்தரமீமாம்சை

பூவுரு வத்திற் பூத்தெழும் முளரி
கால்கொடு நிமிர்ந்து கதிர்மதி ரண்டும்
உத்த ரத்தில் ஒன்று படலால்
கலிதீர்ந் திடுலயங் கண்டு புண்ணிய
அசனம் செயும் உத்தர மீமாம்சை (௧)
புண்ணிய வசனம் புரியும் நலத்தால்
ஐந்தரு நிழ லமைரா பதியான்
தேவா மிர்தமும் தெய்வப் பசுவின்
அமித மான ஐந்தும் நல்கலால்
அடர்ந்தெழும் வன்னி யமைவு பெற்று
பெருஞ்சாந் தியதாம் பேறு நல்கும் (௨)
பெருஞ்சாந் தியதாம் பேறு பெற்றதால்
ஆக மியாகம் ஆக வமைந்து



உ
சிவமயம்

தென்புலத் தோரெலாம் தேவராய்ப் பிரமமாய்ப்
பாரிடர் நீங்கிப் பதம்பெறக் காலன்
கோடி யாகக் கொடுத்து நிற்பன் (௩)
நின்ற நிலையி னின்று காலங்
கோடி விரிந்து குவியப் பெற்ற
நலனுற் றுள்ள நாட்டங் கண்டதால்
வலிமை எளிமையாய் வாய்க்கப் பெற்று
ஏற்றங் காணும் இயல்பு கிட்டும் (௪)
கிட்டா தென்ன எட்ட நின்ற
அந்தர வாகனத் தமுதம் கும்ப
அகத்துட் பூரித மாகிச் சொரியும்
துளியால் வெம்மை துடைத்துக் குளிர்ச்சி
பெறற்கமை வான பேறு நல்கும் (௫)
பெறற்கமை வான பேறு பெற்றதால்
தாரியி னடந்து சாதா ரணமாகத்
திரியும் காற்றிரம் தீர்க்க மாக
அகத்திற் ருரக மாகச் செய்ய
அதுவே மந்திர மாக வமைந்து
தாரக மந்திரச் சமைவு பெற்று
அடிபெயர்ந் தடர்ந்து அலைந்து நடைகொள்
தன்மை தவிர்ந்து தாரை யகமாய்ப்
பெயராப் பற்றுய் நிறைவு கொள்ளும் (௬)
நிறைவு கொள்ளும் நிலையிற் சுடுவெம்
பாலை யாயது பழம்பஞ் சுரமாய்க்
குளிர்ந்து நேயங் கொள்ள நிற்கும் (௭)
நேயங் கொள்ள நிற்கும் மந்திரம்
அகத்தினி லைகொள் ளமைவு போலப்
புறத்தும் அந்நீர்மை பொருந்தும் வண்ணம்
வரைய இயந்திர மாகி யதனில்
ஈசத் துவம்வந் தியையப் பெற்றுச்
சித்து விளங்கும் செய்கை காட்டும். (௮)

பூவுரு வத்திற் பூத்துக் கால்கொடு
நிமிர்ந்த முளரி நீணிலை கொண்டு
புண்ணிய வசனம் புரிந்து அவிர்ப்பவம்
ஐந்தும் கொண்டு எதாற்பெருஞ் சாந்தி
பெற்றுள் எதனற் பிரம கற்பமுங்
காணும் வாழ்நாள் கைவரப் பெற்று
வலிமை யெளிமையாய் வாய்க்கு நலமும்
அமுத பூரக மாங்கும் பகமும்
அமுத சந்திர கலாதா ரகமும்
மந்திர சித்தியும் வாய்க்கப் பெற்றதால் (கூ)
கலிமெலி வுற்றுக் காணுங் குறுங்கலி
யாக வமையவும் அம்தாளின் குறிச்
சீருற் றவர்க்குத் தெய்வ நலந்தரும்
மூர்த்தி கரமுமாய் முடிவில் லாத
வாழ்வும் சித்தும் வளரவும் வழங்கவும்
செய்யும் வசித்துவம் சிறந்து விளங்கும் (ம)

**பண் : காந்தாரபஞ்சமம்**

பண்காந் தார பஞ்சமம் வேள்வி
வேந்தனும் வேள்வியும் வேள்வி இட்டியும்
எனக்கட் டளைமூன் றியையப் பெற்று
உழைஇளி துத்தம் ஒத்த வொலியில்
கோளகை யாய நீலாம் பரியும்
காவுந் தாரும் ஆய வருவும்
ஏகிய தனிமையின் இயையுந் தொழிலும்
அமைய வசியாம் அக்கரம் நிற்கும் (மக)
ஐந்தரு நீழ லமரா பதியான்
வேள்வி வேந்தாய் விளங்கி நிற்றலால்
கடந்து கரந்து கடலின் மறைந்த
தேவ லோகச் செம்பொருள் எல்லாம்
அகத்தின் நுகர்பொரு ளாக அணிமையின்
ஆக்கந் தருமா றமைந்து நின்றன (மஉ)





ஆவிற் பவிக்கும் ஐந்துங் காம
தேனு என்னும் தெய்வப் பசுவே
புனிதம் ஓங்கப் புரிந்தளித் திட்டது (92)
ஆக்கமும் புனிதமும் அமைந்த தெய்வீக
மகிமை தனதாய் வாய்க்கப் பெற்றதால்
கடஅக் கினியாய்க் கனன்றெழு செந்தீ
நீரி னின்று நிமிர்ந்தெழு கமல
அக்கினி யாயக் கரஅகத் தினின்று
சுழன்று நெற்றியைத் தொட்டுக் கண்ணுல்
வருந்தீங் கனைத்தையும் மாற்ற நின்றன (மச)
அரசா லத்திய லமைந்த அக்கினி
சமித்த தாற்பெருஞ் சாந்தி யெய்தப்
பூரண கும்பம் பூரித் திடலால்
புண்ணிய அசனம் பொருந்தப் பெற்றது. (மரு)

**பண் : கொல்லி**

கொல்லிப் பெயர்ப்பண் கூற்றும் அன்னுன்
ஏவலர் குழாஅம் என்னக் கட்டளை
நான்காய்க் குரல்விளம் ஓங்கும் ஒலியின்
உரப்பலும் நீங்கி ஒத்தாழிசை பெற
எய்யா தணைமெய் இன்னல் தீர்ந்து
ஆகம் இயாகம் ஆகப் பவர்க்கம்
அற்றச் சுவர்க்கம் அடைந்து அழியாக்
காயம் பெற்றுக் காலம் கோடி
கண்டனைத் திற்கும் கரியாய் நிற்கும்
நற்பதம் தந்தெமன் நம்மவ ருகித்
தென்றிசைக் கிழவன் நிதற நிற்கச்
சிவய வசினனுந் திருவெழுத் திலங்கும் (மசா)
விதியாய் விஜனவாய் விரிதல் செய்யும்
பாசம் உபஅதம் பண்ணும் இயலால்
செம்பா லேய்நேர் சீரும் குறித்து
நவிலும் வளமும் நாடிக் கைவரப்

உ
சிவமயம்

பெற்றுக் கொல்லியாம் பேருறு வோனும்
நல்ல வஞகி நால்வகை யுயிரும்
கற்ப கோடி காலங் காணும்
ஆயு ளுடைய யாக்கை நல்கி
சர்வ லோக சாட்சி யாகி
என்றும் விளங்கும் இயற்கை யமைய
தூலங் காரணஞ் சூக்குமத் தடங்கிச்
சமாதி நிலையைச் சமனளித் திடுவன்
செல்லல் தீர்ந்து திகழும் நிலையாம்
இரவு பகலற் றிருக்கும் இடத்தைத்
தனதாய்க் கொள்ளும் தன்மை யதனல்
காலக் கணக்கை காலன் தவிர்க்க
கற்ப சித்திக் கைவரக் காணும்
தருமனுங் காலனுங் சமாதியுங் கற்ப
சித்தியும் அளிக்கும் செய்கை யதனல்
மறுமையில் நரக வாதனை யுண்டதை
இம்மையிற் காண்க எனப்பல வான
நோயைத் தந்தத னுண்ணலி வைந்தரும்
தூதுவன் செய்யும் தொழிலும் அற்றிடும்
படருறச் செய்யம படரெனுங் கிங்கரன்
செய்கையும் அற்றுச் சிறப்புற வமையும் (மஎ)

## பண் : கௌசிகம்

கௌசிகம் என்னும் கலிக்கோ வைப்பண்
வலிமை எளிமையாய் வாய்க்கச் செயல்படும்
நிருதர் என்ன நிலையிரன் டொன்ரும்
கட்டளை பெற்றுக் கவின்குரல் விளரி
உழைஇளி ஓசையில் ஒத்து நிற்க
வலிமை எளிமையாய் மாறுங் கலையும்
விரிந்து சுருங்கி மேவும் உருவும்
மாலகு வாம்லகு மாவும் அமைய
வசியசிவ எனும் அக்கரம் நிற்கும் (மஅ)



உ
சிவமயம்

பூவென வூதும் பூதா காரம்
அற்று நிர்ஊத லாகும் வாகு
பெற்றுப் பூத பிரேதம் வேதையை
ஆளும் வேதாளம் ஆம்இயல் தீர்ந்து
பூவினும் அதிகமாம் பூதிகம் என்ன
மென்மையில் வன்மை மிகுதி பெற்று
அதிசயம் புரியும் ஆற்ற லுளதாய்
ஊத றவித்த நிர்ஊதலாம் நிருதர்க்
கேவல் புரிந்து எல்லா நலமும்
எளிதிற் கைவர இயற்றல் செய்து
காயம் ஆகாய கவனம் செல்லும்
மாலகு வாம்லகி மாவும் சித்தியாம் (மசு)

## பண் : பஞ்சமம்

பஞ்சமம் என்னும் அஞ்சும் ஒருமையிற்
பன்மை கொண்ட பாங்காய் உயிர்கட்
அமிர்த மாக அண்டத் திருந்து
வரும்நன் ருகிய வருணன் என்னக்
கட்டளை ஒன்றுயக் காணக் கட்டல்
யாழ்ஒத் தாழிசை யமையும் ஒலியும்
பெறற்கமை வாக பேசுங் கலையும்
அமிர்த பூரித மாகிய வுருவும்
வரவேற் பளித்து மகிழ்ந் தொழிலுமாய்
யவசி வயவெனும் அக்கரம் நிற்கும் (உம)

பஞ்சமம் ஆகிப் பரந்து நின்று
அனைத்தும் தன்னுள் எண்ட அடக்கி
எங்குந் தானய் நின்ற பெருவெளி
யாய பேரண்டத் தமைந்து நின்ற
அமுத மயமாம் ஆகாய கங்கை
கும்பக பூரிதம் கொண்டந் தண்மை
நல்கி நாடியி னடைகொண் டோர்கள்
சலன மின்றிய தானத் திருக்கும்
அமைவு பெற்றகினி தான வையான

| | | | | |
|---|---|---|---|---|
| பெற்றகமை | வான | பேறும் | உயிர்க்கணம் | |
| எல்லாம் | தழைக்கும் | இயல்பும் | வலிமை | |
| வருணன் | வலிமையே | வலிமை | யாம்என | |
| வளமை | மிக்க | வாழ்வு | மல்கி | |
| என்றும் | யென்றும் | ஏற்றம் | துலங்கும் | |
| சீரும் | வருணன் | சிறப்பே | யென்று | |
| மகிழ்வு | பொங்க | வாழ்த்தும் | வண்ணம் | |
| சீர்பெற்ற | கமையும் | சித்தி | துலங்கும். | (௨௱௧) |

**பண் : சாதாரி**

| | | | | |
|---|---|---|---|---|
| தாரி | சார்திரி | தருசா | தாரிப் | |
| பண்கதி | கொள்ளும் | பாத | யுகளம் | |
| ஒன்றிந் | துளமும் | ஒன்று | வெம்மை | |
| பாயி | ரவியாம் | பயிரவி | யாகவும் | |
| இவ்விரு | காலொன் | றியைமுக் | காலும் | |
| ஆக | வமைவு | பெற்றன | போன்று | |
| வாயு | வாந்தே | வமைவும் | துத்தம் | |
| கைக்கிளை | கொள்ளக் | காணும் | ஒலியும் | |
| பெயராது | பற்றும் | பிராப்தியாங் | கலையும் | |
| மந்திர | வுருவ | மாங்கட் | டளையும் | |
| அலைந்து | திரியாத | மைவுறு | தொழிலும் | |
| துலங்கச் | சியவயசி | தோன்றி | நிற்கும் | (௨௱௨) |
| சார்ந்து | நடைகொள் | சாதா | ரணமாம் | |
| இரவி | மதியாம் | இரண்டும் | நிலையாம் | |
| வருண | கும்பகம் | வாய்க்கப் | பெற்றதால் | |
| சலன | மில்லாத | தன்மை | யடையும் | |
| அதனல் | நாம | ஆவளி | யனைத்தையும் | |
| கவித்து | விஞ்சுதல் | காட்டும் | விஞ்சை | |
| ஆக | அ.இ.உ | ஆம்நெடில் | நின்று | |
| மந்திர | விஞ்சைநா | மாவளி | யாகிச் | |
| சொன்மல | ரெல்லையாய்த் | தோன்றும் | ஒன்பான் | |
| உபதச | எல்லையில் | ஒன்று | கூட | |
| லாக | நூற்றெட் | டாகி | விஞ்சை | |





| | | | | |
|---|---|---|---|---|
| மந்திர | நாம | மாம்ஆ | வளியாய் | |
| உருபெற் | றனைத்தையும் | உதவும் | ஆற்றல் | |
| பெற்றுரு | வேற்று | வோர்பெறற் | கரும்பேறு | |
| அனைத்தையும் | தந்தமை | வாக | நிற்கும் | |
| பிராப்தியாம் | சித்திப் | பேறு | நல்கும் | (௨௱௩) |

**பண் : புறநீர்மை**

| | | | | |
|---|---|---|---|---|
| புறநீர் | மைப்பண் | புட்பகம் | பெற்று | |
| வெளியில் | வழிகொள் | வேந்தாம் | குபேரன் | |
| எனப்பண் | சீர்கொண் | டிளகுரல் | கொள்ளும் | |
| ஒலியும் | ஈசற் | குற்ற | தோழனும் | |
| ஒருவன் | என்ன | வோது | கட்டளையும் | |
| புறத்துமுன் | நீர்மை | பொருந்து | கலையும் | |
| செம்பா | லேய்தரு | திறமாம் | உருவும் | |
| இருநிதிக் | கொருவனுய் | இலங்குன் | னதமாம் | |
| தொழிலும் | வயசியவ | தோன்ற | நிற்கும் | (௨௱௪) |
| தாரி | யதனிற் | சார்ந்து | சாதாரணம் | |
| ஆய | காற்றிரம் | ஆக | வமைந்து | |
| மந்திர | மாகிய | வாறது | போலப் | |
| புறத்தும் | அந்நீர்மை | பொருந்தும் | வண்ணம் | |
| செய்ய | உயிர்ப்பூ | சிவமல | ராகி | |
| வாடா | மலராய் | வளர்புட் | பகமாய்ப் | |
| பேரா | வாழ்வு | பெறுநற் | குபேர | |
| வாழ்வு | தந்து | வளிரு | நிதியும் | |
| சிறக்க | இறைவன் | சேவை | சாதித் | |
| தருளி | இயந்திர | மதினிலை | கொள்ளும் | |
| தகவால் | வந்து | தரிசனம் | செய்து | |
| பூசனை | யான | புரிவோர் | புகழ்வோர்க் | |
| கிஷ்ட | சித்திகள் | எல்லாம் | தந்து | |
| ஈசத் | துவசித் | திலங்க | நிற்கும் | (௨௱௫) |

**பண் : அந்தாளிக்குறிஞ்சி**

| | | | |
|---|---|---|---|
| அந்தம் | தந்தாள் | அம்தாள் | என்னக் |
| குறிக்கும் | சீர்த்திறம் | கூறும் | அந்தாளிக் |

| | | | | |
|---|---|---|---|---|
| குறிஞ்சிப் | பண்ணிற் | குறுங்கலித் | திறமும் | |
| கொண்டிரண் | டொன்றுய் | நின்ற | ஈசானன் | |
| எனக்கட் | டளையொன் | றியையப் | பெற்று | |
| ஒரேகுறிக் | கோளாய் | ஒத்த | யாழிசைக் | |
| குறிஞ்சி | யொலியுங் | கொண்டு | பரவும் | |
| குறுகிய | கலியாய்க் | கூறுங் | கலையும் | |
| இருபதம் | ஒருமைகொண் | டிலங்கும் | உருவும் | |
| நீயே | நானுய் | நிலைகொண் | டொடுங்கும் | |
| தொழிலும் | புரியெனத் | துதித்தலுங் | கொள்ள | |
| யசிவசிய | எனும் | அக்கரம் | நிற்கும் | (உ௰௬) |
| இரண்டொன் | றுய்ச்சரி | யியைபு | கொள்ளப் | |
| பண்பெயர்க் | குறிப்பும் | பண்ணுந் | திறமும் | |
| ஒருகுறிக் | கோள்கொள் | ஒத்தா | ழிசையும் | |
| இருபதத் | தொருமைகொண் | டேத்து | மியலும் | |
| அமையப் | பண்ணிசை | யாக்கித் | திருமணங் | |
| காண | வந்த | கணங்கள் | அனைத்தும் | |
| அருட்பெருஞ் | சோதி | யதனுட் | கலக்கத் | |
| தனிப்பெருங் | கருணை | தந்து | நின்று | |
| சிவசுட | ரொளிருஞ் | செய்கை | காட்டி | |
| ஓதுவிக்கும் | பொருட் | டோதியும் | ஏக | |
| நாயக | ஞர்மணம் | நமைவேட் | பிக்க | |
| வேட்டல் | தான்கொண் | டும்விளங்கு | சிவசுடர் | |
| அதனிற் | கலந்தெல்ல | வர்க்கும் | இன்பம் | |
| ஈதல் | பொருட்டாங் | கிருவினை | யதனை | |
| ஏற்று | நின்றும் | இவ்வாறு | தொழில் | |
| செய்து | நின்ற | திருஞான | சம்பந்த | |
| மூர்த்திவாழ் | சித்தாய் | மூவுலகுந் | தொழ | |
| வளரருட் | பிரகாச | வள்ள | லாராய் | |
| நாயகி | யொடு | நம்நாயகர் | சோதியில் | |
| ஒன்றிக் | கலந்தாங் | கொடுக்கங் | காண | |
| நிறைவு | பெறவிதும் | நிறைவு | பெற்றது | (உ௰௭) |

குரோதன ஸ்ரீ ஆவணி மீ ௰௩ உ





அரி ஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

## குறிப்பு :

உயிராகிய விட்டணு
(உயிராகிய அ)

க ............ பெயர்
உ ............ வரம்பு
௩ ............ புணர்ப்பு
௪ ............ சார்பு
௫ ............ அளவு
௬ ............ எண்
௭ ............ பொருள்
௮ ............ அஃதல்
௯ ............ தோன்றல்
௰ ............ திரிதல்
௰க ........ விகாரம்
௰உ ........ கெடுதல்

ஈண்டு கூறப்பெற்ற பன்னிரண்டு கலையாகிய பன்னிரண்டு திருநாமங்களைக் கொண்டு விண்டுவாகிய உயிர் நிற்பது போலவே அகரமாகிய உயிரும் இங்கு கூறப்பட்ட பன்னிரண்டைக் கொண்ட எட்டாக நிற்பது காண்க. அ = 8.

### அகரம் எட்டெனும் லக்கமாயும் அ = 8

| | | | |
|---|---|---|---|
| க | எதிர்மறை | = | அ. சரம் |
| உ | சுட்டு | = | அ. அது |
| ௩ | ஒலி | = | அ அ அ |
| ௪ | மெய்யுயிரக் கலப்பு | = | சரவணம் |
| ௫ | ஒத்திற்றிரிபு | = | அ அ |
| ௬ | உணர்விசை | = | அ |
| ௭ | சொல் | = | ஆ |
| ௮ | உடன்பாடு | = | அ |

### ஆய் அதங்கொள்ளும் ஆயுதம் ௫

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| க | தருவாகிய மெய் | = | சரம் | - | ஊ | - | ல்ஃச |
| உ | சாங்காகிய வாய் | = | ஆவி | - | ஹ | - | ஃக |
| ௩ | வாளாகிய கண் | = | பூதம் | - | ள | - | ஃல |
| ௪ | தண்டாகிய மூக்கு | = | அச்சு | - | க்ஷ | - | க்ழ்ஃச |
| ௫ | சக்கரமாகிய காது | = | சுரம் | - | ஷ | - | ழ்ஃச |

## நூல்கள் அமைப்பு

| | | |
|---|---|---|
| கனி | - | திருப்புகழ் |
| மலர் | - | அநுபூதி |
| காய் | - | விருத்தம் |
| மா | - | வகுப்பு |
| விளம் | - | அந்தாதி |
| நாள் | - | அலங்காரம் |

..............

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| **துவிதம்** | - | இராமாயணம் | | | | |
| **கலை** | - | பிரமகைவருஅத்தம் | - | பாகவதம் | - | பூவிடயம் |
| **நாதம்** | - | காந்தம் | - | நாரதீபம் | - | ஆக்கினேயம் |
| **யோகம்** | - | காருடம் | - | கூர்மம் | - | வராகம் |
| **வேதம்** | - | மார்க்கண்டேயம் | - | பிரமம் | - | பதுமம் |
| **போதம்** | - | சைவம் | - | மச்சம் | - | வைணவம் |
| **சித்து** | - | பிரமாண்டம் | - | வாமனம் | - | லிங்கம் |
| **அத்துவிதம்** | - | மகாபாரதம் | | | | |



உ

சிவமயம்

அரி ஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

மகத்துவம் பொருந்திய
அகத்திய முனிவர்



இந்நூலின் அவசியம் பற்றி,

**குறிப்பறிந் தேனுட லுயிரது கூடிச்**
**செறிப்பறிந் தேன்மிகு தேவர் பிரானை**
**மறிப்பறி யாதுவந் துள்ளம் புகுந்தான்**
**கறிப்பறி யாமிகுங் கல்விகற்றேனே**

என்பது ஆகமச் செம்மல் திருமூலர் திருமந்திரம். திருமூலர் வழிவந்த எம் ஞானத்தெளிவு குரு திருமூலர் கற்ற கல்வி பயின்று அகத்தியம் ஆக்கியிருக்கின்றுர்கள்.

என்றும் இனிமைதரும் அமிழ்த அறிவியல் தமிழாகிய தேவாரம், திருவாசகம், புராணம், ஆகமம் நூல்களில் அடங்கியிருக்கும் அதிநுட்பத்தினை அறிய அகத்தியம் அவசியம் வேண்டும். இயற்கையின் அற்புதத்தை அறிய அகத்தியம் வேண்டும். மனிதன் நடுநிலை நாட அகத்தியம் வேண்டும். இறைவனேடு ஒன்றியிருந்த நாம் மண்ணுலகத்தில் பிறந்துழலும் தன்மைநீங்க அகத்தியம் வேண்டும். எந்த ஜென்மம் ஆனுலும் எழுத்து முந்தி தோனும் என்னும் அதி அற்புத நுட்பத்தை அறிய கலாந்தம் ஆகிய அகத்தியம் வேண்டும். எண்ணும் எழுத்தும் கண்ணெத் தகும் என்பதை அறிய அகத்தியம் வேண்டும். தொல்காப்பியம், நன்னூல் போன்ற தமிழ் இலக்கண நூலிற்கு எல்லாம் முந்தைய ஆதி இலக்கண நூல் அகத்தியம் என்பதை அறிய வாசிக்க வாசிக்க வரும் மோனத்தின் மூலம் அறியலாம். "தமிழே சிவம்" என்பதனை அமிழ்த அறிவியல் தமிழ் இலக்கண நூலாகிய அகத்தியம் தன்பால் கொண்டுள்ளதை சிவபுண்ணிய சீல மெய்யன்பர்கள் வாசிக்க வாசிக்க மோன இன்பத்தை அனுபவிப்பார்கள் என்பது திண்ணம். இந்நூல் மூலமும் உரையுமாக மாதவம் செய்த மக்கள் பயன் பெறுவதற்கு இறையருள் கூட்டுவித்ததை எண்ணி எண்ணி மகிழ்கின்ருேம்.

இவண்

**முத்தமிழ்வேதத் திருச்சபையார்**

இராம. ஆதிரெத்தினம் பிசு. இசக்கியப்பன்

சிவ. கார்த்திக் கா. சிவலிங்கம் தொ. மகாலிங்கமூர்த்தி